# பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை

திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளை

(இளவழகனார்)

எழுதியது








ல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: :: சென்னை - 1.

கழக வெளியீடு-௫௦௦

# பண்டைத்தமிழர்
# பொருளியல் வாழ்க்கை


கழகப் புலவர்

திரு. தி. சு. பாலசுந்தரம் பிள்ளையவர்கள்

(இளவழகனார்)

எழுதியது





:: திருநெல்வேலி, தென்னிந்திய ::

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி & சென்னை.

# பதிப்புரை

உலகந் தோன்றி மக்கள் வசித்தற்குத் தகுதியுடைய தாந் தன்மை எய்தியபின், இஞ்ஞான்று உலகின் பல பாகங்களிலும் பரந்து காணப்படும் மக்கள் வகுப்பினரின் முன்னோர், ஒரே வகுப்பினராய் உலகின் ஓரிடத்தேயே தோன்றினார்கள் என்பது ஆராய்ச்சியாளரின் துணிபு. அம்மக்களின் தோற்றத்திற்குக் காரணமாயமைந்த இடம் நம் தமிழ் நாட்டிற்குத் தெற்கேயிருந்ததாய்க் கடலின்கண் மூழ்கிய மிகப் பெரிய நிலப்பரப்பென்பதும், அதன்கண் வசித்தோர் தமிழ் மக்களே என்பதும், அந்நிலப்பரப்பின் எஞ்சிய பாகமே நந்தமிழ் நாடும் மற்றும் தமிழ் நாட்டை அடுத்துள்ள சிறியனவும் பெரியனவும் ஆன பல தீவுகளு மென்பதும் அவ்வாராய்ச்சியாளர் பலரின் முடிபு. இவ் உண்மையைத் தமிழ்ப்பணியே பூண்ட நாவாலியூர் திரு. ந. சி. கந்தையாப் பிள்ளை யவர்களால் எழுதப்பெற்று, எம் மால் வெளியிடப்பட்ட "தமிழ் இந்தியா" என்ற நூலிலும் பரக்கக் காணலாம்.

பண்டைத் தமிழர் வாழ்க்கை முறையினை யுணர்த்தும் சங்க காலத்து விளங்கிய தமிழ் இலக்கியங்களும் இலக் கணங்களும் இவ்வாராய்ச்சியாளரின் துணிபை மேலும் வலியுறுத்துவனவாய் அகச் சான்றாய் அமைகின்றன. இவ் விலக்கிய இலக்கணங்களினின்றும் அறியலான பண்டைத் தமிழரின் அக ஒழுக்கமாகிய காதல் வாழ்க்கையின் தன்மை யினைப் "பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை" என்ற, இக்கழக வெளியீடாக அமைந்த நூல் விளக்கி நின்றது.

இனி, அகத்தே உணரப்படும் இக்காதல் ஒழுக்கத் தைப் போலாது, மக்கள் புறத்தே யாவர்க்கும் புலனாக நிகழ்த்தும் ஒழுக்கம் அறம், பொருள் என்ற இரண்டின் இயல்பினை யுடைத்தாய் நிகழும். இப்புற வொழுக்கத்தைக்

கூறும் தொல்காப்பியம் என்னும் சீரிய இலக்கணம் முற் காலத் தமிழ் மக்கள் அறம் பொருள் காரணமாக மேற் கொண்ட போர் வரலாற்றை மிகுதியும் விரித்து விளக்கு கின்றது. மக்களின் புறவாழ்க்கையில் வீரமே சிறந்து தோன்றுவதன்றோ? மற்றை வாழ்க்கைப் பகுதிகளும் இந் நூலின்மாட்டுக் கூறப்படுகின்றன.

இத்தகைச் சிறந்த இலக்கண நூலையும், மற்றைப் பழங்கால சங்க இலக்கிய நூலையுங் கருவியாகக் கொண்டு, அப்பழந் தமிழ் மக்களின் புற ஒழுக்கமாகிய உலகியல் வாழ்க்கையைக் கூறுவதாகும், "பண்டைத் தமிழர் பொரு ளியல் வாழ்க்கை" என்ற இந்நூல். இப்பொருளே பற்றிச் செந்தமிழ்ச் செல்வியில் தம்மால் எழுதப்பெற்றுக் கட் டுரைகளாக வெளி வந்தவற்றைத் தொகுத்து, அரிய திருத் தங்களுடன் கழகப் புலவர் திருவாளர் இளவழகனார் அவர் களால் செப்பஞ் செய்யப்பட்டு, ஆக்கப்பெற்றது இது. இந்நூலைப் பயில்வார், மக்கள் தோற்றத்திற்குக் காரண மாய் இருந்த தமிழ் மக்களிடை அவ்வியல்புக்குத் தக்க வீரமே செறிந்திருந்த தன்மையினையும், அவ்வியல்புக்குத் தக்க மற்றை வாழ்க்கை வரலாற்றையும் உணர்வர்.

முற் கூறப்பெற்ற "பண்டைத் தமிழர் இன்பியல் வாழ்க்கை" என்ற நூலோடு ஒருங்கு வைத்து எண்ணப் படும் இந்நூலைத் தமிழ் மக்கள் போற்றி, எங்களை ஊக்கு வார்கள் என்னுந் துணிபுடையோம்.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்


| எண் | | பக்கம் |
|---|---|---|
| க. வெட்சித் திணை | ... | 1 |
| அகமும் புறமும் | ... | 2 |
| பொருவோர் அறன் | ... | 4 |
| வீரத் திறம் | ... | 5 |
| ஆனிரை கோடல் | ... | 6 |
| படை யியங்கு அரவம் | ... | 7 |
| நற்சொல் கேட்டல் | ... | 9 |
| கேட்கு முறை | ... | 12 |
| நற்சொல் கேளாமலும் முனைதல் | ... | 14 |
| ஒற்றுக் கேட்டல் | ... | 15 |
| நிரை காவலாது போர் | ... | 16 |
| இடைவழிப் போர் | ... | 17 |
| உண்டாட்டுங் கொடையும் | ... | 18 |
| வள்ளிக் கூத்து முதலியன | ... | 18 |
| நூல்களின் இணக்கம் | ... | 20 |
| ஆ கோடலுக்குரிய பொழுது | ... | 21 |
| உ. கரந்தைத் திணை | ... | 23 |
| கரந்தை யொழுக்கம் | ... | 24 |
| துறை விளக்கம் | ... | 24 |
| புறத்திணை அகத்திணைகளின் இயைபு | ... | 27 |
| புலனுணர்ச்சியும் உயிருணர்ச்சியும் | ... | 31 |
| திணை வழு | ... | 34 |
| வெட்சியும் குறிஞ்சியும் | ... | 37 |
| ங. வஞ்சித் திணை | ... | 39 |
| வஞ்சித் திணையின் பொருள் வரம்பு | ... | 40 |
| சில நிகழ்ச்சிகள் | ... | 41 |
| துறைப் பிரிவுகள் | ... | 46 |
| பாசறை இருப்பு | ... | 51 |
| வஞ்சியும் முல்லையும் | ... | 53 |
| ச. உழிஞைத் திணை | ... | 55 |
| உழிஞைப் பொருள் | ... | 56 |
| அரண் அமைப்பு | ... | 58 |

| | | |
|---|---|---|
| அதன் அருமை | ... | 60 |
| உழிஞைப் பொருள் வரம்பு | ... | 66 |
| உணர்ச்சியும் செயலும் | ... | 68 |
| வெற்றி | ... | 71 |
| ரு. நொச்சித் திணை | ... | 72 |
| நொச்சி யொழுக்கம் | ... | 73 |
| இடம் | ... | 75 |
| காலம் | ... | 76 |
| பொருள் | .. | 76 |
| வாயிலடைப்பு | ... | 77 |
| முத்தொழில் முனைப்பு | ... | 78 |
| வெம்மை யியல்பு | ... | 79 |
| கண்ணொளி | ... | 81 |
| அறியாமை நீக்கம் | ... | 81 |
| அறிவுப்பேறு | ... | 82 |
| சு. தும்பைத் திணை | ... | 83 |
| போர் ஒழுக்கம் | ... | 85 |
| துறை வகுப்பு | ... | 86 |
| கருவிப் போர் | ... | 90 |
| மற்போர் | ... | 90 |
| ஆடுதலும் பாடுதலும் | ... | 92 |
| கள வேள்வி | ... | 93 |
| ஏனைய விரிந்த துறைகள் | ... | 94 |
| அகமும் புறமும் | ... | 95 |
| பொழுதுகள் | ... | 96 |
| இரக்க உணர்ச்சி | ... | 104 |
| நுணுகிப் பொருந்துதல் | ... | 105 |
| எ. வாகைத் திணை | ... | 107 |
| வெற்றி நிலை | ... | 108 |
| வாகை யுண்மை | ... | 109 |
| ஏனையோர் தொழில் மரபுகள் | ... | 112 |
| துறை விளக்கம் | ... | 116 |
| வாகையின் வகை | ... | 118 |
| புறமும் அகமும் | ... | 120 |

அ. காஞ்சித் திணை ... 124
திணைப் பொருள் ... 125
துணைப் பகுப்பு ... 127
துறைப் பகுப்பின் காரணம் ... 131
௯. பாடாண்டிணை ... 133
பாராட்டு ... 134
பாட்டின் இயல்பு ... 135
முற்காலப் புலவர்கள் ... 136
பிற்காலப் புலவர்கள் ... 138
பாடாண்டிணை ... 141
தேவ பாடாண்டிணை ... 146
மக்கட் பாடாண்டிணை ... 154
துறைப் பகுப்பு ... 154
புறமும் அகமும் ... 156
௧௦. பொதுவியற்றிணை ... 157
பொதுவியற்பால ... 158
சிறப்பிற் பொதுவியற்பால ... 163
காஞ்சிப் பொதுவியற்பால ... 164
முல்லைப் பொதுவியற்பால ... 165
பொதுவியற் படலம் ... 167
௧௧. கைக்கிளைத் திணை ... 169
திணைப்பொருள் ... 170
வகை ... 170
சிறப்பு ... 172
கைக்கிளையும் ஐந்திணையும் ... 173
நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் ... 177
அகப்புறமும் அகம் ... 179
௧௨. பெருந் திணை ... 181
விளக்கம் ... 182
காமமும் காதலும் ... 183
காமக் காமமும் காதற் காமமும் ... 184
துறையுறுப்புக்கள் ... 186

## திரு. இளவழகனார் எழுதிய நூல்கள்

| | | | |
|---|---|---|---|
| ஔவையார் திருவுள்ளம் | | | |
| அதிவீரராமர் அறநெறி | | | |
| சிவப்பிரகாசர் செந்நெறி | | | |
| சங்கநூற் கட்டுரைகள் *முதற் புத்தகம் கலிக்கா* | 1 | 12 | 0 |
| ,, *இரண்டாம் புத்தகம்* ,, | 2 | 0 | 0 |
| சங்க இலக்கிய இன்கவித்திரட்டு | | | |
| *முதற் புத்தகம்* | 3 | 0 | 0 |
| ,, *இரண்டாம் புத்தகம்* | 3 | 0 | 0 |
| ,, *மூன்றாம் புத்தகம்* | 3 | 0 | 0 |
| பண்டைத்தமிழர் இன்பியல் வாழ்க்கை | 2 | 8 | 0 |

---

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
6, *பவழக்காரத் தெரு, சென்னை.*

பண்டைத்தமிழர்

# பொருளியல் வாழ்க்கை

## 1. வெட்சித் திணை

[பகைநாட்டின்மேற் போர் தொடங்கும் அரசன் ஆன் முதலிய தீநற்ற உயிர்களை அந்நாட்டினின்று அப்புறப்படுத்துங் கால், தாமே அறிந்து வெளியேறுதல் இயலாத ஆக்களைத் தன் படைமறவரை ஏவித் தன் நாட்டுக்குக் கொண்டுவருதல்.]

*கொடுவரி கூடிக் குழூஉக்கொண் டனைத்தால்*
*நெடுவரை நீள்வேய் நரலும்—நடுவூர்க்*
*கணநிரை கைக்கொண்டு கையகலார் நின்ற*
*நிணநிரை வேலார் நிலை.*

—புறப்பொருள் வெண்பாமாலை, 1: 6.

'உயர்ந்த மலைகளில் வளர்ந்துள்ள நீண்ட மூங்கில்கள் ஒலிக்கும் சீறூரின் நடுவில் திரண்ட பசுக்களைக் களவிலே கைப்பற்றிக்கொண்டு அவ்விடத்தை விட்டு நீங்காராய்க் கொழுப்புக் கறை ஏறிய வேற்படையை யுடைய வீரர்கள் நின்ற நிலை, புலிகள் தம்மில் ஒன்றுகூடித் திரட்சி கொண்ட தன்மையை யொத்திருந்தது.'

கொடுவரி - 'வளைவான வரிகளை யுடையது' என்னும் பொருளினால் ஆகுபெயராய்ப் புலியை யுணர்த்தும். ஆல் - அசை. நடு ஊர் - ஊர் நடு. கணநிரை என்பதில், நிரை-பசு;

இதனைக்,

> " கோவே பெற்றம் நிரைகுடம் சுட்டுத்
> தேனுசுரை பத்திரை கபிலை சேதா
> ஆவே சுரபி ஆன்பசு வாகும்." *

என்னும் பிங்கலந்தையிற் கண்டுகொள்க. கையகலல், ஒரு சொல்; இஃதிங்கு 'இருந்த இடத்தை விட்டு நீங்குதல்' என்னும் பொருளில் வந்தது. 'நிண நிரை வேல்' என்றது, 'முழுதும் நிணக்கறை வாய்ந்த வேல்' என்றற்கு. இங்கு 'நிரை 'யென்றது 'வேன் முழுமையும்' என்பதைக் குறிக்கும். திரண்ட பசுக் கூட்டங்களே புலிகளின் திரட்சிக்கு உவமையாகு மெனினும், இங்குப் போரிடுதற்கும் பின்வாங்காது முனைத்து நிற்கும் வீரர்களின் போர் முனைப்புப் புலியின் தன்மைக்கு ஒத்தலால், போர்வீரரின் குழுவுக்கே இங்குப் புலித்திரள் உவமையாயிற்று. இஃது அரசன் கட்டளைப்படி பகைவரூர் சென்று அவர்தம் பசுக் கூட்டங்களைக் கவர்ந்துகொண்டு ஆங்கே ஆண்மையுடன் உள் கலங்காது நிற்கும் போர்மறவரின் நின்ற நிலை கூறிற்று. இங்ஙனம் இம் மறவரே 'கூற்றினத் தன்னா' † என்று மேலுஞ் சிறப்பிக்கப்படுதல் காண்க.

அகமும் புறமும் :

உயிர்கட்கு அகத்தே எழூஉம் எல்லா எண்ணங்களும் புறப்பொருள்களின் தொடர்பில் இயைந்து காணப்படுகின்றன. அவற்றுட் சில அப் புறப்பொருள்களை நேரே பற்றிய எண்ணங்களாகவும், மற்றுஞ் சில அந் நேரெண்ணங்களின் விளைவான வேறெண்ணங்களாகவுந் தோன்றுகின்றன. கவர்ச்சி மிக்க ஓரருமையான பெண்ணுடம்பினைக் கண்டதும் அவ்வுடம்பின் அழகைப்பற்றிய எண்ணம் நேரே உண்டாகின்றது. பின்னர் அவ்வழகைப்பற்றிய எண்ணத்தின் விளைவாக அன்பென்னும் வேறெண்ணம் விளைகின்றது. அழகை யுணரும் எண்ணத்தினும் அன்பை

---

* பிங்க. அ: கசஅ. † புறப்-வெ. க: ரு.

யுணரும் எண்ணம் நுட்பம் வாய்ந்தது. எனினும் அவ்வன் பெண்ணமும் உடம்பென்னும் புறப்பொருளின் தொடர்பு கொண் டெழுந்த தென்பது மறுத்தற்கியலாததாகும்.

தண்டமிழ்த் தொல்லாசிரியன்மார் உயிர்க்கு வேறாகக் கொள்ளப்படும் பொருள்களைப் புறப்பொருளென்றே உணர்ந்தனராதலின், உயிர்கட்கு விளையும் எண்ணங்களும் புறப்பொருள்களின் தொடர்புடையனவா மென்பது நன்கு விளங்கும். புறப்பொருள்களைப்பற்றி இவ்வாறு எழூஉம் நினைவுகளில் நேரே விளையும் எண்ணங்களை யெல்லாம் புறப்பொருளிலக்கணத்திலும், அவ்வெண்ணங்களின் விளை வான வேறு நுட்ப உணர்ச்சிகளையெல்லாம் அகப்பொரு ளிலக்கணத்திலும் ஆசிரியன்மார் பகுத்தடக்கி உரைகிளந்த னர். உயிரியல்பினும் புறப்பொரு ளியல்பு வல்லிதா யிருத் தலால், அப் பொருளின் தொடர்பான நினைவுகளும் வல் லிய இயல்பு வாய்ந்தனவாய்த் தோன்றும். அறிவுள்ள உயிரினியல்பு மெல்லிதாயிருத்தலால், அவ் வகப்பொரு ளின் தொடர்பான நினைவுகளும் மெல்லிய இயல்பு வாய்ந் தனவாய் விளங்கும். எனவே பொருள் தேடும் வேட்கை யான் புறப்பொருள்கள்பாற் செறிவு நிகழ்ந்து வல்லிய நினைவுகள் விளைதலின், அவ் வல்லிய நினைவுகட்கும் அவற் றின் வழியவான சொற்செயல்களுக்கும் முதன்மையவான போர் நினைவுகளையும் அவற்றைப் பற்றிய சொற்செயல்களை யும் புறப்பொரு ளிலக்கணத்தில் எடுத்து விரித்துரை கிளப்பது பொருளாசிரியன்மார் மரபு. அவைதம்மிற் புறத்தே காணப்படும் பொருள்கள் பலவற்றின் நுண்ணிய லாராய்ச்சியும் விரிக்கப்படும். ஆதலால், இங்குப் புறப்பொரு ளிலக்கண வாராய்ச்சிக்கு எடுத்துக் கொள்ளப்படுங் கருத் துப் பெரும்பான்மையும் போர் முறைகளேயாம். இனி அவற்றை யொட்டி இயல் பொருள்களின் நுட்ப வாராய்ச் சியும் அவைதாம் அகப்பொரு ளிலக்கணத்திற்கு ஒத்து உதவியாய் நிற்குமாறும், அவற்றைப்பற்றிப் பழைய பொரு ளாசிரியன்மார் பெரிதாராய்ந்துரைக்கும் கருத்து நுட்பங் களும் இக் கட்டுரைகளில் மலைவு நிகழாவண்ணம் இயன்ற

வளவு தெளிவாய் எடுத்து விளக்கப்படும். போர் நிகழ்ச்சி கட்கு உரியார் பொருட்பேறு வல்ல அரசியன் மக்களாத லால், அவரே இப் புறப்பொரு ளிலக்கணத்திற்குக் காட் டாகக் கொள்ளற்பாலார்.

## பொருவோர் அறன் :

அரசர்தம்முள், நிலங் கவரல் வேண்டுமென்னும் மண் வேட்கை முதலிய ஏதுக்களால் இகல் விளையும். இகல் விளையவே அவர்தமக்குட் போருண்டாகும். மண் வேட்கை மிக்க அரசனே முதலிற் போர் தொடங்குவான். தொடங்குகின்றவன், வேற்றரசன் உள்ள அயல்நாடு சென்று பொரல்வேண்டுமாதலின், முதலில் அவன் அவ் வயல்நாட்டகத்து வாழும் அறவோர் பெண்டிர் ஆன் முதலியோரை அந்நாட்டினின்றும் அப்புறப்படுத்துவான். ஏனென்றால், அவரெல்லாரும் பொருள் நெறியின் நோக்க மின்றி அறநெறி வாழும் அருநிலையாராதலால், அவர்க்குத் தீங்கு செய்தலாகாதென்பது அரசன் கருத்து. பகையும் போரும் மிக்கு ஒரு நாட்டகத்து வீரக் குடிமக்கள் அரச னொடு மயங்கி ஆண்மையொடு பொருது ஆங்குக் காணும் எல்லாத் துன்பங்களையும் ஏற்றுநிற்ப ராதலால் அந்நாட் டின்கண் அறவோராய் வாழ்வாரும் அங்ஙனம் அத்துன் பத்தை ஏற்று நிற்றல் ஆகாதாமென்று பண்டைத்தமிழர் கருதி அவரை அப்புறப்படுத்துவாராயினர். பழமை தொட்டே இவ்வழக்கம் நந் தமிழகத்தில் உண்மை,

> [1] "ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்
> பெண்டிரும் பிணியுடை யீரும் பேணித்
> தென்புல வாழ்நர்க் கருங்கட னிறுக்கும்
> பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்
> எம்மம்பு கடிவிடுதும் நும்மரண் சேர்மினென
> அறத்தாறு நுவலும் பூட்கை மறத்தின்" *

---

1. பேணி - பாதுகாத்து. இறுக்கும் - செலுத்தும். கடி - விரைவாக. பூட்கை - கோட்பாட்டையுடைய.

* புறநானூறு, கூ.

என்னும் புறநானூற்றுப் பழம் பாட்டினுல் நன்கு விளங்கும். ஆசிரியர் நச்சினுர்க்கினியரும் "இருபெரு வேந்தர் பொருவது கருதியக்கால் ஒருவர் ஒருவர்நாட்டு வாழும் அந்தணரும் ஆவும் முதலிய தீங்கு செய்யத்தகாத சாதிகளை ஆண்டுநின்றும் அகற்றல்வேண்டிப் போதருகவெனப் புகறல்"* என்று தொல்காப்பியப் புறத்திணையியலில் உரை கூறினுர்.

**வீரர் திறம் :**

அரசன் இவ்வாறு அறவோர் முதலியோரை அப்புறப் படுத்தும் பொழுது அவர்தாம் வேறிடம் தமக்கு அரண் காணுராயின், அவரைப் போர்மேல் விரைந்த அரசன் தன் நாட்டகத்து வருவித்து நாளும் பாதுகாத்து வருவான். அங்ஙனம் வருவித்தலில் தாமே உணர்ந்து வருதற்கேற்ற அறிவில்லாத ஆன் கூட்டங்களை அரசன் தானே தன் போர்மறவரை ஏவிக் கைப்பற்றிக் கொணர்வான். அரசன் ஏவுதலின்றியே அவன் கருத்தறிந்து போர்மறவர் தாமே சென்று வேற்றரசரின் அயல்நாட்டகத்து ஆன் நிரையைக் கைக்கொண்டு மீளலும் உண்டு. அரசன் ஏவல் பெற்றுச் செய்தல் 'மன்னுறு தொழி' லென்றும், அவன் ஏவல் பெறுமற் போர்மறவர் தாமே யுணர்ந்து செய்தல் 'தன்னுறு தொழி' லென்றும் புறப்பொருள் வெண்பாமாலை,

[1] "வென்றி வேந்தன் பணிப்பவும் பணிப்பின்றியும்
சென்றுஇ கல்முனை ஆதந் தன்று"†

என்னுங் [2]கொளுவினுல் விளக்கங்கூறும். இத் தன்னுறு தொழிலென்னுஞ் செய்தியினுல், வீரர்குழுவினர் அரசனது நோக்கத்தினளவினராய் நின்று அவன் கருத்து யாது என்று ஆராய்தலிலேயே தமது நினைவை முழுதும்

---

1. இகல் முனை - பகைப்புலத்தில். ஆதந்தன்று - ஆனிரையைக் கைக்கொண்டது.

2. கொளு - கருத்துரைக்கும் நூற்பா.

* தொல். புறத். உ.

† புறப் - வெ. க.

நிறுத்தி, அதன்கண் அவ்வரசனினும் மிக்க தீவிர முடைய ராய்ப் பண்டு நிகழ்ந்தன ரென்பது இனிது விளங்கும். பண்டைத்தமிழரசரின் வீரக்குடியினர் தமது கடமையை எவ்வாறு ஆற்றினார்களென்பதற்கு இஃதொரு சிறந்த சான்றாகும்.

[1] "வெங்குருதி மல்க விழுப்புண் உகுதொறூஉம்
இங்குலிகஞ் சோரும் வரையேய்க்கும்—பைங்கண்
இனம்போக்கி நின்றார் இகல்வாட்டி **வேந்தன்**
**மனம்போல வந்த மகன்.**"*

என்று புறப்பொருள் வெண்பாமாலையிலேயே மேற் கரந்தைப் படலத்தில் பண்டைத் தமிழ்வீரன் 'வேந்தன் மனம் போல வந்த மகன்' என்று சிறப்பிக்கப்பட்டிருத்தல் காண்க. "யான்கண்டனையர் என் இளையர்"† என்று புறச் செய்யுளிற் கூறியிருத்தலும் உற்றுநோக்கற்பாலது.

## ஆனிரை கோடல் :

இத்துணை நுட்பமாய் அரசன் கருத்தினை முன்னறிந்து தொழில் செய்வாரான போர்வீரர் இனிப் பகையரசர் நாடு சென்று ஆன் நிரை கவர்வர். பகைப்புலத்து ஆன் நிரை கொள்ளும் இவ்வாண்மையறச்செய லொழுக்கமே 'வெட்சித்திணை' யென்னுஞ் சொல்லாற் புறப்பொருளிலக்கண நூல்களிற் கூறப்படுவதாகும். இவ் வெட்சித்திணைக் கருத்துக்களை முன்பின் னாசிரியன்மார் தத்தம் நூல்களுக்கேற்ப வகைப்படுத்திக்கொண்டு விளக்கிய அரிய நுண் முறைகளும், இப் புறத்திணைப்பொருள் தனக்கு அகமாய் விளங்கும் அகத்திணைக் கருத்தொடு நுணுகிப் பொருந்தி மாறின்றி நிற்கும் உண்மைகளும் அடுத்த 'கரந்தைத் திணை'க் கட்டுரையில் விளக்கிக் கூறப்படும்.

---

1. விழுப் புண் - போரில் முகத்தினும் மார்பினும் பட்ட புண். இங்குலிகம் சோரும் - சாதிலிங்கம் சொரியும். இனம் - பசுவினம்.

* புறப் - வெ. ௨ : ௫. † புறம். ௧௬௪.

வெட்சித் திணையின்பாற் படும் வீரர்தம் ஆகோட் செயல் தொல்காப்பியப் புறத்திணையியலில்,

"படையியங்கு அரவம், பாக்கத்து விரிச்சி,
புடைகெடப் போகிய செலவே, புடைகெட
ஒற்றி னாகிய வேயே, வேய்ப்புறம்
முற்றி னாகிய புறத்திறை, முற்றிய
ஊர்கொலை, ஆகோள், பூசன் மாற்றே,
நோயின்று உய்த்தல், நுவலுழித் தோற்றம்,
தந்துநிறை, பாதீடு, உண்டாட்டுக், கொடையென
வந்த ஈரேழ் வகையிற் றாகும்"*

என்று பதினான்கு பிரிவுகளாகப் பகுத்துக் கூறப்படும். இப் பிரிவுகளையே துறைகளென்றுங் கூறுப. இப் பதினான்கு துறைகளையும் புறப்பொருள் வெண்பாமாலையும் முறையே எடுத்துக்கூறிப் புலனறி சிறப்பு, பிள்ளை வழக்கு, துடிநிலை, கொற்றவை நிலை, வெறியாட்டு என மேலுஞ் சில கூட்டிக் கூறும். இவைதம்மை ஆசிரியர் தொல்காப்பியனார் ஒன்றினொன் றடக்கிப் புறனடையாற் கூறுவர்.

## படையியங்கு அரவம் :

இனி மேற்காட்டிய பதினான்கு துறைகளுள்ளும் 'படையியங்கு அரவம்' என்பது ஆன் நிரை கொள்ளுதற்காகப் பகைப்புலத்துக்குச் செல்ல விரும்பிய போர்மறவரெல்லாரும் சாயங்காலத்தில் தமது ஊர்க்குப் புறம்பாக வந்து ஒன்று கூடி வெட்சிப்பூவை மயிர்முடியிற் சூடித் தமக்கு வழிபடு தெய்வமாயுள்ள கொற்றவை யென்னுந் தேவதையைத் துடிகொட்டி வணங்கிப் புறப்படும்போது ஆங்குண்டாகும் ஓசையாகும். வீரர்கள் ஒன்றுகூடும் போதும், வெட்சிப்பூவைச் சூடும் போதும், துடிகொட்டும் போதும், புறப்படும் போதும் உண்டாகும் படையியங்கு அரவமே இங்குக் குறிப்பிடப்படுவதாமென்க. என்னை? ஒரு திரண்ட மறவர்படை ஓரிடத்தினின்றுந் தொலைவான

* தொல். புறத். ௩.

வேருேரிடத்திற்கு எழுந்து புறப்படுவதென்ருல், ஆங்கு ஓசைப்பெருக்கம் உண்டாகாதிராதாதலினென்பது. இங்குக் கூறப்பட்டது மறவர் படையின் இயங்கொலி மயக்கமே யாயினும், அஃது அப் படைவீரரின் புறப்பாட்டெழுச்சியினையே குறிக்குமென்க. அதுவே அத் துறைக்கருத்துமாம்.

போர்மறவர்கள் நிரை கோடற்குப் புறப்படும் பொழுது கொற்றவையைத் துணைகொள்ளும் இயைபு, "மாற்ருர்க்கு உட்குதலைக் கொடுக்கும் சீருரிடத்துத் தனக்கிணையில்லாத வீரன் நிரை கொள்ளத் தலைப்பட்டவிடத்து, அவற்குப் போர்ப்பூவாகிய வெட்சிமலரைச் சூட்டுதற்கு வெள்ளிய வாளுழத்தியும் (கொற்றவையும்) வேண்டும்; அங்ஙனம் அவளும் உடன்செல்லக் கருதியவழி"* என்று ஆசிரியர் அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார வேட்டுவவரிக்கண் உரைகூறு முறையாற் பெறப்படுகின்றமையின், இங்குத் 'துடிகொட்டுத'லென்று கூறப்படுவது கொற்றவையை வணங்கும்போது பயன்படுத்தப்படும் பறைக்கருவியாகிய உடுக்கையை அடித்தொலித்தலேயா மென்பது தெளிபொருள். குறிஞ்சிப்பறையென்று நூல்களிற் சுட்டிக் கூறப்படுவது இதனின் வேறென்று அறிந்துகொள்ளல் வேண்டும்.

இவ்வாறு இப் போர் மறவர் இங்குப் படையியங்கிப் புறப்படும் நேரத்திலேயே, இவர்கள் மேற்செல்லுதற்குக் கருதியிருக்கும் பகைவர்தம் நாட்டகத்தில் ஆன் நிரைகள் தங்கியிருக்கும் மலைக்காட்டின்கண், வருவது குறித்துத் தீக்குறியாகக் 'காரி' யென்னும் ஒரு பறவை அழாநிற்கு மென்பது இங்குக் குறித்தற்குரியது. இக் காரிப்பறவையின் ஓசையையும் அதுகேட்டு ஆங்குள்ள நிரைகாவலர் கொள்ளும் எழுச்சியையும் மேற்கூறிய படையியங்காவத்தோடு சேர்த்து 'வெட்சியரவ' மென்று கூறுமரபு சங்க நூலுரைகளிற் காணப்படுகின்றது.

---

* சிலப். கஉ: 'உட்குடைச்.'

[1]"உட்குடைச் சீறூ ரொருமகனா னிரைகொள்ள வுற்ற காலை
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டும் [போலும்
வெட்சி மலர்புனைய வெள்வா ளுழத்தியும் வேண்டின் [வேற்றூர்க்
கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டும் போலும்"*

என்பது சிலப்பதிகாரப் பாட்டு. ஆயினும் நிமித்தம் பார்த்தலையே கருப்பொருளாகக்கொண்டு மேல் வரும் 'விரிச்சி' யென்னுந் துறையினை ஆசிரியர் தொல்காப்பியனார் தமது புறத்திணையியலில் எடுத்துக் கூறுதலின், 'வேற்றூர்க் கட்சியுட் காரி கடிய குரலிசைத்துக் காட்டு' மென்னும் நிமித்தம் பற்றிய கோட்பாட்டுரை அவர்க்கு மாறுவதன்றென் றறிந்து கொள்க. 'காரி'யென்பது கரிக்குருவி. இப் பறவையின் அழுகுரலை அங்கு ஆன் நிரைகளைக் காவல் செய்து நிற்குங் கோவலர் தீக்குறியாகக் கருதித் தம்முள் ஒருவருக்கொருவர் அறிவித்துக்கொண்டு மிகவும் விழிப்பாய்த் தமது காவலில் முனைந்து நிற்பர். இவர் செய்கை,

"கானிடை யினநிரைக் காவல் போற்றுமின்
ஆனிடை யழித்தபுள் ளென்று கூறினார்."†

என்று சீவகசிந்தாமணியின் கனகமாலையா ரிலம்பகத்திற் கூறப்படுகின்றமை காண்க. ஆகொள்ளும் நோக்கமுடையாரும் ஆகாக்கும் நோக்கமுடையாருமாக இங்ஙனம் இருவேறாரின்கண் போர்வலருங் கோவலரும் வெட்சியரவ முணர்ந்து எழுச்சியுடையராய் நிற்குமளவே 'படையியங் கரவம்' அல்லது 'வெட்சியரவம்' என்னுந் துறையாம்.

**நற்சொல் கேட்டல்:**

இனிப் 'பாக்கத்து விரிச்சி' யென்பது, வேற்றுப் புலஞ் சென்று ஆநிரைகோடும் முனைப்புடையராய்ப் படை

---

1. வெள்வாள் உழத்தி - கொற்றவை. வேண்டும் - விரும்பும். கட்சியுள் - காட்டில். காரி - கரிக்குருவி.

* சிலப். கஉ. 'உட்குடைச்.'

† சீவக. எ : உகரு.

யியங்கிப் புறப்பட்ட போர்மறவர் சிறிது தொலைவு சென்று ஒரு விடுதியில் அமர்ந்து தாம் மேற்கொண்ட செயல் இனிது முடிந்து அதன் முகத்தால் தம் அரசனுக்கு [1]ஆக்கம் விளையுமாவென்று அறிதற்காக நற்சொற் கேட்டலிற் காதுகொடுத்து நிற்றலாம். 'விரிச்சி'யென்பது நற்சொல். 'பாக்க'மென்பது ஊர். சிறிது தொலைவு சென்று ஓர் ஊர் மருங்கு நின்று நற்சொற் கேட்டலென்க. நற்சொல் என்பது இவர் தாம் மேற்கொண்ட முதல் நோக்கத்தோடு ஒத்த கருத்துடைய வெற்றி காணுஞ் சொல். இந் நற்சொல்லாவது இவ்வகையானதென்பதும், அது தன்னைக் கேட்டுத் தமதெண்ணந் துணியுமாறு இம்முறையானதென்பதும் விளங்கவைத்தற் குரியதொரு பகுதி பத்துப் பாட்டினுள் ஒன்றான முல்லைப்பாட்டின்கண் வருகின்றது. அது,

> [2]"........விரிச்சி நிற்பச்
> சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
> உறுதுயர் அலமரல் நோக்கி ஆய்மகள்
> நடுங்குசுவல் அசைத்த கையள் கைய
> கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர
> இன்னே வருகுவர் தாயர் என்போள்
> நன்னர் நன்மொழி கேட்டனம் அதனால்
> நல்ல நல்லோர் வாய்ப்புள் தெவ்வர்
> முனைகவர்ந்து கொண்ட திறையர் வினைமுடித்து
> வருதல் தலைவர் வாய்வது." *

என்பது. இதன் கருத்து, 'நற்சொற் கேட்டு நிற்ப; அப்பொழுது அருகே யிருந்த இடையர்குலப் பெண்ணொருத்தி, பால் குடித்தற்காகத் தம் தாயை நினைத்துச் சுழன்று சுழன்று வருந்துகின்ற பசுங் கன்றுகளைப் பார்த்து, ஆயர்கள் பின்னே நின்று செலுத்திவர உங்கள்

---

1. நன்மை, இலாபம் முதலியன.

2. சுவல் - தோள். உய்த்தர - செலுத்திவர. வாய்ப்புள் - நற்சொல்.

* முல்லைப். ௧௧-௨௦.

தாய்மார் இப்பொழுதே வந்துவிடுவர் என்று கூறுகின்ற நற்சொல் கேட்டனம்; அதனாற் பகைப்புலஞ் சென்றவர் தாம் மேற்கொண்ட செயலை முடித்துக்கொண்டு உடனே வந்துவிடுவ' ரென்பது.

இது, மழைகாலம் பிறந்த உடனே வருவேனென்று சொல்லிப் பகை யரசரோடு போர் புரிதற்காகப் பகைப் புலஞ் சென்ற தன் தலைவனை நினைந்து, மழைகாலம் பிறந்தும் இன்னும் வந்திலனே என்னும் பிரிவாற்றாமையினாற் பெரிது வருந்திக் கிடக்குந் தலைவிக்கு அவளைச் சூழ்ந்து நிற்பாரான பெண்டிர் சிலர் நற்சொற் கேட்டு வந்து சொன்ன அகப்பொருட் பகுதியாகும். தாய் நாடி நிற்குங் கன்றுகட்குத் தாயர் வருவார் என்று ஆய்மகள் கூறிய கூற்றுத் தலைவன் வருகையை எதிர் நோக்கிக் கிடக்குந் தலைவியின் நோக்கத்திற்கு முழுதொத் திருத்தலோடு 'வருவார்' என்னும் நற்சொன் முடிபையும் பெற்றிருத் தல் காண்க. இதுவே வெற்றி காணும் நற்சொல்லாம். இனி இந் நற்சொல்லிலிருந்து தமது நெஞ்சங் கொண்ட கருத்துக்கும் 'தலைவன் வருவா' னென்று ஒரு முடிபு தேற்றிக்கொண்டார் விரிச்சி கேட்டு நின்ற பெண்டிர்.

இவ்வாறே ஆகோடற் கெழுந்த படைமறவரும் ஆங்குத் தமது நோக்கத்தோ டொத்து முடிபு தேற்றி வெளிப்பட்டதொரு நற்சொற் கேட்டுத் தஞ் செயலும் இனிது முடிந்து ஆக்கமாமென்று துணிபெய்தினர். அவர் கேட்ட நற்சொல்லை, மறப்பெண்ணொருத்தி அருகே நின்றாளை விளித்து 'நம்மவர் கூட்டம் வாயிலில் திரண் டிருத்தலால் அங்குள்ள குடத்துக் கள்ளை யெடுத்துக் கொண்டுவா' என்று கூறுவதாகப் புறப்பொருள் வெண்பா மாலை கூறும்.* இது புறப்பொருட் பகுதி. படைமறவர் ஆனிரை கவர்ந்து வந்த பின்னர்த் தமது வெற்றிக் களிப் பினாற் கள்ளுண்டு மகிழ்ந்தாடுவரெனக் கிளந்து மேல் வரும் 'உண்டாட்டு' என்னுந் துறை விளக்குதலின்,

* புறப்-வெ. க : ச.

ஆ கவர்தற் கெழுந்த அம் மறவர் தமது வெற்றிக்கறிகுறி யான நற்சொல்லென்று அதனைக் கொள்வாராயின ரென்க.

**கேட்கு முறை :**

இனி இவ் விரிச்சி கேட்குமாறு: திரண்டு சென்ற வீரர்தம் படையுள் நற்சொற் கேட்டற்கு உரியரான நல்லோர் சிலர், நெல்லு நாழியும் மணமலர் சிலவும் நல்ல நீருங் கைக்கொண்டு ஆங்குக் காணப்படுங் கோயிலொன் றிற்குச் சென்று பூச்சொரிதற்கென்று நிறுத்தப்பட்டிருக் குங் குறியின் முன்பு நீரைத்தெளித்து அதன் பின் சிறிது நெல்லும் சில மலருங் கலந்தவாறு சிறிது சிறிதாக விட்டு விட்டுத் தூவிக் கடவுள் வணங்கி நெஞ்சொருமையுடன் செவி நிறுத்தி நற்சொல் கேட்டு வருவர். தமிழ் நாட்டு மாந்தர் பண்டு மேற்கொண்ட இவ்வுண்மை,

> [1]"அருங்கடி மூதூர் மருங்கிற் போகி
> யாழிசை யினவண் டார்ப்ப நெல்லொடு
> நாழி கொண்ட நறுவீ முல்லை
> அரும்பவிழ் அலரி தூஉய்க் கைதொழுது
> பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப"*

என்னும் முல்லைப்பாட்டினும்,

> [2]"நெல்நீர் எறிந்து விரிச்சி யோர்க்கும்"†

என்னும் புறப்பாட்டினுந் தெளியப்படும்.

இங்குக் குறிக்கப்பட்ட கோயில்களுந் தெய்வங் களும் அவ்வந்நிலத்துக் கோயில்களுந் தெய்வங் களுமாகும். குறிஞ்சி நிலமாயின் முருகனையும், முல்லை நிலமாயின் மாயோனையும், மருத நிலமாயின் வேந்தனையும் (இந்திரனையும்), நெய்தல் நிலமாயின் கடற்றெய்வத்தையும் (வருணனையும்), பாலை நிலமாயின் ஞாயிற்றினையுங்

1. அருங் கடி - அரிய காவலையுடைய.
2. ஓர்க்கும் - கேட்கும்.
* முல்லைப். எ-கக. † புறம். உஅ0: ௬.

கொற்றவையையும் வணங்கி விரிச்சிகேட்பர். இவை தம்முட் சில தெய்வங்களுக்குச் சில நிலங்களிற் பண்டு கோயில்கள் காணப்படா. அங்ஙனங் காணப்படாவாயி னும் அவ்வந்நிலத்தார் தத்தம் தெய்வத்தை வணங்குதற் குரிய இடமும் முறைகளும் வகுத்துக்கொண்டிருப்பராத லால், அவ்வவ் விடங்களையும் அவ்வம் முறைகளையுமே இங்கு மேற்கொள்ளல் வேண்டும். நெய்தல் நிலம் வாழும் செம்படவர் தமது குடியிருப்புகளுள்ள மணல் முற்றத்தி லேயே சுறு மீனின் வல்லிய கொம்பை நட்டு அதனையே தமது கடற்றெய்வம் ஏறியுறையுந் தெய்வக்குறியாக நினைந்து வணங்குவராதலின், தெய்வம் வணங்கி விரிச்சி கேட்க விரும்பும் அந்நிலத்து மக்களும் அது செய்வ ரென்க. ஞாயிறுங் கொற்றவையும் எல்லா நிலங்கட்கும் பொதுவாதலாலும், அவ்விரண்டனுள்ளுங் கொற்றவையே போர் மறவராற் பெரிது பாராட்டப்படுவதாதலாலும் அவர்தாம் தாமிருப்பது எந்நிலமே யாயினும் பெரும் பாலும் அவ்வந் நிலங்களிலெல்லாம் நிறுத்தப்பட்டிருக்குங் கொற்றவை கோயிலுக்கே சென்று விரிச்சி கேட்பர். தாஞ் சென்ற ஊர்க்கண் கோயிலில்லையானல் ஏதானுமொரு நல் லிடத்தைக் குறித்துக்கொண்டு அதனைத் துப்புரவு செய்து நீர் தெளித்து முன் கூறியவாறே நெல்லும் மலருந் தூஉய்க் கொற்றவையை நினைந்து விரிச்சி கேட்பர். இங்ஙனம் நிகழ்வது பெரும்பாலும் ஒரு மரத்தின் கீழிடமாயிருக்கும்.

அவ்வாறாயின், அம் மரத்திலிருக்கும் பறவையின் குரல் கண்டும் அவர் தமது நிமித்தந் தேறுவர். மக்கள் நற்சொல்லேயன்றிப் புட்கள் நற்குரல் கண்டும் ஆ கவர்தற் கெழும் வேன்மறவர் நன்னிமித்தங் காணுமுண்மையை,

[1] "மன்ன வன்னிரை வந்து கண்ணுறும்
இன்ன நாளினுற் கோடு நாமெனச்

1. கண்ணுறும் - இடத்திற் சேரும். கோடும்-கொள்ளு வோம். வாயுள் - நற்சொற்களில். முன்னம் - குறிப்பு.

சொன்ன வாயுளே ஒருவன் புட்குரன்
முன்னங் கூறினன் முழுது ணர்வினன் "*

என்று சிந்தாமணியின் கோவிந்தையா ரிலம்பகங் கூறிற்று. போர்மறவர்க்கே யன்றித் தமிழ் நாட்டின் ஏனைமக்கட்கும் இங்ஙனம் மரத்தடியிற் சென்று இறைவனை நினைந்து விரிச்சி கேட்கும் வழக்கம் பொதுவென்று கொள்க.

## நற்சொல் கேளாமலும் முனைதல் :

இங்ஙனம் இவ் விரிச்சி கேட்டலே, அரசன் ஏவல் பெறாது தாமே நிரை கொணரற்கெழுந்த மறவர்படையே யன்றி, அரசனது ஏவல் பெற்றுச் செல்லும் மறவர் படையும் அரசனது ஆக்கங் கருதி மேற்கொள்வரென்று உரை தேற்றுவார் ஆசிரியர் நச்சினார்க்கினியர்.† இனி இவ் விருதிறத்தார்க்கும் ஒரோவொருகால் விரிச்சி கேளாமல் மேற்செல்வதும் நிகழுமென்பதும், அதற்கு ஏது 'வீரம் உண்டு, நாமுண்டு' என்று வீரமே பொருளாக வீரக் குறிப்பின் முனைப்புப் பெற்ற துணிவு மிக்க மறவர் சிலர் விரிச்சி வேண்டாவென்று விலக்கிப்போதலா மென்பதும் அறியற்பாலன. இதனை,

[1]" நாளும் புள்ளுங் கேளா ஆக்கமொடு
எங்கோ னேயின னுதவின் யாமத்துச்
செங்கால் வெட்சியுந் தினையுந் தூஉய்
மறிக்குரற் குருதி மன்றுதுக ளவிப்ப
விரிச்சி யோர்த்தல் வேண்டா
எயிற்புறந் தருதும்யாம் பகைப்புல நிரையே"‡

என்று தகடூர்யாத்திரையும் விளங்கக் கூறும். ஆயினும் விரிச்சி வேண்டாவென்று விலக்குதலே விரிச்சி கேட்கும் நினைவை யெழுப்பி அதனைத் திடுமெனவுங் கேட்பிக்கு

---

1. ஏயினன் – செலுத்தினன். குரல்-கழுத்தின். மன்று துகள் - அம்பலத்தின் புழுதியை.

* சிந்தா. உள. † தொல். புறத். ௬.

‡ புறத்திரட்டு, நிரைகோடல்.

மென்னுங் கருத்துப்பட ஆசிரியர் நச்சினார்க்கினியர் விரிச்சி விலக்குதலை அது கேட்டற்கே ஓர் ஏதுவாகக் கொள்வாராதலின், * பெரும்பான்மையும் விரிச்சி கேட்டு மேற்செல்லலே ஆங்கு நிகழுமென் றறிந்துகொள்க.

இனிப் 'புடைகெடப் போகிய செல' வென்பது விரிச்சி கேட்டு நன்னிமித்தந் தேறிய மறவர் தமது அரிய வழியைக் கடந்து மாற்றார் புலத்துக்குச் செல்லுதலாம். இங்குப் 'புடைகெட' வென்பது வழிப்பக்கங்களி லுள்ள பகைவர்களின் சூழ்ச்சிகட்கு அகப்படாமல் அவை கெடும்படி செல்லுதலைக் குறிக்கும். மேல்வருவதும் அது.

ஒற்றுக் கேட்டல் :

இனி, அப் பகைப்புலத்தின் அருகே செல்லும்போது அவர் தம்முள் ஒற்றராதற்குரிய சிலர் முன்னுற் சென்று ஆன் நிரைகள் இருக்குமிடம், அவ்விடத்தின் பரப்பு, அந் நிரையினைக் காத்துநிற்குங் காவல ரிருப்பு, நிலை, தொலைவு முதலியவற்றைத் தெளிவாய்த் தெரிந்துகொண்டு வந்து தம்மவர்க்கு உரைக்கும் உரைக்கூறுகளெல்லாம் 'புடை கெட ஒற்றின் ஆகிய வேய்' என்னுந் துறையுறுப்பாகும். 'வேய்' என்பது பிறர் தெரியாதபடி அறிந்துகொண்டு வந்து சொல்லுங் கோட்சொல். இதனை யறிந்துரைப் பார் பகைப்புலத்தேயுள்ள நிரைகாவலர் போல உடையுங் குரலும் மாற்றிப் பொருத்திக்கொண்டு, அப் புலத்தின் கண்ணும் இவரைப்போலும் ஒற்றர் பலர் முன்னரே கண்ட வெட்சி யரவத்தால் ஆராய்ந்துகொண் டிருப்ப ராதலான் அவரும் அறியாதபடி அத்துணை மாயமாய் அவண் சென்று மேற்கூறிய உண்மைகளை யெல்லாம் மிகவுந் திறமாய் அறிந்துகொண்டு வருவர். இவர்க்கு வாய்ந்த இந்தத் திறம் மிகவும் அருமையும் பெருமையும் உடைய தாகும். இவர் தமக்குள்ள தன்னல மறுப்பு, கண்ணஞ் சாமை, குறிப்பறியுங் கூர்மை, வினைசெயும் ஆற்றல், அவற் றின் நுட்ப திட்பங்கள் முதலிய உயர்ந்த இயல்புகளெல்

* தொல். புறத். ந

லாம் அறிஞராற் பெரிதும் போற்றற்குரியனவாம். ஒற்ற ராவார் இத்துணைத் தெளிந்த 'நுண்ணறிவும் திறமும் வாய்ந்தாரா யிருத்தலாலன்றே ஆசிரியர் திருவள்ளுவனார் அவரை அறிவின் நிலையமான அறிவுநூலோ டிணைத்து அவ்விரண்டினையும் அரசனது கண்கட்கு நிகராமெனத் தெளித்து,

> [1]"ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
> தெற்றென்க மன்னவன் கண்"*

என்று தமது பொய்யா மொழியை இயற்றி யருளினர். இனைய அருந்திறன் வாய்ந்த ஒற்றரின் வேய்ச்சொல் லுணர்ந்த படைமறவர் அப்போதே அவர்கட்குப் பரிசு கள் நல்கிச் சிறப்பித்தலும் உண்டு.

## நிரைகாவலரது போர் :

அதன் பின்பு அம் மறவர் பகைப்புலத்தின்கண் ஆனிரையிருக்கும் இடத்திற்குப் புறம்பாகச் சென்று அங்கோரிடத்திற் கூட்டமாய்த் தங்குவர். தங்கித் தமக் குட் செய்துகொள்ளவேண்டிய முன்னேற்பாடுகளையும் ஒழுங்குகளையுந் திறமாகவுந் திட்டமாகவுஞ் செய்து கொண்டு நிரைகாவலர் ஆன் நிரையைச் சூழ்ந்து மிக்க விழிப்போடிருக்கும் இருப்பிடத்தை முற்றும் சுற்றி வளைத்து வீரமும் எழுச்சியும் பொங்கு சினமும் மிக்கு அந் நிரைகாவலரெல்லாரைம் வாளும் வேலும் ஓச்சி வீசிக் கொன்று குவிப்பர். எல்லாம் சற்றே நேரத்தில் முடிந்துவிடும். உடனே, தம்மை எதிர்ப்பார் எவருமே அங்கு இலராக, அனைவரும் அவண் சிதறிய ஆநிரைகளை ஒருசேரத் திரட்டிக்கொண்டு மிக விரைவாய்த் தந் நாட் டுக்குச் செலுத்தி வருவர். இவற்றுள், மறவர், ஒற்றுச் சொல் கேட்டு ஆன்நிரை யிருப்புக்குப் புறம்பாகச் சென் றிறுத்தலையே 'வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்திறை' யென்றும், நிரைகாவலரைக் கோறலையே 'முற்றிய ஊர்

---

1. ஒற்று - ஒற்றர். தெற்றென்க - தெளிக.
* திருக்குறள், ஒற்றாடல், க.

கொலை' யென்றும், ஆகொண்டு திரும்புதலையே 'ஆகோள்' என்றுந் தொல்காப்பியர் கூறினர்.

நிரைகாவலரின் இருப்பு, வேந்தன் பட்டினத்திற்குப் புறத்தே இருக்கும். அக் காவலர்தாம் அவ்விடத்திலேயே உறைவராதலின், அவ்விருப்பு ஒரு சேரியாய் விளங்கும். இதனைப் 'புறஞ்சேரி' யென்று கூறுவர். இங்ஙனமொன்று 'புறஞ்சேரியிறுத்த காதை' யென்னுந் தலைப்பினுற் சிலப்பதிகாரக் கதையிற் ருெடர்புபடுதலும் இங்கு நினைவுகூரற்பாலது.

## இடைவழிப் போர் :

ஆனிரைகள் காத்து நின்ற காவலரில் வாள் தப்பிச் சிதறி ஓடிப் போயினுர் சிலர் வேந்தன் பட்டினஞ் சென்று அப் பட்டினத்தார்க்கும் அரசர்க்கும் அறிவிப்பாராதலின், அவரும் ஒரு படை திரட்டிக்கொண்டு விரைந்து சென்று ஆகொண்டு செல்வாரை வழியிற் கண்டு எதிர் மறித்துப் போர் தொடுப்பர். தொடுத்தும் என்? ஆ திரட்டிச் சென்ருர் அது கண்டு மீண்டும் அவர்மேற் போர் திருப்பிப் பொருது வெல்வர். இங்ஙனம் பின்வந்தார்மேற் போர் மாற்றிப் பொருதலே 'பூசன் மாற்று' என்னுந் துறையாகும்.

இவ்வாறு சிலர் போர்மாற்றிப் பொரும்போழ்தே ஏனைச் சிலர் தாங் கொண்ட ஆன் நிரைகளை வழியிடையே நிழலினும் நீரினும் படிவித்து அவற்றிற்கு வருத்தமில்லா மற் செலுத்திக்கொண்டு தமது ஊர்க்கே காற்றினுங் கடுகி வந்துவிடுவர். ஆன் நிரையை இவர் வருத்தமில்லாமல் இன்புறுத்திக் கொணருந் துறை 'நோய் இன்று உய்த்தல்' என்பது. இத்துறை 'சுரத்துய்த்தல்' என்னும் பெயரினுற் புறப்பொருள் வெண்பா மாலையிற் காணப்படும். அரிய காட்டு வழியில் அன்பாய்ச் செலுத்தி வருதலென்பது அதன் கருத்து. இடைவழியிற் பொருதுகொண்டிருந்த மறவரும், திரும்பத் திரும்பப் பின்வந்து போர்

தொடுத்தாரெல்லாரையும் பொருது பொருது வெற்றி யுடையவராகவே தமதூர்க்கு வந்துவிடுவர்.

## உண்டாட்டுங் கொடையும் :

இனி இம்மறவர்தாம் தமதூர்க்கண் பகைவர் ஆநிரை யோடு வந்து தோன்றுதல் 'நவலுழித் தோற்ற' மென்றும், தாங் கொணர்ந்த நிரையினைத் தம்மவர் மாட்டுத் தந்து ஊர்ப்புறத்தே நிறுத்துதல் 'தந்து நிறை' யென்றும், பின்னர் விரிச்சி கேட்டுரைத்தாரும், ஒற்றறிந்துரைத் தாரும், பொருது ஆதிரட்டினருமாக அவ்வானிரைகளை வேந்தனேவலாற் பகுத்துக் கொள்ளுதல் 'பாதீடு' என்றும், படை மறவர் ஆதிரட்டித் தாம் பெற்ற மகிழ்ச்சியினாற் கள்ளுண்டு களித்தாடுதல் 'உண்டாட்டு' என்றும், தாந்தாம் பகுத்துக்கொண்ட ஆனிரைகளை இரவலர்க்கு வரையாது கொடுத்து மகிழ்தல் 'கொடை' யென்றுந் துறைகள் கூறப்படுகின்றன. 'நவலுழித் தோற்ற' மென்பது 'இப்பொழுது வருவ' ரென்று மறவர் குடிப் பெண்டிர் கூறுகின்ற நேரத்தில் ஆங்குத் தோன்றுதல்.

## வள்ளிக்கூத்து முதலியன :

மேற்காட்டிய இப் பதினன்கு கருத்துக்களும் வெட்சித் திணைக்காக ஆசிரியர் தொல்காப்பியனார் பகுத்துக் கொண்ட துறைப்பொருள்களாம். இனிப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர், மேலுங் கூறிய துறைகளைந்தும் பின் வருமாறு : அவற்றுள் ஆனிரை கொள்ளுதற்காக மறவர் படை பகைப்புலஞ் சென்றபோது அஞ்சா நெஞ்சினராய் நிரைகாவல ரூர்சென்று ஒற்றறிந்து வந்த ஒற்றர் திறம் ஏனையோர் திறத்தினுஞ் சிறந்ததாதலின், அவர்க்கு மற்றையோர் நிரை பகுத்துக்கொண்ட பங்கைக் காட்டினும் இரண்டொரு பசு மிகுதியாக ஏற்றிக் கொடுத்தல் முறையாகுமென்பது 'புலனறி சிறப்பு' என்னுந் துறையாம். 'புலனறி சிறப்' பென்பது புலனறிந்து வந்து சொன்னமைக்காகச் செய்யுஞ் சிறப்பு. புலனறிதலாவது

மறைவான செய்திகளை யறிதல். இனி விரிச்சி கேட்டார்க்கும் அங்ஙனமே பால் நிறைந்த பெரிய மடிகளை யுடைய நல்ல பசுக்களாக இரண்டொன்று சேர்த்துக் கொடுக்கும் வழக்கம் "பிள்ளை வழக்கு" எனப்படும். இங்குப் 'பிள்ளை' யென்றது கரும்பிள்ளையாகிய ஒரு கரிக் குருவியைக் குறிக்கும். அதன் நிமித்தம் பார்த்துச் சொன்னவர்க்கு அவர் செயலை யெடுத்துப் புகழ்ந்து கூறிக் கொடுத்தல் 'பிள்ளைவழக்' கெனப்பட்டது. "கரும் பிள்ளை நிமித்தங் கூறியார்க்கு விதந்து கொடுத்த"* லென்று இதனை இலக்கண விளக்க வுரை எடுத்துக் கூறுதலும் இங்கு உற்றுநோக்கற்பாலது. இனி முதன் முதலிற் படையியங் காவங் கொண்டு புறப்படும்பொழுது துடிகொட்டினார்க்கு, பின்னர்க் கள்ளுண்ணும்போது மிகுதியாய் வார்க்கு முறைமை 'துடிநிலை' யென்னுந் துறை. தமக்குத் துணையாய் வந்து தமது கருத்தை முற்றுப் பெறுவித்த கொற்றவைத் தெய்வத்தின் அருளை வியந்து பாராட்டி வணங்கும் நிலை 'கொற்றவை நிலை' யாம். இனி, மேல் நிகழ்த்தப்போகும் போர் முதலாயவற்றிற் கெல்லாம் துணை நிற்றற்பொருட்டு மறவரெல்லாரும் முருகனுக்கு வேலன் வாயிலாக வழிபாடியற்றுவிப்ப அஞ்ஞான்று அவர்தம் பெண்டிரிற் சிலர் வள்ளிக் கூத்தாடுதல் 'வெறியாட்டு' என்னுந் துறை. வள்ளிக்கூத் தென்பது மறவர் மகளிர் வள்ளி யுருவங் கொண்டு முருகக் கடவுளுக்கு ஆடுங் கூத்து. இக் கூத்தி னியல்பினை,

"மண்டம ரட்ட மறவர் குழாத்திடைக்
கண்ட முருகனுங் கண்களித்தான்—பண்டே
குறமகள் வள்ளிதன் கோலங்கொண் டாடப்
பிறமகள் நோற்றாள் பெரிது." †

என்னும் நச்சினார்க்கினிய ருரைமேற்கோட் செய்யுளானும் அறியலாம். "இக் கூத்து ஆண்பாற்கும் பெண்பாற்கும்

* இலக்கண விளக். பொருள். ௨௩௧.
† தொல். புறத். ௫-ன் மேற்கோள்.

பொருது" வென்று அவ்வுரையாசிரியரே பெரும்பாணாற்றுப் படைக்குரைத்த உரையிற் கூறுவர்.* ஆயினும் அவரே தொல்காப்பியப் புறத்திணையியற்குரைத்த உரையில் "இது பெண்பாற்குப் பெருவரவிற்று" என்று கூறுதலின், இதனைப் பெண்பாற்கே பெரிதும் உரித்தெனக் கொள்க. இதனை "இழிந்தோர் காணுங் கூத்"தென்றும் அவர் உரைப்பர்.†

## நூல்களின் இணக்கம்:

இனி இங்குக் காட்டிய புறப்பொருள் வெண்பாமாலையின் மிகையான துறைகள் ஐந்தனுள்ளும், புலனறி சிறப்பும், பிள்ளை வழக்குந் தொல்காப்பியனார் கூறிய 'பாதீடு' என்னுந் துறையுள் அடங்குதலும், துடிநிலை யென்பது 'உண்டாட்டு' என்னுந் துறையுள் அடங்குதலும் சற்றே கூர்ந்து நோக்கவல்லாரெவரும் அறிந்துகொள்வர். மறவர்கள் கொற்றவையை வணங்குதலென்றது ஆநிரை கோடலென்னும் வெட்சித்திணை முழுவதூஉம் நிகழ்வதாமாதலாலும், நிரைகோடலென்னுஞ் செயலுக்கு அஃதோர் உறுப்பாகமட்டும் அமைவதன்றாமாதலாலும் ஆசிரியர் அதனைத் துறைக்கண் அடங்காமை கண்டு வெட்சித்திணை முழுமைக்குமே உரியதொரு கருத்தாக,

> [1]"மறங்கடைக் கூட்டிய துடிநிலை சிறந்த
> கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே."‡

என்றொரு நூற்பாத் தனியே யியற்றிப் புறனடையாற் கொண்டார். இனி, மேல் நிகழவிருக்கும் போர் நிகழ்ச்சியின் வெற்றிப் பேற்றைப் பற்றிய 'வெறியாட்டு' என்னுந்

---

1. கடைக்கூட்டிய - கடைக்கூட்டும் பொருட்டு. துடிநிலை - துடிகொட்டும் நிலை. அத்திணைப் புறன் - அத்திணையிடத்தன.

* பெரும்பாண், ௩௭௦.

† தொல். புறத். ௫.

‡ ,, ,, ச.

துறையும் ஆநிரை கோடும் அளவின்மட்டும் அமைந்த வெட்சித்திணைக்கண் அடங்குவதன்றாதலின், அதனை ஆசிரியர் வெட்சித்திணைத் துறைகளு ளொன்றாகக் கொள்ளாது எல்லாப் புறத்திணைகட்கும் பொதுவாயுள்ள பொதுவியல் புகளைப் பற்றிக் கூறுதற் கெடுத்துக்கொண்ட 'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்'* என்னும் பொது நூற்பாவின்கண் 'வாடா வள்ளி' யென்னுங் கூற்றினுற் பெற வைத்தார்.

இவ்வாறு ஆசிரியர் தொல்காப்பியனுர் தமது நூன் முறைக் கேற்பப் புறப்பொருட் செய்திகளை அமைத்துச் செல்லு முறையும், அவரல்லாத ஏனைப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் முதலியோர் தமது நூன்முறைக் கேற்ப அவற்றை அமைத்துச் செல்லு முறையும், இலக்கண விலக்கியங் கற்பார் நுண்ணுணர்ந்து ஒன்றினென்றை இணைத்தமைத்துக் கற்றலிற் கருத்தூன்றற் பாலார். இவற்றுண் மாறுவன எவையும் இல்லையாயினும், தொல்காப்பியனுர் வகுத்தமைத்த பதினன்கு துறைகளே இவ் வெட்சித் திணைக்குச் சிறப்புடையவாய்த் திகழ்தலையும் மாணுக்கர் பிரித்தறிந்து மகிழ்தல் வேண்டும். ஆசிரியர் இளம்பூரணனுரும் "பிள்ளை வழக்கு, புலனறி சிறப்பு முதலியன அத்துணைச் சிறப்பில" வென்று உரை நிறுத்தினர்.

ஆகோடலுக்குரிய பொழுது :

இனி ஆனிரை கோடலான இவ் வெட்சித்திணைச் செயல் பெரும்பான்மையும் இரவின்கண்ணே நிகழ்வ தொன்றாம். புறப்பொருள் வெண்பாமாலை, விரிச்சி கேட்டலைப் பற்றிக் கூறவந்த விடத்து,

"ஈண்டிருண் மாலை சொல்லோர்த் தன்று." †

என்னுங் கொளுவினுலும்,

---

* தொல். புறத். ரு. † புறப் - வெ. க : ச.

[1] "எழுவணி சீறூ ரிருண்மாலை முன்றில்." *

என்னும் வெண்பாவினாலும் அதற்குரிய நேரம் மாலைப்போ தென்று கூறுதலாலும், பின்னர்ப் பகைப்புலஞ் சென்று ஆகொள்ளும் நேரத்தில் அங்கெதிர்த்துப் பொரும் நிரை காவலரைப் பற்றிக் கூறும்பொழுது 'பகல் நேரத்தில் மட்டுந் தோல்வி யடையாது வெற்றி பெறவல்ல இந் நிரை காவலர் இவ் விரவு நேரத்திற் றோல்வி யடைந்தா' ரென்னுங் கருத்துப்பட,

[2] "—பகலே
தொலைவிலார் வீழத் தொடுகழ லார்ப்பக்
கொலைவிலார் கொண்டார் குறும்பு." †

என்று வரும் வெண்பாவினால் ஆகொள்ளும் நேரம் இரவு நேரமே யென்று தெளிய வைத்தலாலும் ஈது அறியப் படும். விரிச்சி வேண்டாவென்று விலக்கியதற்குக் காட்டாக மேற்காட்டிய தகடூர் யாத்திரைப் பாட்டிலும் ஆநிரை கொள்ளும் நேரத்தை 'யாமம்' என்னுஞ் சொல்லால் நள்ளிராப் போதென்று குறித்தமை காண்க.

---

1. எழு அணி - கணைய மரம் சூழ்ந்த.
2. தொலைவிலார் - தோல்வியடையாதவர்.
* புறப்-வெ. க : ச.
க : அ.

## ௨. கரந்தைத் திணை

[ஆனிரைகளைக் கவர்ந்து சென்ற வெட்சியாரோடு இடையே வழியிற் பொருது நிரை மீட்க மாற்றூர் முயலுதல்.]

ஏறுடைப் பெருநிரை பெயர்தரப் பெயராது
இலைபுதை பெருங்காட்டுத் தலைகரந் திருந்த
வல்வில் மறவர் ஒடுக்கம் காணாய்
செல்லல் செல்லல் சிறக்கநின் உள்ளம்
முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்
தாவுபு தெறிக்கு மான்மேற்
புடையிலங்கு ஒள்வாள் புனைகழ லோயே.

—புறநானூறு, உ௬௧.

'பக்கத்திலே விளங்குகின்ற ஒளி பொருந்திய வாளினையுங் காலிற் கட்டிய வீரக்கழலினையு முடைய வீரனே! தாம் களவிற் கவர்ந்துகொண்ட ஏறுகளையுடைய ஆனிரை முன்னே செல்லப் பின்னே மீட்க வருவாரான உங்களைப் பார்த்துவிட்டு அந் நிரையுந் தாமும் மேலே போகாமல், தழைகள் மூடிய பெரிய காட்டின்கண் தலை மறைந்திருக்கும் வலிய வில்லையுடைய மறவரது ஒடுங்கிய நிலையை எண்ணிப்பாராய்; தெய்வம் உடம்பிலே ஏறிய புலைமகளை யொப்பத் தாவித்துள்ளும் அவ்வானிரைமேல் நீ விரைந்து சென்று மீட்டல் செய்யாது அஞ்சித் திரும்பிச் செல்லற்க, திரும்பிச் செல்லற்க; நின் எண்ணம் நிறைவேறிச் சிறப்பதாக!'

'கழலோயே! காணாய், செல்லல், நின் உள்ளம் சிறக்க' வென்று வினை முடிக்க. தாவுபு, இறந்தகால வாய்பாட்டு வினையெச்சம்.

இச் செய்யுள், கவர்ந்து சென்ற ஆனிரையை மீட்டல் வேண்டிக் கறுவொடு பின் செல்லும் வீரனுக்குப் பிறர்

எழுச்சியுண்டாக்கினமை தெரித்தது. ஆதலின், இது 'பிள்ளைப் பெயர்ச்சி' யென்னுந் துறையுள் அடங்கும்.

**கரந்தை யொழுக்கம் :**

அயல்நாட்டு மறவர் இரவிலே வந்து தம்முடைய ஆனிரைகளைக் கவர்ந்து சென்ற செய்தியை நிரைகாவலரிற் சிலர் வேந்தன் பட்டினஞ் சென்று அறிவித்தாராதலின், அஃதறிந்த அப் பகைப்புலத்து வேந்தன் தம் மறவரைச் சினந்து நோக்கினன். அந்நாட்டுப் படைமறவர் உடனே வீரவெழுச்சி மிக்கவராய் அவ்வானிரைகளை மீட்டுவர லெண்ணிப் புறப்பட்டு மிக விரைவாய் வெட்சியாரைப் பின் பற்றிச் செல்கின்றார். சென்று வழியில் அவ் வெட்சி மற வரையுந் தந்நாட்டு ஆனிரைகளையுங் கண்டு அவரோடு போர் செய்து நிரை மீட்க முயல்வர். வெட்சியாரோடு பொருது நிரைமீட்க முயலும் அவ் வீரச் செய்கையே 'கரந்தை யொழுக்கம்' அல்லது கரந்தைத் திணை யென்று கூறப்படும்.

இனி இத் திணைக்குப் புறப்பொருள் வெண்பாமாலை,

[1] "கதமலி கரந்தை, கரந்தை யரவம்,
அதரிடைச் செலவே, அரும்போ மலைதல்,
புண்ணொடு வருதல், போர்க்களத் தொழிதல்,
ஆளெறி பிள்ளை, பிள்ளைத் தெளிவே,
பிள்ளை யாட்டொடு, கையறு நிலையே,
நெடுமொழி கூறல், பிள்ளைப் பெயர்ச்சி,
வேத்தியன் மலிபே, மிகுகுடி நிலையென
அருங்கலை யுணர்ந்தோர் அவைபதி னன்கும்
கரந்தையும் கரந்தைத் துறையு மென்ப" *

என்று துறைகள் கூறும்.

**துறை விளக்கம் :**

இவற்றுட் 'கரந்தையரவ' மென்பது, அயலார் நிரை கவர்ந்து சென்றாரெனுஞ் சொல் தம் செவிகளில் விழா

---

1. கதம் - சினம்.
* புறப் - வெ. உ : க.

முன்னரேயே பகைப்புலத்து மறவரெல்லாரும் வீரமும் எழுச்சியுஞ் சினப்பெருக்குங் கொப்புளித்துப் பொங்க நிரையை மீட்குமெண்ணம் உள்ளங் கவர்ந்து எழக் கழல் கட்டினர் சிலராயுங் கைச்சிலை கொண்டார் சிலராயும் வேலெடுத்தார் சிலராயும் வெகுண்டு நோக்கினர் சிலரா யுங் காலனை யொத்தார் சிலராயுங் கிளம்பிக் கரந்தைப் பூவைச் சூடி உடனே தடாரி யிசைத்துப் புறப்படும் புறப் பாட்டெழுச்சியை யுணர்த்துவதாம். இதனை வெண் பாமாலை,

> [1] " காலார் கழலார் கடுஞ்சிலையார் கைக்கொண்ட
> வேலார் வெருவந்த தோற்றத்தார்—காலன்
> கிளர்ந்தாலும் போல்வார் கிணைப்பூசல் கேட்டே
> உளர்ந்தார் நிரைப்பெயர்வு முண்டு " *

என்று மிக அழகாகக் கூறும்.

இனி ஆனிரை சென்றவழியே அவற்றின் அடிச்சுவடு கண்டு வழிச்செல்லல் 'அதரிடைச் செல' வென்றும் (அதர் - வழி), வழியிடையே ஆனிரையையும் வெட்சி மற வரையுங் கண்டு அவரோடு போர் செய்தல் 'போர் மலைத' லென்றும், அங்ஙனம் பொரும் போழ்து அஞ்சாது போர் செய்து உடம்பிலே வேலும் வாளும் முதலிய படைகள் பட்ட புண்ணுடனே போர் முடிந்ததும் வீரர்சிலர் திரும்பி வருதல் 'புண்ணொடு வருத' லென்றும், ஒளித்தும் புறங் கொடுத்தும் தோற்றுப்போகாமல் வீரமாய்ப் பொருது அப் போர்க்களத்திலேயே மாண்டுபோதல் 'போர்க்களத் தொழித' லென்றுங் கூறப்படுகின்றன.

போர்க்களத்திலே பொருவாரெல்லாரையும் விலக்கித் தானொருவனுமேயாகி வீரம் மிகுந்து எதிர்க்கும் வீரனது செயல் 'ஆளெறி பிள்ளை' யெனப்படும். ஆள் எறி பிள்ளை யென்பது எதிர்ப்பக்கத்து ஆட்களை வாளால் வெட்டுகின்ற

---

1. கால்ஆர்-காலில் நிறைந்த. உளர்ந்தார்-அசைந்தார்.
* புறப் - வெ. உ; உ.

பிள்ளை யென்று பொருள்படும். "பிள்ளை கடுப்பப் பிணம் பிறங்க வாள் எறிந்து"* என்னும் வெண்பாவில் எதிர்ப் பக்கத்தவரைக் குத்துதலும் வெட்டுதலுஞ் செய்யும் போர்ச் செய லியல்புக்குப் பிள்ளைத்தன்மை உவமிக்கப் பட்டிருத்தலாலும், இவ்வுண்மையை 'விளைவறியாத பிள் ளையை யொப்பப் பிணம் பெருக்க வீரரை வெட்டி' யென்று அவ் வெண்பாவி னுரையே தெளிவாய் எடுத்துக் காட்டுத லாலும் இங்கு ஆள் எறிந்த வீரன் ஆளெறிபிள்ளை யெனப் பட்டான். மேல் வரும் 'பிள்ளைத் தெளிவு' 'பிள்ளையாட்டு' என்னுந் துறைப் பெயர்களிலும் 'பிள்ளை' யென்னுஞ் சொல் இப் பொருளையே உணர்த்தாநிற்கும். ஆசிரியர் நச்சினார்க்கினியர் பிள்ளை யென்பதைப் பிள்ளைப் பருவத்தோ னென்று புறத்திணையியலில் † உரை கூறினாரெனின், பிள்ளைப் பருவத்தோர் போர்க்களத்திற் சேர்தல் அரிதாத லானும், மற்றும் அவருரைக்கூற்றுக்கு வேறு சான்றுகடா மூங் காணப்படாமையானும் அஃது உரையன்றென்று மறுக்க. பித்தரியல்பைப் போலப் பிள்ளைத் தன்மையை யும் ஏனையோர் செயலுக்கு உவமையாய்க் காட்டும் மர புண்மையின், பிள்ளை யென்பதை ஈண்டு உவமையாய்க் கோடலே வாய்வதா மென்க.

இனிப் 'பிள்ளைத்தெளிவு' 'பிள்ளையாட்டு' என்பன வீரர்கள் பிள்ளைத் தன்மையாற் போர்க்களத்தின் நடுவண் துடிகொட்டிக்கொண்டு தம் உடம்பிற்பட்ட புண்ணை விரும்பி வியந்து கூத்தாடுத லென்றும், பகைவருடம்பின் குடரைப் பிடுங்கித் தம் தோள்களிலே மாலையாகச் சூட்டி வேற்படையை அடி நுனியாகத் திருப்பிப் பிடித்துக் கொண்டு அந்நிலையை விரும்பிக் கூத்தாடுத லென்றுங் கொள்ளப்படும்.

புறந்தராது எதிர்த்துப் பொருது போர்க்களத்தில் வீழ்ந்து உயிரிழந்த வீரரைப் பார்த்து ஏனையோர் அவர் உயிரிழந்தபடியைச் சொல்லுதலும், மிக்க திறமாய்

---

* புறப் - வெ. உ : எ. † தொல். புறத். ரு.

உண்மையுடன் பொருத வீரன் அரசன்பாலணுகி ஏனை யோரினுந் தானே உண்மையாயுந் திறமாயும் பொருத தாகத் தனது மேம்பாட்டை யெடுத்துக் கூறுதலும் முறையே 'கையறு நிலை' 'நெடுமொழி கூற' லென்னுந் துறைகளாம்.

'காரி' யென்னுங் கரிக்குருவி வலமாகச் சென்று தான் செல்லுதலைத் தடுக்கவும் அதனையும் பொருட்படுத்தாமற் களஞ்சென்று பொருத போர்வீரனது ஆண்மையை அரசன் பாராட்டுதல், 'பிள்ளைப்பெயர்ச்சி' யென்று கூறுப.

இனி அரசனுக்காகப் போர்க்களஞ் சென்று பொருது உயிர் விடுதல் சிறப்பாமென்று அரசன் பெருமையை வீரர் மிகுத்துச் சொல்லுதல் 'வேத்தியன் மலி' பாம்.

உலகம் தோன்றியவுடன் முதன்முதலிற் றோன்றிப் புகழ்பெற்று வந்தது தமது குடியேயென்று மறவர் தமது குடியின் வரலாற்றையும் பழமையையும் பிறரறியும்படி எடுத்துக் கூறுதல் 'குடிநிலை' யென்னும் ஈற்றுத் துறை யாகுமென்க.

காந்தைத் திணைக்கென்று மேற் காட்டிய புறப் பொருள் வெண்பாமாலைத் துறைகளையெல்லாம் இனித் தொல்காப்பியனார் கருத்தோடு இயைத்து ஆராய்தலும் ஈண்டு ஒரு சிறிது வேண்டற்பாலது.

## புறத்திணை அகத்திணைகளின் இயைபு:

ஆசிரியர் தொல்காப்பியனார் எழுத்தையுஞ் சொல்லை யும் அடுத்துப் பொருளிலக்கணம் உரைக்கப் புகுந்து முதலில் அகத்திணை யிலக்கணங் கூறிப் பின்ன ரதற்கினமான புறத்திணை யிலக்கணங் கூறுகின்றாராதலின், அவர் அப் புறத்திணை யிலக்கணத்திற் பகுத்தெடுத்துக் காட்டுங் கூறு பாடுகளெல்லாம் அவர்தம் அகத்திணை யிலக்கணக் கூறு பாடுகட்கு இனமுடையனவாகவே இருத்தல் வேண்டும். அகத்திணை யிலக்கணத்தில் அவர் பகுத்தெடுத்துக் கொண்ட திணைக் கூறுபாடுகள் குறிஞ்சி, முல்லை, மருதம்,

நெய்தல், பாலை, கைக்கிளை, பெருந்திணை என ஏழாம் அகத்திணையியற்குரிய இவ்வெழுவகைப் பகுப்பு,

[1] "கைக்கிளை முதலாப் பெருந்திணை யிறுவாய்
முற்படக் கிளந்த வெழுதிணை யென்ப" *

என்னும் அகத்திணையிய னூற்பாவால் இனிது விளங்கும். தொல்காப்பியனர் பகுத்துக்காட்டிய இவ்வகத்திணைப் பகுப்புகள் ஏழுக்கும் வேருக இதுகாறுங் குறைத்தோ கூட்டியோ வகுத்துக் காட்டினர் எவரும் இலர். தொல் காப்பியத்திற்குப் பின்னெழுந்த ஏனையெல்லா இலக்கண இலக்கியங்களும் இவ்வெழுவகைப் பகுப்பினையே மேற் கொண்டு வழி மொழிகின்றன. இனித் தொல்காப்பியத் திற்கு முன்னும் இவ்வேழு பகுப்புகட்கு வேருய் அகத் திணையிலக்கணம் பகுக்கப்பட்டில தென்பதற்கு இலக்கியத் தின் பிழிசாறு ஆன அவ்விலக்கணத் தொல்காப்பியமே ஒரு பெரிய முதற்சான்ருய் நின்று நிலவுதலின், அங்ஙனமொன் றுங் கருதுதற்கில்லை. அன்றி, இன்றெவரேனும் யாமே இத் தமிழ்கூறு நிலத்திற்குப் புதிது திணைப் பகுப்புகள் காண்பே மெனப் புகுந்து அடிநுனி யெல்லாந் துருவிச்சென்று திணறித்திணறி ஆராய்ந்து நுணுகி முடிப்பராயினும், அவை தாமுந் தொல்காப்பியனர் வகுத்தமைத்த எழுதிணைப் பகுப்பிலுமே அடங்கி அதற்கு வேருகாமை கண்டு அயர் வர். இயற்கைப் பொருள்களும் வேறு கூறற்கு இன்னே வரையில் இடந் தந்தில. ஆகவே ஆசிரியர் தொல்காப் பியனர் பண்டு கண்ட இவ்வகத்திணை யெழு பகுப்புகள் சிறிதும் நிலையசையாவாய் அப்படியே நிலைபேறுற்று நின் றன வென்க.

இவ்வாறு நிலைபெயராப் பகுப்புகளாக வகுக்கப்பட்ட அகத்திணைகள் ஏழு எனவே அவற்றிற்கு இனமாயமையும் புறத்திணைப் பகுப்புகளும் ஏழாதல் வேண்டுமென்பதும்,

---

1. முன்பட - முதன்மை தோன்ற.
* தொல். அகத். க.

அவைதாமுந் தம்மின் வேறாய்க் கூட்டியோ அன்றிக் குறைத்தோ பகுத்தாராயப்படுதற்குச் சிறிதும் இடந்தராத இயற்கைப் பகுப்புகளாய்த் திகழு நீர்மையவென்பதூம் அகம்புறவறிவு வாய்ந்தாரெவர்க்குந் தெற்றென விளங்கா நிற்கும். குறிஞ்சி முதலான ஏழு அகத்திணைகட்கும் முறையே வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் முதலான ஏழு புறத்திணைகளை இன மாகக் காட்டி ஆசிரியர் தோல்காப்பியனார்,

[1]" அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்
புறத்திணை யிலக்கணந் திறப்படக் கிளப்பின்
வெட்சி தானே குறிஞ்சியது புறனே"
" வஞ்சி தானே முல்லையது புறனே"
" உழிஞை தானே மருதத்துப் புறனே"
" தும்பை தானே நெய்தலது புறனே"
" வாகை தானே பாலையது புறனே"
" காஞ்சி தானே பெருந்திணைப் புறனே"
" பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே"*

என்னும் நூற்பாக்களால் இவ்வுண்மை யியல்பினை விளங்க உரைத்தார்.

இனி அகப்பொருளுக்குப் புறப்பொருள் இனமாதலே வேண்டுமென்பதூம், அவ்வாற்றால் அகத்திணைப் பாகுபாடுக ளேழுக்கும் புறத்திணைப் பாகுபாடுகளும் ஏழாதலே வேண்டுமென்பதூங் கட்டாய மென்னையோவெனின், அவ் வியல்பினையும் ஒரு சிறிது விளக்கிக் காட்டுவாம். பண் டைத் தமிழ்ப் பெருமக்கள் உயிருணர்ச்சியையே அகப் பொருளெனவும், அஃதொழிந்த ஏனை யெல்லாவற்றையும் புறப்பொருளெனவும் வகுத்தாராய்ந்தன ரென்று முன் கட்டுரையிற் காட்டினம். இத் துணிபினைப் புரட்டுதற்கு எஞ்ஞான்றும் எவரும் முனையார். சற்று உற்றுக்காண்போ மானால் உலகத்தில் நிகழும் எல்லாச் செயல்களும் உயிரின்

1. அரில் தப - மாறுபாடு நீங்க.
* தொல். புறத். ௧, ௬, ௯, ௧௪, ௧௮, ௨௨, ௨௫.

செயல்களாகவே காணப்படுகின்றன. உயிர்களின் செயல்களெல்லாம் அவைதம்மின் உணர்ச்சிகளைக் கவ்விக் கிடக்கின்றன. உயிர்களின் உணர்ச்சி வகைகளோ ஐந்து வகைப்பட்டு நிகழும். அவைதாம் ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசையென்பனவாம். இவ்வைவகைப்பட்ட உணர்ச்சிகளும் முறையே மண் புனல் தீ காற்று வான் என்னும் ஐவகைப்பட்ட புறப்பொருள்களைப் பற்றியே நிகழும். உயிர்கட்குப் புலனாகும் புறப்பொருள்கள் இவ்வைந்து வகைகட்கும் அடங்காதனவாய் எவையும் இல்லை.

இனி இவ்வைந்து பொருள்களையும் நுகர்ந்து தம் உணர்ச்சி நிரம்புவதற்கு இவ்வைந்து பொருள்களாலும் ஆன உடம்புகளை உயிர்கள் பெற்றிருக்கின்றன. உடம்பு மண்ணாலும் நாக்கு நீராலும் கண் தீயாலும் மூக்குக் காற்றாலும் காது வெளியாலும் ஆக்கப்பட்டிருக்கின்றன. இவ்வைந்து வகைக்கு மேலாகவோ குறைவாகவோ புலனுடம்பைப் பகுத்தாராய்தல் எவரானும் கூடாமையாகும். எனவே மண் முதலான ஐந்து பொருள்களையும் மெய்முதலான ஐந்து கருவிகளின் வாயிலாக உயிர்கள் செயல்புரிந்து ஊறு முதலிய ஐந்துணர்ச்சிகளையும் பெறுகின்றனவென்க. செயல் புரியும்போது அவைதம்மின் உணர்ச்சிக்கு நேரே வருவன முறையே திண்மை தண்மை வெம்மை ஊக்கம் கலப்பு என்னும் ஐந்துணர்ச்சிகளேயாம். இவ்வுண்மை,

> "தீயின் வெம்மை செய்தோன், பொய்தீர்
> வானிற் கலப்பு வைத்தோன், மேதகு
> காலின் ஊக்கங் கண்டோன், நிழல்திகழ்
> நீரில் இன்சுவை நிகழ்ந்தோன், வெளிப்பட
> மண்ணில் திண்மை வைத்தோன்."*

என்னும் மாணிக்கமொழிகளாற் றெளியப்படும். ஞாயிற்றுக்கு ஒளியும் திங்கட்குத் தண்மையும் மாணிக்கவாசகர்

* திருவாசகம், திருவண்டப், உஉ-சு.

வேறு கூறினாராலெனின், அவைதாமும் முறையே தீயினும் நீரினும் அடங்குமாதலின் அது வினுவன்றென்க.

புலனுணர்ச்சியும் உயிருணர்ச்சியும்:

இனி இத் திண்மை முதலான ஐந்துணர்ச்சிகட்கும் ஊறு முதலான ஐந்துணர்ச்சிகட்கும் வேருக உயிர்கட்குப் பிற உணர்ச்சிகள் நிகழாவோவெனின், நிகழும். அவையே நட்பு அன்பு அறிவு காதல் அருள் என்னும் அகவுணர்ச்சிகள் ஐந்தென்க. மண் முதலான ஐந்து பொருள்களும் ஒன்றினென்றடங்காத வேறு வேறு தனிமுதற் பொருள்களாதல் போலவே, நட்பு முதலான இவ்வைந்து உணர்ச்சிகளும் ஒன்றினென்றடங்காத வேறு வேறு தனி முதனுணர்ச்சிகளாம்; மண் முதலான ஐந்திலும் ஏனைய பொருள்களெல்லாம் அடங்கி அமைதல்போல, நட்பு முதலான இவ்வைந்திலும் ஏனைய இயல்புகளெல்லாம் அடங்கியமையும். மண்முதலான ஐந்து பொருள்களையும் நுகராத உயிர்கள் எங்கும் இலவாதல்போல நட்பு முதலிய ஐந்துணர்ச்சிகளையும் உணராத உயிர்கள் எவையும் இல. ஓரறிவு முதலாக நான்கறிவு ஈருக வாய்ந்த கீழ்நிலை யுயிர்கட்கும் இம்முடிபு பொருந்துமோவெனின், ஓராற்ருற் பொருந்தும்;

மிகத் தெளிவாய் விளங்கும் ஓரறிவு முதலிய இயல்பு பற்றி ஆசிரியன் ஓரறிவுயிர் ஈரறிவுயிரெனப் பிரித்து வரைந்தோதினமையால், அவ்வுயிர்கட்கு அவையொழிந்த ஏனைய அறிவுகள் சிறிதுமில்லை யென்று கொள்ளற்க. எல்லாம் ஐந்தறிவுயிர்களேயாம். மக்களுயிர்க்குப் பகுத்தறிவென்பது ஏனையுயிர்களினும் விளங்கித் தோன்றும் இயல்பு பற்றி அவ்வறிவினை அவைதமக்கே உரியதாய்க் காட்டி 'மக்கள் தாமே ஆறறி வுயிரே'* யென்று ஆசிரியன் வரைந்தோதினுல், ஏனையுயிர்கட்குப் பகுத்தறிவு சிறிதுமே யில்லை யென்று எவருங் கொள்ளாரன்றே! ஆண்பெண் ணியல்பு

---

* தொல். மரபு. ௬௬.

கள் மக்கண்மாட்டே மிகச் செவ்வையாய் விளங்கல் பற்றி அவர்கட்கே ஆண் பெண் பால் வகுத்து ஏனைய எவற்றிற்கும் அப் பிரிவினை செய்யாமல் அவை யெல்லாவற்றையும் ஒன்று பலவாக மட்டும் வரைந்தோதினமையின், விலங்கு முதலிய கீழ்நிலை யுயிர்கட்கு அவ் வாண் பெண் வகுப்புகளில்லை யென்று எவரேனுங் கூறத் துணிவரோ? துணியாரன்றே! ஆதலால் உயிர்களெனப்பட்டவை யாவும் ஐந்தறிவுயிர்களே யாமென்று கூர்ந்தாராய்ந்து துணியப்படும். துணியவே, உயிர்களெல்லாவற்றிற்கும் மண் முதலான ஐம்பொருள்களாலும் திண்மை முதலிய ஐந்துணர்ச்சி நேரே உண்டாய், அவ்வைந்தும் ஊறு முதலான நுகர்ச்சிகளாய் மாறி நட்பு முதலான வேறு உணர்ச்சிகளைந்தையும் நுட்பமாய் விளைக்கின்றனவென் றுணரப்படும்.

இவைதம்முள் திண்மை முதலான ஐந்து புறவுணர்ச்சிகளையே வெட்சி முதலிய திணைகளென்று புறப்பொருளிலக்கணத்திலும், நட்பு முதலான ஐந்துணர்ச்சிகளையே குறிஞ்சி முதலிய திணைகளென்று அகப்பொருளிலக்கணத்திலும் ஆசிரியன்மார் கூறுவர். 'வெட்சி' யென்பதை வெட்சி யுணர்ச்சி யென்றும், 'குறிஞ்சி' யென்பதைக் குறிஞ்சி யுணர்ச்சி யென்றுங் கொள்க. இவைதம்மை விளக்கமாக வகுத்து விளக்குவாம்.

| புறம் | | கருவி | அகம் | |
|---|---|---|---|---|
| மண் | திண்மை (வெட்சி) | மெய் | ஊறு | நட்பு (குறிஞ்சி) |
| நீர் | தண்மை (வஞ்சி) | வாய் | சுவை | அன்பு (முல்லை) |
| தீ | வெம்மை(உழிஞை) | கண் | ஒளி | அறிவு (மருதம்) |
| காற்று | ஊக்கம் (தும்பை) | மூக்கு | நாற்றம் | காதல்(நெய்தல்) |
| வான் | கலப்பு (வாகை) | செவி | ஓசை | அருள் (பாலை) |

இங்குக் 'கருவி' யென்னுந் தலைப்பின்கீழ் அமைந்தவை, புறத்துப் பொருள்களை அகத்துட் செலுத்துங் கண்ணாடியை யொத்துத் திகழு நீர்மைய. 'மாயாதனு விளக்கு'*

* சிவஞானபோதம், ச : ௫.

என்னும் மெய்கண்டதேவ நாயனாரின் பொன்மொழி இங்குப் பெரிதும் நினைவுகூர்ற்பாலது. இனி இப் புறப்பொருளுணர்ச்சிக்கும் அகப்பொருளுணர்ச்சிக்கும் வேறாய் உயிர்கட்குப் பொருந்தும் உணர்ச்சி இவ்வெல்லாவற்றின் பயனான இன்பமென்பதொன்றேயாம்.

இனி, மேற்காட்டிய வாய்பாட்டிற்கு உயிர்கள் 'மண்ணின் திண்மையை மெய்ப்பொறியால் ஊறி நட்புணருகின்றன' வென்றும், 'நீரின் தண்மையை வாய்ப் பொறியாற் சுவைத்து அன்புறுகின்றன' வென்றும், 'தீயின் வெம்மையைக் கட்பொறியாற் கண்டு அறிவடைகின்றன' வென்றும், 'காற்றின் ஊக்கத்தை மூக்குப் பொறியான் முகர்ந்து காதலமைகின்றன' வென்றும், 'வானின் கலப்புணர்ச்சியைச் செவிப்பொறியாற் கேட்டு அருள் பெறுகின்றன' வென்றுங் கருத்துணர்தல் வேண்டும். இம் முறைகளையே அடிப்படையாகக் கொண்டு உலகத்தின் பல்வேறு இயற்கைகள் வாய்ந்த நாடுகளையும் அந்நாட்டிற் பயிலும் மக்களின் நாகரிகத் தன்மைகளையும் முன்னேற்றங்களையும் ஆராய்தல் மிகவும் எளிதாகும். எனவே மண் முதலான புறப்பொருள்களின் பயனெல்லாம் அவற்றோடு முறையாய்ப் பயிலப்பயிலத் திண்மை முதலிய தன்மைகளாயும் ஊறு முதலிய செயல்களாயும் நுணுகி நுணுகிச் சென்று முடிவில் நட்பு முதலிய இயல்புகளாய் அமைந்து உயிர்கட்கு இன்பந் தருகின்றனவென் றறியப்படும். மண் முதலானவைகள் உயிர்கட்கு முறைமுறையே இவ்வுணர்ச்சிகளை விளைத்து அழிந்துபோக, உயிர்களும் அவற்றைப்போல் அப்போதே அழிதலில்லாத அவற்று உணர்ச்சிகளின் வழியே என்றுமே அழிதலில்லாத நட்பு முதலிய நுண்ணுணர்ச்சி நிலைகட்கு வந்து இறுதியில் இறுதியிலின்பம் ஆர நுகருமென்க.

என்றித்துணையுங் கூறியவாற்றால், அகப்பொருட் கருத்துக்குப் புறப்பொருளமைப்புகள் இனமாகவே அமைந்திருக்கின்றன வென்பதும், அகப்பொருட் பாகுபாடுகள் எத்தனையோ அத்தனையேயாய்ப் புறப்பொருட்

பாகுபாடுகள் விளங்கித் திகழுமென்பதும் புலனாதலோடு அப் புறப்பொருள்களெல்லாம் 'உயிர்களின் உணர்ச்சி வழியே தமக்கு இனமான அகப்பொருள்களோடு நுணுகிப் பொருந்தி மாறின்றி நிற்குமென்னும் மேலோருண்மையும் நன்கு புலனாதல் காண்க. எனவே ஆசிரியர் தொல்காப்பிய னார் அகத்திணைகள் ஏழுக்கும் இனமான புறத்திணைகளை ஏழெனக் கொண்டு இனப்படுத்திக் காட்டும் இயற்கை யுண்மை நிலைபேறாய் நின்று எமக்கெல்லாம் பெரியதோர் இறும்பூதினை விளைவியாநின்றது. அவ்வரும்பெறலாசிரிய னார் அகத்துக்குக் குறிஞ்சி முதலிய ஐந்து திணைகளையும் புறத்துக்கு வெட்சி முதலிய ஐந்து திணைகளையுமே முதன்மையாய்க் கொண்டு, ஏனையிரண்டையும் அவ்வைந்தி னுள்ளுமே அடக்குவர். இவ்வியல்பு 'காஞ்சி,' 'பாடாண்' திணைக் கட்டுரைகளில் விளக்கப்படும். 'நடுவண் ஐந்திணை'* யென்று ஆசிரியர் ஐந்திணையை வேறெடுத்துக் காட்டுத லும் இதற்குப் பெருஞ்சான்றாயிற்று. ஆகவே மேற்காட் டிய உண்மைகட்குத் தொல்காப்பியனார் பாகுபாடு மாறுவதன்றென்க.

## திணை வழு :

இனி ஆசிரியர் அகத்திணையேழுக்கும் இனமாக வகுத்துக் காட்டிய புறத்திணைகள் ஏழுமே பொருத்தமாய் நிற்றல் நன்கு விளங்குதலின், அவர்க்குப் பின்னெழுந்த பன்னிருபடல முடையாரும் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியரும் அகத்திணைகள் ஏழுக்கும் இனமாகும் புறத் திணைகள் பன்னிரண்டாமென்றது அத்துணைப் பொருந் துவதன்று. அற்றன்று, ஆசிரியர் தொல்காப்பியனாருந் தமது புறத்திணையியற்கண் "வெறியறி சிறப்பின் வெவ் வாய் வேலன்"† என்னும் நூற்பாவில் ஏழு துறைகள் காட்டிக் காந்தைத் திணையை விளக்குகின்றாராலெனின், நன்கு வினாயினாய்; ஆசிரியர் ஆங்குக் காந்தையொழுக் கத்தை ஒரு தனித்திணையாக எடுத்துக் காட்டுகின்றிலர். அதனை அவர் வெட்சித் திணைக்கண் அடக்கி அவ் வெட்சி

* தொல். அகத். உ. † தொல். புறத். ரு.

யின் வழுவெனவே கொண்டார். மேலும் கரந்தை யொழுக்கம் களவின் நிகழுதலல்லாமையால், நுணுகி நோக்கும் வழி அவ்வொழுக்கம் நிரைகோடலென்னும் ஓராற்ருல் வெட்சித்திணைக்கண் அடங்குமாயினும், களவின் நிகழுங் குறிஞ்சித் திணைக்கு அது புறனுதல் செல்லாமை நன்கு விளங்கும். 'வெறியறி சிறப்பின்' என்னும் அந் நூற்பாவினுட் கூறப்படுவனவெல்லாம் ஏனையெல்லாப் புறத்திணைகளினும் அடக்கப்படுதற்குரிய வழுக்களேயாம். 'கரந்தை யென்பது ஒரு தனித்திணையாயின் அஃது அகத் திணை யேழனுள் எந்தத் திணைக்குப் புறனுமென்னும் வினு வரும்; அதற்கு விடையிறுத்தல் ஏலாமையின் கரந் தைச் செய்கையை ஒரு திணையாகக் கூறுதல் அடாதென்க.

அவ்வாருயின் ஆசிரியர் சிவஞான முனிவரர் " இவை இங்ஙனம் வேறுபடினும் புணர்ச்சி முடிபும் சொன்முடிபும் பொருண்முடிபும் வேறுபடாமையின் மரபுநிலை திரியா வாயின " என்று புறப்பொருட் பன்னிருபடலத்தையும் புறப்பொருள் வெண்பாமாலையையுந் தொல்காப்பியப் புறத்திணையியலோடு இணக்கித் தமது தொல்காப்பியப் பாயிரவிருத்தியுள் உரை கூறினமை யென்னையெனின், பன்னிருபடலம் முதலியவை கூறுங் கரந்தைக் கூற்றுத் தொல்காப்பியனுர் கருத்துக்கு மாறென்று யாமுங் கூறுகின்றிலம். மற்று அவ்வொழுக்கத்தினை ஒரு திணை யெனக் கோடலே அவர்க்கு மாருமென்றனம். இதனைச் சிவஞான முனிவருந் தமதுரையிற் காட்டுதலின், அதனுல் ஈண்டைக்காவதோ ரிழுக்கேது மில்லை யென்க. புறப் பொருள் வெண்பா மாலையில், தொல்காப்பிய அகத்திணை யியல் கூறிய ஏழு திணைகட்கு மிக்கு வரும் ஏனைத் திணைக ளெல்லாவற்றிற்கும் இங்ஙனமே கருத்துக்கொள்க.

இனிப் பன்னிரு படலம் முதலியன திணையெனக் கொண்டு விளக்காநிற்குங் கரந்தை யொழுக்கத்திற்கு வெற்றிப்பேறுதானும் உளதோவெனின், அதுதானு மில்லையென்பது புறப்பொருள் வெண்பாமாலையில் வரும் 'புண்ணொடு வருதல்' 'போர்க்களத்தொழிதல்' 'பிள்ளைத்

தெளிவு' 'கையறு நிலை' 'நெடுமொழி கூறல்' என்னுந் துறைகளாலேயே நன்கு விளங்கும். மேலும், வெட்சியார் கைப்பற்றிச் சென்ற ஆநிரையைக் கரந்தையார் மீட்டன ரென்பதற்கு ஏதொரு துறைச் செய்தியும் புறப்பொருள் வெண்பாமாலையிற் காணப்படவில்லை. வெண்பாமாலை யாசிரியர் கூறாராயினுந் தொல்காப்பியனாரே 'ஆபெயர்த் துத் தருத' லென்றொரு துறை கரந்தை யொழுக்கக் கூற்றிற் கூறினாரெனின், அற்றன்று, கரந்தையாரைச் சார்ந்த குறுநிலமன்னரும் பிறருஞ் சேர்ந்து வெட்சியார் பற்றிய நிரையை ஒரோவொருகால் மீட்டுத் தருவ ரென்றே அவர் கூறினரென்க. இதனை நச்சினார்க்கினிய ருரையிற் காண்க. அன்றிக் கரந்தை மறவரே ஒரோவொருகால் நிரைபெயர்த்தனரென்று அத் துறைத் தொடருக்குப் பொருளுரைப்பதே யாயினும் அதனாலேயே கரந்தை யொழுக்கத்திற்கு ஒரு வெற்றிப்பே றுண்டாமா றில்லை யென்க. என்னை? 'கரந்தை யொழுக்கம்' என்று எடுத் துக்கொண்டால், ஆபெயர்த்துத் தருத லென்பதனையும் அதற்கோ ருறுப்பென எடுத்துக்காட்ட வேண்டுதலி னென்பது. ஆதலாற் கரந்தை யொழுக்கம் ஒரு தனித் திணையாதற்குரிய சிறப்புடையதன் றென்பதே வலிவுடைய தென் றறிந்துகொள்க.

புறப்பொருள் வெண்பாமாலை கரந்தை யொழுக்கத் திற் கெடுத்துக் காட்டிய போர்மலைதல், வேத்தியன் மலிபு, நெடுமொழி கூறல், ஆளெறிபிள்ளை, பிள்ளைத் தெளிவு, பிள்ளைப் பெயர்ச்சி என்னுந் துறைகளாறும், தொல்காப்பியனார் அவ்வொழுக்கத்துக்குக் காட்டிய ஆரம ரோட்டல், வேந்தன் சீர்சால் சிறப்பு, தலைத்தாள் நெடு மொழி, வரு தார்த் தாங்கல், வாள் வாய்த்துக் கவிழ்தல், பிள்ளையாட்டு என்னுந் துறைகளுள் முறையே அடங்கும். ஏனைய மிகையான துறைகளாம். கரந்தை யொழுக்கத்தை ஒரு திணையாக எடுத்தமையால், அதனை விளக்குதற்குப் புறப்பொருள் வெண்பாமாலை மேற்கொண்டு சில துறை கள் காட்டினமை அது தனக்கு இயல்பேயாமென்க.

வெட்சியும் குறிஞ்சியும் :

இனி அகத்திணைக் குறிஞ்சிக்கும் அதற்கினமான புறத்திணை வெட்சிக்கும் இயல்பி லமைந்துள்ள ஒற்றுமைத் தொடர்பும் இங்கு விளக்குதற்குரியது. ஒரு திணையை யெடுத்து விளக்க வேண்டுமானால் அந்தத் திணைக்கு உரிய முதல் கரு உரிப் பொருள்களை ஆராய்தல் வேண்டும்.

"முதல்கரு உரிப்பொரு ளென்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை"*

என்றார் ஆசிரியர் தொல்காப்பியனாரும். முதற் பொருளாவன, நிலமும் பொழுதும்; கருப்பொருளாவன, தெய்வம் உணா மா மரம் முதலியன. உரிப் பொருளாவன, புணர்தல் பிரிதல் இருத்தல் முதலியன. இவற்றுள் முதன்மையாய், ஈண்டைக்கு வேண்டிய வகையாய்க் குறிஞ்சித் திணைக்குக் கொள்ளத்தகுவன, நிலமும் பொழுது மென்னும் முதற் பொருளும், பூவென்னுங் கருப்பொருளும், புணர்தலென்னும் உரிப்பொருளுமாம். அகப்பொருட் குறிஞ்சிக்கு நிலம் மலைசார்ந்த இடம்; பொழுது நள்ளிரவு; பூ அம் மலை நிலத்துப் பூ; புணர்தல் களவுப் புணர்ச்சியாகும். புறப் பொருள் வெட்சித்திணை இவ்வகத்திணைக் குறிஞ்சிக்கு இன மாதல் வேண்டுதலின், அப் புறப்பொருள் வெட்சிக்கும் அதாவது ஆநிரை கோடலென்னும் ஒழுக்கத்துக்கும் நிலம் மலைக்கானமே; பொழுது நள்ளிரவே; பூ அம் மலைக் காட்டிற் பூக்கும் வெட்சிப்பூவே; புணர்தல் களவினால் ஆநிரை கோடலே யென்க. இவ்வாற்றால் வெட்சி குறிஞ்சிக்குப் புறனாதல் கண்டுகொள்க.

புறத்திணை வெட்சிக்கும் அகத்திணைக் குறிஞ்சிக்கும் நிலம், மண்ணின் திரளையும் மண்ணினியல்பும் மிக்கு விளங் குங் காடு முரடான மலைநில மாதலின், புறப்பொரு ளரசன் மண்வேட்கையால் வெட்சி யொழுக்கம் மேற்கொண்டான்; அகப்பொருட் டலைவன் அம் மண்ணினால் உருவாகி அதனி

* தொல். அகத். ங.

னும் நுட்ப வியல்பு வாய்ந்த பெண்ணுடம்பு வேட்கையாற் குறிஞ்சி யொழுக்கம் மேற்கொண்டான்.

மண்ணினின்றும் உயிர்கட்கு நேரே உண்டாகும் உணர்ச்சி திண்மையாதலின், அத் திண்மை யெனப்படும் வலிவுணர்ச்சியினால் அரசன் போர்க்குத் தொடுத்த வெட்சி புறப்பொருளாயிற்று; அத் திண்மை யெனப்படும் நெஞ்சுறுதி வன்மையால் தலைவன் தன் தலைவியைக் களவாடுதற் கெண்ணிய குறிஞ்சி அகப்பொருளாயிற்று; போர்ச் செயல் விரும்பும் வலிவுணர்ச்சியும் தலைவியின் களவொழுக்கம் விரும்பும் நெஞ்சுறுதியு மென்னும் இரண்டுணர்ச்சிகளுந் திண்மையுணர்ச்சியே யாயினும் அவ்விரண்டி னுள்ளும் பின்னது நுட்பம் வாய்ந்ததாதலின், அஃதகமாதலும் முன்னது புறமாதலும் இயற்கையேயாதல் காண்க.

திண்மை யென்பது ஒன்றோடொன்று இணைந்து கூடி வலிவாகு மியல்பாதலின், அரசன் அயல் நாட்டையுந் தன்னாட்டொடு கூட்டுங் கூட்ட வுணர்ச்சியினால் வெட்சி மேற்கொண்டான்; தலைவன் தன்னொடு தன் தலைவியைக் கூட்டும் நட்புணர்ச்சியினாற் குறிஞ்சி மேற்கொண்டான்; அரசனது கூட்ட உணர்ச்சியினுந் தலைவனது நட்புணர்ச்சி நுணுக்க முடைத்தாத லறிக.

அரசனது போருக்கு உடம்பின் வலிமை பயனுதல் போல, தலைவன் களவொழுக்கத்துக்கு உடம்பின் ஊறு பயனாயிற்று. போர்முறை நிகழ்ச்சியில் ஓங்கிக் குத்துத லும் வெட்டுதலும் செய்யும் உடம்புவன்மையினும், களவொழுக்க நிகழ்ச்சியில் மெல்லத் தொடுதலுந் தடவுதலு மான உடம்பினூறு நுட்ப முடைத்தாத லறியற்பாலது.

ஓரிடத்திற் பகை யுணர்ச்சி முதிர முதிரவே அது நுணுகி மற்றோரிடத்தில் நட்புணர்ச்சியும் மிகுமாதலின், அரசனது பகை யுணர்ச்சி புறமாயிற்று; தலைவனது நட்புணர்ச்சி அகமாயிற்றென்க.

இவ்வாற்றால் வெட்சிக்குங் குறிஞ்சிக்கும் அகப்புறப் பொருளாக மேலெடுத்துக் காட்டிய மண் திண்மை முதலாயின ஒன்றற்கொன்று இனமாதல் தெளியப்படும்.

மண்ணின் பொருட் பயிற்சி வெட்சி யென்னுந் திண்மை யுணர்ச்சியாய் நுணுகி ஊற்றுச் செயலாற் குறிஞ்சி யென்னும் நட்புணர்ச்சியாய்ப் பின்னும் நுணுகிப் புறப்பொருட் டலைவனாயிருந்த அரசன் அகப்பொருட்டலைவனாய் மாற அவனுக்கு இன்பம் விளைத்துநிற்குமென்க. மலைக்கானங்களில் விலங்குகளை வேட்டையாடச் சென்ற அரசன் ஆங்கு விலங்கொடு போர் செய்து புறவுணர்ச்சி மிக்குப் புறப்பொருட் டலைவனாயிருந்து பின்னர் அவ்வுணர்ச்சி நுணுக நுணுக ஆங்கே அப்பொழுதே தன் தலைவியொடு களவிலொழுகி அகவுணர்ச்சி மிக்கு அகப்பொருட்டலைவனாய் விளங்கும் இயற்கையும், வேட்டமேற் சென்ற அரசன் ஆங்கொரு பொழிற்கண் தன் தலைவியைக் கண்டு இயற்கைப் புணர்ச்சி யெய்தினு னென்று அவ்வியல்பினை யெடுத்து ஒரு வரலாறாகத் தமிழிலக்கியங்க ளெல்லாம் ஒரு வாய் பட்டாற்போல் நவலுதலும், அங்ஙனமே அவ் வரலாறுகள் நிகழ்ச்சியில் இயற்கையாய் நிகழ்தலும் அகத்திணைக் குறிஞ்சிக்கும் புறத்திணை வெட்சிக்கும் இனமிருக்கும் ஒற்றுமை யுண்மையைத் தெற்றென விளக்கிநிற்றலுங் காண்க.

---

## ௩. வஞ்சித் திணை

[பொருள் விருப்பத்தால் தகுதி மதியாத பகைவரை அடக்கி அவரது செருக்கை அவிக்கும்பொருட்டுப் போர் எதிர்தல்.]

தண்டத் தலைவருந் தலைத்தார்ச் சேனையும்
வெண்டலைப் புணரியின் விளிம்புசூழ் போத
மலைமுதுகு நெளிய நிலைநாடு அதர்பட
உலக மன்னவன் ஒருங்குடன் சென்று.

—சிலப். கால்கோட். ௮௦-௩.

'சேனைத் தலைவர்களும் சிறந்த அணிவகுப்பையுடைய கொடிப் படைகளும் மலைகளின் முதுகு நெளியவும் நிலைத்த

வெளிநிலமெல்லாம் வழியுண்டாகவும் நீரலையின் வெள்ளிய தலையைப் பொருந்திய கடலின் ஓரமே சூழ்ந்துபோக, உலகத்தையாளும் அரசன் அவற்றோடு ஒன்றாய்ப் போய்' என்க.

'தார்' என்பதை 'அணிவகுப்புச் சேனை' யெனவும், 'கொடிகளையுடைய சேனை' யெனவும் மொழிந்து கொள்க. அச் சொல்லுக்கு இப்பொருளுண்மை,

'தாரே முன்செல் கொடிப்படை யாகும்' *

என்னும் பிங்கலந்தையாற் றெளியப்படும். 'மலை முதுகு நெளிய' வென்று முன் வந்தமையின் 'நிலநா' டென்பது வெளிநிலமென் றுரைக்கப்பட்டது. நாடென்பதை நாடெங்குமுள்ள வெளிநிலமென் றுரைத்துக் கொள்க.

## வஞ்சித்திணையின் பொருள் வரம்பு :

வெட்சியார் கைப்பற்றிச் சென்ற ஆனிரையை மீட்டற்குக் கரந்தையார் தம்மால் இயன்றவரையில் முயன்றனரேனும், அவர்கள் முன் முயற்சிகளும் முன்னேற்பாடுகளும் இலராயொழிந்தமையின் தங் கருத்து நிறைவேறப் பெற்றிலர். ஆதலால் ஆக்களை வெட்சியார் கைப்பற்றிச் செல்லவே அவற்றை அவர்கட்குப் பறிகொடுத்து வறிதே மீண்டனர். இஃதறிந்த அரசன் தனது மண்ணை வேட்டுத் தன்னாட்டு ஆ கவர்ந்த அப் பகைப் புலத்து அரசன்மேற் சினமிகுதியுடையனாய்த் தன்னை முன்னேற்பாடுகள் முதலியவற்றால் இப்போது நன்றாய் வலுச்செய்துகொண்டு கொடும்போர் புரிதற்கு வஞ்சிசூடிக் கறுத்தெழுவானாயினன். இங்ஙனம் பகைப்புலத் தரசனைப் பொருது வெற்றிகோடல் குறித்துப் போர்மேற் செல்லுதலே வஞ்சித்திணை யெனப்படும்.

---

* பிங்கலந். க : ச0ரு.

[1] "வஞ்சி தானே முல்லையது புறனே
எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித் தன்றே"*

என்று ஆசிரியர் தொல்காப்பியனார் வஞ்சி யொழுக்கம் இன்னதென்பதை மிகத் தெளிவாய் எடுத்தோதினார்.

இதனைப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் சிறிது மயங்கக் கொண்டார். நச்சினார்க்கினியர் மேற்காட்டிய தொல்காப்பியனார் நூற்பாவுக்கு உரை கூறுகின்றுழி, 'இது தம்முண் மாறுபாடு கருதி வெட்சித் திணையை நிகழ்த்திய இருபெரு வேந்தருள் தோற்றோனொருவன் ஒருவன்மேற் செல்லும் வஞ்சித்திணை' யென்று 'வஞ்சி' இன்னதென் பதைப் பற்றிய தமது துணிபினை விளங்க உரைத்தார். 'மண்ணை நச்சுதலையுடைய வேந்தனை மற்றொரு வேந்தன் அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தது' என்று மேற் கருத்தோடு ஒப்பவே ஆசிரியர் இளம்பூரணனாருரையும் அந் நூற்பாவுக்கு முதலிலேயே அமைந்திருக்கின்றது. ஆகத் தொல்காப்பியனார் நூற்பாக் கூற்றும், அதனை இன்ன தென்று விளங்கவைத்தற் கெழுந்த இவ்விருபேருரையாசிரி யரின் உரைக்கூற்றுமொழிகளும், தனது மண்ணை விரும்பி மாறுகித் தன்னைக் கறுவிய பகையரசனை அக் கறுவு தீர்த்து அடக்குதல் கருதி அக் கருத் தொன்றே ஏதுவாகப் போர் மேற் செல்லும் மாற்றரசனொருவன் ஒழுக்கமே 'வஞ்சித் திணை'யா மென்பதை அரண்கோலி நிறுவுகின்றனவன்றி, அயலரசர் எவருந் தன்னைச் சினப்பியாதவழி தானே அவ்வரசர்தம் மண்ணை விரும்பி அவ்விருப்பமே ஏதுவாக அவன்மேற் படையெடுத்துச் செல்லுகை 'வஞ்சித்திணை'யா மென்று ஏதும் நிறுவுகின்றில.

**சில நிகழ்ச்சிகள்:**

இனி இவ் வஞ்சித்திணைக் குறிப்புடைய அரிய பழந் தமிழ்ப் பாட்டுகளெல்லாம், திணைக்கருத்துருவி ஆராய்

---

1. புறன் - புறப்பொருள். அடல் குறித்தன்று - வெல் லுதல் கருதியது.

* தொல். புறத். ௬.

வார்க்கு மேலுண்மையையே வரைந்து கூறுவனவாய்க் காணப்படுதலுங் கருத்திற் பெரிதும் பதிக்கற்பாலது. அவற்றுட் சில ஈண்டெடுத்துக் காட்டுதும்: ஆசிரியர் கோவூர்கிழாரென்னும் பண்டை நல்லிசைப் பெரும்புலவர் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் என்னுஞ் சோழ வேந்தனைப் பாட்டுக் கூறிச் சிறப்பிக்கப் புகுந்து தாங் கூறும் அச் சிறப்புரைக்கண் அவன்றன் பிறமையை வஞ்சி யொழுக்கத்தின் மேலதாய் வைத்து,

[1] "பெருங்கலக் குற்றன்றால் தானே காற்றோடு
எரிநிகழ்ந் தன்ன செலவின்
செருமிகு வளவ, நின் சினை இயோர் நாடே" *

என்று இசைத்து, 'வளவ, நின்னைச் சினம் வரும்படி செய்த பகைநாட்டின்மேல் நீ படையெடுத்துச் செல்லு கையினாலே அந்நாடு பெரிதுங் கலக்குற்றது' என்று சிறப் பிக்கின்றார். இதன்கண் தன்மேற் கறுவுகொண்டு தன் னைச் சினப்பித்த பகையரசன்மேல் அவ்வரசன் போர் மேற் சேறலையே வஞ்சியொழுக்கக் கருத்தாக அவ் வாசிரி யர் பெருமகனார் விளங்க எடுத்துரைத்தமை காண்க.

இன்னும், சேரன் செங்குட்டுவன் என்னுந் தமிழ்நாட் டுச் சேர மன்னன் பொற்கோட்டிமயஞ் சென்று கண்ண கிக் கடவுட்குக் கற்கொள்ளல் வேண்டி யெழுந்த ஞான்று, ஆண்டுள்ள வடவாரிய வரசர் தன்போன்ற தமிழரசரை இகழ்ந்தாரென்னும் எண்ணத்தினால் அவர்களுஞ் செருக் கினை அறவே அடல் குறித்து வஞ்சிசூடிப் படையெடுத் துச் செல்வானாயினன். இங்ஙனஞ் செங்குட்டுவன் பகை வரை அடல்குறித்துப் போர்மேற் சேறலையே ஆசிரியர் இளங்கோவடிகள் வஞ்சியொழுக்கமென் றெடுத்து,

---

1. நிகழ்ந்தன்ன - கலந்து வீசினாற் போன்ற. செலவு - போக்கு.

* புறம். சக.

[1] "வடதிசை மருங்கின் மன்னர்தம் முடித்தலைக்
கடவுள் எழுதவோர் கற்கொண் டல்லது
வறிது மீளுமென் வாய்வா ளாகிற்......
குடிநடுக் குறாஉங் கோலே னாகென......
புரைதீர் வஞ்சி போந்தையிற் றொடுப்போன்." *

என்று தமது சிலப்பதிகாரக் காதையிற் றெளிவாய் விளக்கினார். அற்றன்று, கண்ணகிக்குக் கற்கோடலொன்றே கருதி மலையரசனொடு மலைவேமென்று குட்டுவன் கூறுதலை அடிகள் காட்சிக்காதையில் வஞ்சித் திணைப் படுத்துக் கூறு கின்றாரெனின், அதனையும் ஒரு சிறிது விளக்குவாம்.

செங்குட்டுவன் மலைவளங் காண்டல் விரும்பித் தேவி வேண்மாளோடுந் தம்பி இளங்கோவடிகளோடுங் காவலர் சூழ மலைக்குச் சென்று ஆண்டுக் கண்ணகி செய்தியைக் குன்றக் குறவராற் கழுமக்கேட்டு அவட்குத் திருவுரு வமைத்துக் கோயில் சமைக்கக் கருதித் தன் அமைச்சரை நோக்கியபோது, அவரும் கண்ணகிக்குத் திருவுருவமைப்ப தாயின் அதற்குப் பொதியிலிற் கற்கொண்டு காவிரிக்கண் நீர்ப்படுத்தலேனும் இமயத்திற் கற்கொண்டு கங்கைக்கண் நீர்ப்படுத்தலேனுந் தகவுடைத் தென்றனர்; அது கேட்ட குட்டுவன் 'எம்போன்ற சேரர்குடிப் பிறந்தார்க் குப் பொதிய மலையிற் கல்கொண்டு காவிரியாற்றில் நீராட்டு தல் அத்துணைச் சிறப்பன்று; இமயத்திற் கொண்டு கங் கைக்கட் படுத்தலே வீரராகிய எமக்குச் சிறப்பாம்; ஆக லால் இமயத்திலேயே கற்கொளக் கடவேம்; அங்ஙனம் ஆண்டுக் கற்கொளற்கு அம் மலையரசன் இணங்கானாயின் வஞ்சி சூடி மலைந்து கொள்வோம்' என்றனன். இங் ஙனஞ் செங்குட்டுவன் வஞ்சி யெழுச்சி தோன்ற வீரமா யுரைத்த இப்பகுதியைச் சிலப்பதிகார ஆசிரியர்,

---

1. வாய் வாள் - வாய்த்தலையுடைய வாள். வஞ்சி - வஞ்சிப் பூவை. போந்தையின் - பனந் தோட்டுடன்.

* சிலப். கால்கோட். ௩-௫, ௪௮, ௪௯.

[1]" இருபிறப் பாளரொடு பெருமலை யரசன்
மடவதின் மாண்ட மாபெரும் பத்தினிக்
கடவு ளெழுதவோர் கற்று ரானெனின்......
வேங்கையொடு தொடுத்த விளங்குவிறன் மாலை
மேம்பட மலைதலுங் காண்குவ லீங்கென......
பூவா வஞ்சிப் பொன்னகர்ப் புறத்தென்
வாய்வாள் மலைந்த வஞ்சிசூ டுதும்" *

என்று காட்சிக் காதையிற் கூறினர்.

இதன்கட் செங்குட்டுவன் கற்கோடற் பொருட்டு மலையரசனை மலைவான் கருதி 'வஞ்சி சூடுதும்' என்று னல்ல னென்பதும், மற்றுத் தான் கற்கொள்ளுதற்கு மலையரசன் இணங்கானாயின், அங்ஙனமவனை இணங்காமைக்கு ஏவிய அவன்றன் றீய செருக்கை அடல்குறித்தே 'வஞ்சி சூடுது' மென்று னென்பதுமே வெள்ளிடை மலையென விளங்கிக் கிடக்கின்றன. மலையரசன் இணங்கியவழி ஆங்குக் குட்டுவனுக்கு வஞ்சி யொழுக்கம் ஏதுமில்லை. மேலும் அவன் முதலில் தானாகவே கற்கொள்ளல் கருத்தாய் வஞ்சி சூடுவே மென்றானல்லன். இமயத்துக் கற்கொள்ளுத லென்னும் போராற்றற் கறிகுறியான தனது போராண்மைச் செயலைத் தடுத்துத் தன்னைச் சினப்பித்தவழி, அங்ஙனஞ் சினப்பித்த அம் மலையரசனது செருக்கை வஞ்சிசூடி மலைந்து அறவே அடக்கி அம்முறையே தனது போராற்றலை உயர்த்துக் காட்டி நிலைநிறுத்துது மென்றனன். ஆகவே செங்குட்டுவன் 'வஞ்சிசூடுது' மென்றதன் கருத்துக் கற்கோடலன்றாய்த் தன்னைக் கறுவி மறியும் மலையரசன் ஆணவத்தை அடல்குறித்ததே யாமென்க.

இங்ஙனம் பகையரசன் கறுவு தீர்த்தற்கு அவன்மேற் செலலான ஈதொன்றே வஞ்சித்திணைப் பொருள்வரம்பா மென்பது குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் கடை

---

1. மடவதின் - இளமையிலேயே. வேங்கையொடு - வேங்கைப் பூவால். பூவா வஞ்சி - வஞ்சி யென்னும் ஊர்.

* சிலப். காட்சிக். கஉ௮-கரு௦, கங௧-கச௦, கச௮-௯.

யெழு வள்ளல்களி லொருவனான தன் பகைவன் மலையமான் திருமுடிக் காரியின் இளநலம் வாய்ந்த மக்களிருவரைக் கைப்பற்றிக் கொணர்ந்து யானையின் காலடிக்கீழ் இடருறும்படி இடத் தொடங்கிக் கறுவு தீர்த்துக்கொள்ளும் மேற்செலவு ஒன்றே குறித்த 'நீயே புறவின் அல்லலன்றியு' மென்னுங் கோவூர்கிழார் பாட்டொன்று வஞ்சித் திணைத் துறைமேலதாய்ப் புறநானூற்றுள் வருதலானும் இன்னும் விளக்கமாய்த் தட்டுத் தடையின்றி இனிது பெறப்படுமென்க.

இவ்வளவும் பகையரசனைக் கறுவுதீர்த் தடக்குதலொன்றே கருதிப் போர்மேற் செல்லுதலே வஞ்சித் திணையின் உண்மைக் கருத்தாமென்பதை இனிது விளக்கா நிற்பவும், புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியரோ வெனின், ஆசிரியர் தொல்காப்பியனார் வரம்பளந்தியற்றிய மேல் நூற்பாவின் நுண்முறைப் போக்கினையும், மற்றதனோ டொத்தியலும் ஏனைப் பழந் தமிழ்ப் பாட்டுகளின் ஒருமுகப் போக்கினையும் அளந்துணரமாட்டாது சிறிதே வழுவிப் பகைவர்தம் மண்கொள்ளல் கருத்தாகப் போர் மேற் சேறலை வஞ்சித்திணையின் முதன்மைப் பொருளென வைத்து,

> "வாடாவஞ்சி தலைமலைந்து
> கூடார்மண் கொளல்குறித்தன்று"

என்று கொளுவுரைத்து இழுக்கினர். மண்ணசைவேந்தனை அடல்குறித்தலே வஞ்சியென்று முதலாசிரியர் கூறினாராக, கூடார் மண் கொளல் குறித்தலே அஃதென்று பின்னாசிரியர் கூறுதல் வஞ்சித்திணையின் நோக்கத்தைப் பிறழ்த்தியவாறா மென்க. வஞ்சியரசன் உள்ளவியற்கையும் அஞ்ஞான்று அஃதன்றென்பதை மேற்காட்டிய செங்குட்டுவன் படைச்செலவு நோக்கத்தோடு வைத்துக் கண்டுகொள்க.

பகைவனை அடல்குறித்துச் செல்லும்போது அவன்றன் மண்ணைக் கொள்ளும் ஒருகால் நேரலாம். ஆனல் அம் மண்கொளலென்பது வஞ்சித்திணையரசன் நோக்க

மன்றுகாண். எனவே இக் கருத்துக்கு மாறாக ஆசிரியர் நச்சினார்க்கினியரும் புறத்திணையியலில் 'இருபெரு வேந்தற்கும் இடையீடாகிய மண்ணிடத்து வேட்கையானே' என்று நூற்பாக்கூற்றுக்கு ஒரு வரம்பு காட்டும் பொருட்பேது மில்லாமல் உரையுரைக்கும் ஒரோவோ ரிடத்து வழீஇய உரையும் ஈண்டு ஏற்றுக்கொள்ளுதற் கில்லை. ஆசிரியர் இளம்பூரணர் மட்டும் இதன்கண் மிக விழிப்பாய்ச் சென்று நூற்பாக் கருத்தினைக் கவ்வி அது கிடந்தவாறே உரை காட்டினார். ஆகவே வஞ்சியொழுக்கம் இன்னதென்பதற்கு ஆசிரியர் தொல்காப்பியனார்தம் 'எஞ்சா மண்ணசை' யென்னும் நூற்பாவும், அதனைப் பின்பற்றியியன்ற பழந் தமிழ்ப் பாட்டுகளுமே அரணாகுமென்று கொள்க வென்பது.

**துறைப் பிரிவுகள் :**

இனி ஆசிரியர் இத் திணைக்குத் துறைகள் கூறுமாறு,

" இயங்குபடை யரவம், எரிபரந் தெடுத்தல்,
வயங்கல் எய்திய பெருமை யானும்,
கொடுத்தல் எய்திய கொடைமை யானும்,
அடுத்துஊர்ந்து அட்ட கொற்றத் தானும்,
மாராயம் பெற்ற நெடுமொழி யானும்,
பொருளின்று உய்த்த பேராண் பக்கமும்,
வருவிசைப் புனலைக் கற்சிறை போல
ஒருவன் தாங்கிய பெருமை யானும்,
பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலையும்,
வென்றோர் விளக்கமும், தோற்றோர் தேய்வும்,
குன்றாச் சிறப்பிற் கொற்ற வள்ளையும்,
அழிபடை தட்டோர் தழிஞ்சியொடு தொகைஇக்
கழிபெருஞ் சிறப்பின் துறைபதின் மூன்றே "*

என்பது. இவற்றிற் குரியவாக வெண்பாமாலைத் துறைப் பெயர்களை முறையே வஞ்சி யரவம், உழபுலவஞ்சி, நல்லிசை வஞ்சி, கொடை வஞ்சி, நெடுமொழிவஞ்சி, மாராய வஞ்சி, பேராண்வஞ்சி, ஒருதனி நிலை, பெருஞ்சோற்று

* தொல். புறத். கூ.

நிலை, இருவகைக் கொற்றவஞ்சி, கொற்றவள்ளை, தழிஞ்சி யென்று பொருத்திக் கூறலாம். எனினும் இவை மேற் றுறைகளோடு அத்துணை நேராய்ப் பொருந்துவன அல்ல. என்னை? இவற்றின் கருத்து விளக்கங்கள் புறப்பொருள் வெண்பாமாலையில் தொல்காப்பியத் துறை விளக்கங்க ளோடு சிறிது மாறுற்று வேறு வேறு வகையாய்க் கூறப் பெற் றிருக்கின்றமையா லென்பது.

'இயங்குபடை யரவ' மென்பது வஞ்சியரசன் புறப்பா டுணர்த்தும். அரசன் புறப்படும்போது குடையையும் வாளையும் வெளிப்படுத்தி முன்னே செல்ல விடுதல் மரபாதலின், அது குறித்த 'குடைநிலை' 'வாணிலை' யென்னுந் துறைகளும், கொற்றவையைத் துணை கொள் ளுதலான 'கொற்றவை நிலை' யென்னுந் துறையும் வெண்பாமாலையிற் கூறப்படும். தொல்காப்பியனார் இவற் றைப் பிரித்துக் கூருது 'இயங்குபடை யரவ' மென்று ஈண்டு ஒன்றே கூறி அதன்கண் அடக்குவர்; ஏனென்றால் குடையும் வாளும் முதலியவற்றை எடுத்துக் கூறும் முதன்மை உழிஞைத் திணைக்கண் ஏற்படுதலின், ஆசிரியர் அவற்றை ஆண்டெடுத்தோதுதல் கருதினரென்க.

'எரிபரந்தெடுத்தல்' பகைவர் நாட்டினை எரித்தல் குறித்தது. தீப்பற்றி எரியுங்கால் அப் பகைவர் நாடு தடுமாறி நிற்குமாதலின், இச்செயலை 'உழபுல வஞ்சி' யென்று வெண்பாமாலை கூறிற்று. வினைத்தொகையாய், 'உழ' லென்னும் முதனிலை லகரவொற்றுக் கெட்டு உழ வென்று நின்றதென்க. பகையரசன் நாட்டினை வஞ்சி யரசன் இவ்வாறு தீயிட்டுச் சுடும் போர்முறைச் செயல்,

> [1]"ஏம நன்னாடு ஒள்ளெரி யூட்டினை
> நாம நல்லமர் செய்ய"*

என்னும் புறப்பாட்டினானுந் தெளியப்படும். அரசன் போர் செய்தற்கு முன் பகைவர் நாட்டினை எரியூட்டிக் கொளுத்

1. ஏமம் - காவலையுடைய.
* புறம். ௬௬.

துதல் அவன்றனக்குள்ள கறுவெண்ணத்தின் முனைப் பினைக் காட்டுகின்றது.

பண்டைத் தமிழரசர் பகைவர் நாட்டினைத் தீமூட்டி யழிக்குங்கால், அந்நாட்டு முதியோர் இளையோர் அறவோர் மாட்டாதார் ஆன் பெண் முதலிய நல்லோரைத் துன்புறுத்தாது விலக்கி அவ்வரசனுக்கு மறவராயி னார்க்கே பெரும்பான்மையும் இறுதி விளைக்க முனைவர். இவ்வறப்போர் முறையை வெட்சித்திணைக் கட்டுரையினும் விளக்கினேம். கண்ணகிநல்லாள் மதுரையை எரியூட்டிய போது அவ்வெரி பற்றிய சார்பினை ஆசிரியர் இளங்கோ வடிகளும்,

> " அறவோர் மருங்கின் அழற்கொடி விடாது
> மறவோர் சேரி மயங்கெரி மண்ட "*

என்று தீத்திறத்தார் பக்கமே எடுத்துக் காட்டினமை காண்க. எனவே பண்டைத் தமிழரசரது படைச்செலவின் கண் எரியூட்டு நிகழ்த்துதலின் நோக்கம் ஊரிடத்தை யழித்தலே யன்றிப் பெரும்பான்மையும் அந் நாட்டு உயிர்களான குடிமக்களை யழித்தல் அன்றென்பது நன்கு விளங்கும். அங்ஙனம் ஊரை யெரிக்கும்போது மறவ ராகிய எதிர்க்குந் திறத்தார் அதன்கட் பட்டுச் சாதலும், அவரை இவரும் ஏது நேர்ந்துழி முனைந்து அகப்படுத்த லும் இயல்பேயாம். என்றாலும், பொதுவாக இல்லங்கள் மன்றங்கள் சோலைகள் வயல்கள் முதலாகத் தோற்றத்திற் கிடமான ஊரிடங்களை யெரித்துப் பாழாக்குதலே அக் காலத்துப் பழந்தமிழரசரின் எரியூட்டுந் திறமென்பது,

> [1] " மயங்குவள்ளை மலராம்பல்
> பனிப்பகன்றை கனிப்பாகல்
> கரும்பல்லது காடறியாப்
> பெருந்தணபணை பாழாக
> ஏம நன்னாடு ஒள்ளெரி யூட்டினை "†

---

1. வள்ளை - வள்ளைக்கொடி.
* சிலப். அழற். ககரு - ௬.
† புறம். கசு.

என்னும் புறச் செய்யுளிற் பிரிந்து விளங்கும். 'காவெரி யூட்டிய'* வென்னுஞ் சிறுபாணடியும் இதனை வலியுறுத்தும்.

இனி, 'எரிபரந்தெடுத்த' லென்று தொல்காப்பியனார் கூறிய துறைச் செய்தியைப் புறப்பொருள் வெண்பா மாலை இரண்டு வகையாகப் பிரித்துக்கொண்டு, எரித்தழிக்குஞ் செயலைமட்டும் 'உழபுலவஞ்சி' யென்றும், அங்ஙனம் அழித்துக் கொள்ளை கொள்ளுஞ் செயலை 'மழபுலவஞ்சி' யென்றும் இரண்டு துறைகளாகக் கூறும். 'மழபுல' மென்றது, இளைத்த நாடு: மழமென்பது இளமை; தனக்கு இளைத்த நாடென்க. அந்நாட்டின்கட் காட்டும் வஞ்சி யொழுக்கம் 'மழபுலவஞ்சி' யெனப்பட்டது. இனி அவ் 'வுழபுலவஞ்சி'யையும், இரண்டு படுத்துப் போர்க்கு முன் எரித்தலை 'உழபுலவஞ்சி' யென்றும், மற்றதற்குப் பின்னொரு முறையும் எரித்தலைப் 'பெருவஞ்சி' யென்றுங் கூறும். போர்க்குப் பின்னரெரித்தல் அரசனது பெருஞ் சினத்தால் நிகழ்வதாதலின், 'பெருவஞ்சி'யெனப்பட்டது. போர்க்கு முன்பே யெரித்தல் வயல் சோலை முதலிய ஊர்ப்புறத்தையென்றும், பின்னுலெரித்தல் இல்லம் மன்றம் என்னும் ஊரகத்தை யென்றுங் கொள்ளல் வேண்டும்.

இனி, 'வயங்கல் எய்திய பெருமை' யென்றது, படைச்செலவில் ஏனைத் துணையரசர் தனக்குத் தத்தம் படையுடன் உதவிக்கு வந்தாராக, அவர் நடுவே வஞ்சியரசன் தலைவனுய்த் தோன்றிப் பொலியும் பெருமை யாகும். பாசறையில் நின்று பொலிதலும் இதுவாதலின், 'பாசறை நிலை' யென்றொன்று கொள்ளும் வெண்பாமாலைத் துறை இதன்கண் அடங்கும்.

போர்க்கு முன்பு தன்னை ஏத்தும் பரிசிலர்க்கு அரசன் பொருளளித்தல் 'கொடுத்தல் எய்திய கொடைமை'; இப் பரிசிலர் போன்றுரை இனிய நிலையில் வைத்துப் போர்மேற் செல்லல்வேண்டுமென்பது அரசன் கருத்து. படையாளர்க்குப் படைக்கல முதலியன கொடுத்தலும் இதுவே துறையாக அடக்கினர் நச்சினர்க்கினியர்.

---

* சிறுபாண். உகஅ.

வீரர்கள், அரசன் போர்மேற் செல்லும்போதே அவனினும் பரபரப்பு மிக்கவராய் முனைந்து, அப் பகைவர் நாடு சூழக் காவல் புரிந்து நின்றோரை மேற்சென்று கோறல் 'அடுத்து ஊர்ந்து அட்ட கொற்ற'மாகும். துறை படிந்து கிடக்குங் களிறும் மாவுங் கோறலும் புறஞ்சேரி யைச் சுடுதலும் இஃதென்க. இது 'மேற்சேற'லின் விரைவுக் குறிப்பினையுடைமையின், இதனை 'வஞ்சி'யென் றூர். வெண்பாமாலை யாசிரியர், கொல்லும் நிகழ்ச்சியை எடுத்துக்காட்டாமல், ஆண்டு வீரரெல்லாரும் அவனொடு ஆண்மை கூறுவர் என்றுமட்டுங் கூறி இதனை 'நெடுமொழி வஞ்சி' யென்பர்.

போர்வல்லராய் நின்ற வீரர் அரசன்மாட்டு ஏனாதி முதலிய பட்டங்களும் மருதநிலம் முதலிய வளங்களும் பெற்றமையாற் றலைமைபெற்று ஏனைப் படைகளை நடத்து தற்பொருட்டுக் கூறுந் தலைமை மொழிகள் 'மாராயம் பெற்ற நெடுமொழி'; படைவீரரின் முதியோரைப் பற்றிய புகழை யெடுத்து ஆண்டுச் சொல்லி மாராயம் பெறுதலும் நிகழும்; இதனை 'முதுமொழி வஞ்சி' யென்னுந் துறை யாய் வேறெடுத்து விளக்குவர் வெண்பாமாலையுடையார். வீரர் இங்ஙனம் பட்டங்களும் நிலங்களும் பெறும் மாராய மென்பது இக் காலத்துப் போர் முறைகளிலும் உண்டு. நச்சினார்க்கினியர், புண்பட்ட வீரரை அவர் முன்னர்ச் செய்த படைவலங் கூறிப் புகழ்வன போல்வனவும் 'முதுமொழி வஞ்சி' யென்பர்.

'பொருளின்று உய்த்த பேராண்பக்க' மென்பது பகையரசனை ஒரு பொருளாய் மதியாது வஞ்சிவேந்தன் படைசெலுத்தும் பேராண்மையைக் குறிக்கும்.

'கற்சிறைபோல ஒருவன் தாங்கிய பெருமை'யென் பது, போர் மிக மும்முரமாய் நடக்கும்போது தன் படை தளர்தலைக் காணும் வீரக்கொதிப்பு மிக்க வீரனொருவன், பெருகிவரும் நீர் வெள்ளத்தை இடையே ஒரு கல்லணை நின்று தடுத்தாற்போல மேற்பெருகி வருஞ் சேனை வெள் ளத்தைத் தானே முன்னின்று தடுக்கும் பெருவீரச் செய்

கையை யுணர்த்துவதாம். இஃதும் படைமேற் செலவின் முனைந்த நிலையைக் குறித்தலின் 'வஞ்சி' யாயிற்று.

இனி, வீரர்கட்குப் பெருஞ்சோறளித்தல் 'பெருஞ் சோற்று நிலை' யாம்.

வென்றவர் விளங்கி நிற்றல் 'வென்றோர் விளக்க' மென்றும், தோற்றோர் தேய்ந்து நிற்றல் 'தோற்றோர் தேய்' வென்றுங் கூறப்படுகின்றன. இவ்விரண்டும் வெண்பா மாலையிற் 'கொற்றவஞ்சி' யென்னும் ஒரே துறையாற் கூறப்படும்.

அரசனது வெற்றியினாற் பகைவர் நாடு அழிதற்கிரங் கித் தோற்றவனை விளங்கப் பாடுதல் 'கொற்ற வள்ளை' யென்க. 'கொற்றவள்ளை' யென்பது உரற்பாட்டு' என் றார் நச்சினார்க்கினியர். இதனைத் 'தோற்ற கொற்றவன் கொடுக்குந் திறை' யென்றார் இளம்பூரணர்.

'தழிஞ்சி' யென்பது, போர்க்களத்துப்பட்ட வீர ரின் சுற்றத்தவர்களை அரசன் தழுவிப் பாதுகாத்தல். 'தழிச்சுதல் தழிஞ்சியாயிற்' றென்பது நச்சினார்க்கினியம். வெண்பாமாலையிற் 'குறுவஞ்சி' யென்று வந்த துறையு மிது; குறுமை, அழகு; வஞ்சியரசனையினானுக்கு இஃதே அழகாதலின், 'குறுவஞ்சி' யெனப்பட்டது.

இங்குக் கூட்டிய துறைகள் பதின்மூன்றும் போர்க்கு முன்னும் பின்னும் நிகழ்வனவாமென் றறிதல் வேண்டும். போர்ச்செய்தி தும்பைத்திணையுள் வரும். போர்க்குப் பின் னால் வாகையரசன் தன் நாடு மீளல் முதலியன, முதலிற் பகைநாடு செல்லுஞ் செலவு முதலியவற்றோடு இனப்பட் டனவாதலின், அச் செய்திகளை ஆசிரியர் இவ் வஞ்சியுள் அடக்கினார்.

பாசறை இருப்பு :

இனிப் போர்மேற் சென்ற வஞ்சியரசன் ஆங்குப் பாசறை அமைத்துக்கொண்டு மேற் போர் செய்தற்குரிய சூழ்ச்சிகளையும் ஏற்பாடுகளையுஞ் செய்து, அப் போர் தொடங்குநேரம் வரையில் இந் நாற்படைகளோடுங் காத்

திருப்பான். அரசன் பகலெல்லாஞ் செலவினை மேற்கொண்டு கடுகி நெடுந்தொலைவு சென்று மாலைக்காலத்திற் பாசறை அமைத்திருப்பன். வேனிற் பருவமல்லது ஏனைப் பருவங்கள் இப் போர்மேற் செலவுக்கு அத்துணைப் பொருந்துவன அல்லவாதலின், அவ் வேனிற் காலமெல்லாம் பாசறையிருப்பினை மேற்கொள்ளும் அரசனுக்கு அவ்விருப்பு முற்றுங் காலம் வேனிற்கால இறுதியுங் கார்காலத் தொடக்கமுமா மென்க.

[1] "கூதிர் வேனில் என்றிரு பாசறைக்
காதலின் ஒன்றிக் கண்ணிய மரபினும்" *

என்று தொல்காப்பியர் கூறுதலின், சிறுபான்மை கூதிர் காலத்திலும் பாசறையிருப்புக் கொள்ளப்படும். பாசறையிருப்புக்குரிய இடம் ஊர்ப்புறத்ததான காடுறை யுலகமென்பது வெளிப்படை.

'பாசறை' யென்பது பகையரசன் பட்டினத்திற்குக் காவலாயமைந்துள்ள காடு நடுவண், ஆங்குள்ள செடி கொடிகளையுந் தூறுகளையும் வெட்டி, வேட்டுவர் அரண்களையும் அழித்து முட்களைச் சூழ்மதிலாய் வளைத்துத் திரைச்சுவ ரெழுப்பித் தழைக்கூரை வேய்ந்து அகலமாய் ஆக்கப்படும் 'பாடிவீ' டாகும். இதனுள் எத்தனையோ பல வீடுகளும் வீட்டறைகளும் தெருக்களுந் தெருச் சந்திகளும் வெளிகளும் நீரும் நிழலு மிருத்தலின், காண்பார்க்கு இஃதோர் ஊரென விளங்கும்படி அமைக்கப்பட்டிருக்கும். இதனியல்பினை,

[2] "கான்யாறு தழீஇய அகனெடும புறவிற்
சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி

---

1. காதலின் - போர்மேற் காதலின். கண்ணிய - போர் கருதிய.

2. சேண் நாறு பிடவம் - தொலைவில் மணக்கும் பிடவஞ் செடி. எருக்கி - அழித்து. வேட்டு - வேட்டுவச் சாதியினுடைய. புழை அருப்பம் - சிறு வாயிலையுடைய அரண்களை. மாட்டி - அழித்து. காட்ட - காட்டிடத் தனவான.

* தொல். புறத். உக.

வேட்டுப் புழையருப்ப மாட்டிக் காட்ட
இடுமுட் புரிசை ஏமுற வளைஇப்
படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி" *

என்பனவும், இவற்றை மேற்றொடர்ந்தனவுமான முல்லைப் பாட்டடிகளா லறிந்துகொள்க.

### வஞ்சியும் முல்லையும் :

இனி இவ் 'வஞ்சி' யென்னும் புறப்பொருள் தனக்கு அகமான முல்லையொழுக்கத்தோடு நுணுகிப் பொருந்து மாறுங் காண்டற்பாலது.

வஞ்சிக்கு முதல் கரு உரிப் பொருள்களான இடமும் பொழுதும் பூவும் இருப்பும் முறையே காடும், வேனி லிறுதியாகிய கார்கால வியல்பமைந்த மாலையும், காட்டிடத் திற் பூக்கும் வஞ்சிப் பூவும், பாடிவீட்டிருப்புமாகும். முல்லை யொழுக்கத்திற்கும், அந்நான்கும் முறையே அக் காடும் கார்கால மாலையும், காட்டிடத்துப் பூவும், இளமரக்கா சூழ்ந்த வீடுமாகும். அரசன் பாடிவீட்டி விருப்பதுபோலத் தலைவி தனது வீட்டிற் போர்மேற் சென்ற தலைவன் வரவை எதிர்நோக்கி யிருப்பாள். இவ்விருவகை யிருப்பு நிகழ்ச்சிகளும் வேனிற்காலத்தே நிகழ்வனவாயினும் அவ் விருப்பைப் பற்றிய உணர்ச்சி முனைப்புக் கார்கால வியற் கையதான வேனிலிறுதிக்கண் விளையுமாதலின் ஆசிரியர் அதற்குக் கார்காலமே காலமாக வரைந்தோதினார். அது நிற்க,

மலையென்று நினைத்தவுடனே ஒரு பெரிய மண்ணின் திரளை தோன்றுதல்போல முல்லைக்கும் வஞ்சிக்கும் இட மான காட்டினை நினைத்தவுடனே நமதுணர்ச்சிக்குச் செடி கொடிகளின் ஈட்டமே உருவாய்த் தோன்றுகின்றது. காடு களில் மண் நீர் நெருப்பு காற்று வான் என்னும் ஐந்து பொருள்களினுஞ் சிறப்பாய்க் காணப்படுவது நீராகும்; அஃது அங்குள்ள செடிகொடிகளின் பயனும். உலகத்தில் நீர்ப்பெருக் குண்டாதற்குரிய மழை காடிருக்கும் இடங்

* முல்லைப். உச-அ.

களிலேயே நிரம்பப் பெய்தலான கண்ணெதிர் நிகழ்ச்சியி னாலும், அவ்விடத்துக் குளிர்ந்த காற்றினாலும் இதனைத் தெளிந்துகொள்ளலாம். மழைகாலத்தில் மழையும் வேனிற் காலத்திற் குளிர்ங்காற்றுந் தந்து காடுகள் தமக் குரிய நீர்த்தன்மையை வெளிப்படுத்தும்.

இனி, நீரினின்று உயிர்கட்கு நேரே உண்டாகும் உணர்ச்சி, தண்மை யென்பது. தணிதல் ஆறுதலாகும். வஞ்சி யொழுக்க மென்பது கறுவு தீர்க்குஞ் செயலாதலின் அஃதொரு தணிதலாம். 'முல்லை'யென்பது தலைவி தனது காமக்கொதிப்பைப் பொறுத்திருத்தலாகலின், அஃது மொரு தணிதலாம். இவ்வாற்றானும் அவை யிரண்டும் இனமாயமைந்திருத்தல் காண்க. மண் முதலான ஐம் பொருள்களில் நீரினைச் சுவைத்துக் காண்பது வாய்ப் பொறி யாதல் எவர்க்குந் தெரிந்ததொன்று. வேந்தன் படைச்செலவான வஞ்சிக்கண் நீரைச் சுவைத்தலே மிகுதி யும் வேண்டப்படும். இஞ்ஞான்றும் போர்களில் வீரர் முதலாயினார்க்கு நீர் ஒரு பெரிய பாதுகாப்புப் பொரு ளாகக் கருதப்படுகின்றது. தலைவன் பிரிவினைப் பொறுத் துக்கொண் டிருக்குந் தலைவியின் முல்லை யிருப்பின்கண் ணும் அவளை ஆற்றுவித்தற் பொருட்டு அவள் தோழிய ரால் இனிய குடிநீர், பனிநீர், முதலியன மிகவும் பயன்படுக் தப்படும்.

வஞ்சி யொழுக்கம் மேற்கொண்ட வேந்தற்கு முடி விற் பகையரசன்மேல் ஓரன்பு ஊற்றெடுக்கும். என்னை? முன்னெல்லாம் நட்பாயிருந்த அரசன் இஞ்ஞான்று பிரிந்து தேய்ந்து தன்னை எதிர்பார்க்கின்றமையி னென் பது. இதனைக் 'குன்றாச் சிறப்பிற் கொற்றவள்ளை' யென்று ஒரு துறையமைத்து ஆசிரியர் தொல்காப்பியனாரும் விளக்குகின்றமை காண்க. இங்ஙனமே அகப்பொருள் முல்லையின் முடிவினும் முன்பெல்லாங் கூடியிருந்த தலைவி தன் தலைவனது வஞ்சிச் செலவாற் பிரிவு நேர்ந்து நனி பெரிதும் பொறுத்திருந்து அவ்விருப்பின் பயனாகப் பின்பு கூடுங் கூட்ட வியல்பினால் முதிர்ந்த அன்புணர்ச்சியினை

ஊற்றுப்பெருக்கெனப் பெறுகின்றன ளென்க. புறப் பொருள் வஞ்சியினும் அகப்பொருண் முல்லையினும் அவற் றிற்குரியோர் பெரிது பழகிப் பயனெனப் பெறும் பொருள் அன்பேயாகுமென்பது அவற்றிற் குரிய இடம் பொழுது தொழில்களான காடுகெழு காட்சி, கார்மாலைப் போது, பிரிவுப் பொறுமையிருப்பு முதலியவற்றின் இயற்கைகளை யெல்லாம் விரித்தாராய்தலால் இனிது பெறப்படும்.

இவ்வாற்றுல் முல்லையும் வஞ்சியும் அகம்புறமாய் இயையுமாறும், நீரின் பொருட்பயிற்சி 'வஞ்சி' யென்னுந் தண்மையுணர்ச்சியாய் நுணுகிச் சுவைக்குஞ் செயலால் 'முல்லை' யென்னும் அன்பு வளர்ச்சியாய்ப் பின் னும் நுணுகி அகப்பொருட் காதலர்க்குப் பேரா இன்பம் பெருக்கி நிற்குமாறும் அறிந்துகொள்க.

---

## ச. உழிஞைத் திணை

[மாற்றரசனது மதிற்கோட்டையை நாற்புறமுஞ் சூழ்ந்து பொருது தன் படைகளுடன் அதன் உட்புகுந்து அரசன் அத னைக் கைப்பற்றுதல்.]

கடிமிளை குண்டுகிடங்கின்
நெடுமதில் நிலைஞாயில்
அம்புஉடை ஆர்எயில் உள்அழித்து உண்ட
அடாஅ அடுபுகை அட்டுமலர் மார்பன்.

—பதிற்றுப்பத்து, உ௦.

'காவற்காடும் ஆழ்ந்த அகழியுஞ் சூழ்ந்து உயர்ந்த மதின்முகடும் நிலைத்த மதிலுறுப்புகளும் வாய்ந்த, அம்புக ளுள்ள அரிய அரணை, உள்ளழித்து வென்ற ஊர்சுடு புகையையுடைய கொன்று மலர்ந்த மார்ப' னென்க.

மதில், ஆகுபெயர்; 'ஞாயில் - எப்புழைக்கு நடுவாய் எய்து மறையுஞ் சூட்டு'* என்று நச்சினார்க்கினியரும்,

---

*சிந்தா. க : எகூ.

'ஞாயிலும் - குருவித்தலைகளும்; இதனை ஏவறை யென் பாருமுளர்'* என்று அடியார்க்குநல்லாரும் ஞாயிலை மதி லுறுப்புகளாகவே கூறுதல் காண்க. அரிய அரணுவது, 'பொறிகளான் அணுகற்கருமை' யென்பது பரிமேலழக ருரை† 'அட' வென்னுஞ் சொல் ஈறு நீண்டு அளபெடுத்த தென்க; 'அடுதற்கு அடு புகை' யென்பது பொருள். இதனை 'ஊர் சுடு புகை' யென்றார் உரையாசிரியர். பகை வரைக் கொன்று அதனால் வரும் மகிழ்ச்சிப்பெருக்கினால் மார்பு மலரும் அரசனாதலின், ஆசிரியர் அதனை 'அட்டு மலர் மார்ப' னென்றார்.

## உழிஞைப் பொருள் :

கறுத்தெழுந்து பகைமேற் சென்ற வஞ்சியரசன் பகைப் புலத்துக் காவற்காடு நடுவண் பாசறை யமைத்துக் கொண்டு அன்றிரவெல்லாம் அவண் தங்கியிருந்து விடியற் காலையிற் போர்க்கெழுவான். இதற்கு முன்னரேயே அவ் வஞ்சி மன்னன் தன் பகைவனது ஊர்ப்புறத்தைச் சுட்டும், அங்கெல்லாங் காவல் சூழ்ந்துகொண்டிருந்த பகைவீரரைக் கொன்றும், துறைபடிந்திருந்த களிறு முதலான அந்நாட் டுக் கொல் விலங்குகளை அட்டும் அம் மன்னனுக்குச் சின மூட்டினனாதலின், அவனுந் தன்னைச் சினப்பித்த அம் மாற்றரசனை வெல்வான் கருதி வஞ்சியொழுக்கம் மேற் கொண்டு பகைமேற் செல்வான். தன்னோடு மாறுகொண்டு தன்னைக் கறுவிய மாற்றரசனை அவன்றன் வலிமையடக்கு தல் ஒன்றே குறித்துப் போர்க்கெழுகின்ற வேற்றரச னொருவனது மேற்செலவே வஞ்சித்திணையாமென்று முன் கட்டுரையில் விளக்கப்பட்டமையின், அவ்வொழுக்கமே மேற் கொண்ட இம் மாற்றரசனும் வஞ்சியரசனே யாயினன்.

எனவே, கரந்தையரசன் வஞ்சிவேந்தனைப் போர் மேல் வந்தமை கண்டு, வெட்சிமன்னனும் வஞ்சிவேந்த னாய் அப் பகைமேல் வந்தானென்பது தெளிவாய்ப் புலனா கின்றது. இவ்வாற்றால் முன்பு வெட்சிமன்னனாயுங் கரந்தை

---

* சிலப். கரு : உகள. † திருக்குறள், அரண். ரு.

மன்னனுமிருந்த இருபெரு மன்னரும் இப்போது வஞ்சி மன்னராயினர். வெட்சியொழுக்கமுங் கரந்தையொழுக்கமும் வெறும் வீரரளவிலேயே நின்று முன்பு நிகழப் பெற்றமைபோ லல்லாமற் பகையரசரைக் கறுவிப் போர்மேற் செலலான இவ் வஞ்சியொழுக்கம் இப்போது மன்னரளவில் வந்து நிகழ்கின்றது.

இவ்விருவேறு மன்னரும் ஒருவரையொருவர் கறுத்து வஞ்சியொழுக்கம் மேற்கொண்ட உள்ளவியற்கையையும் உலக வியற்கையையும் ஆசிரியர் தொல்காப்பியனார் தமது அகல அறிவினால் நன்காராய்ந்து பார்த்து முடிவில் அவ்வரசிருவ ரொழுக்கமும் வஞ்சிக்கண் ஒன்றே யாதல் துணிந்து 'வஞ்சித் திணை' யென்று அவர்க்கு ஒரு திணையே தமதிலக்கணத்தில் வகுத்தாராக, மற்று அதற்கு முற்றும் மாறாகப் பன்னிருபடலமுடையார் முதலியோர், முதலிற் போர் மேற்கொண்டு எதிர்த்து வந்த பகையரசனொழுக்கமே 'வஞ்சி'யாமென்றும், மற்று அது கண்டு பின்னர் எதிர் சென்று ஊன்றும் மாற்றரசனொழுக்கம் 'காஞ்சி'யா மென்றும் உண்மைக்கு வேறாக உரை நிறீஇ ஆசிரியர் நுண் முறைக்கு மாறாயினர். இவரிடைப் பட்ட இக் கருத்து வேறுபாடுகளையும், அவற்றுட் பொருந்துவது தொல்காப்பியனார்தங் கருத்தே யாதலையும், அதற்குரிய சான்றுகளையும் 'காஞ்சித்திணை'க் கட்டுரையிலும் விளக்குவமாதலின் ஈண்டவற்றை இம்மட்டோடு நிறுத்தி, கரந்தையரசன் வஞ்சிசூடிப் பகைப்புலம் வந்து பாசறையமைத்துக் கொண்டு ஊர்ப்புறங்களைச் சுட்டும் அட்டும் பகைமன்னனைப் போர்க் கெழுமாறு சினப்பித்தானாக, அவனும் அப் பகை மேற்கொண்டு எதிர்வந்து அப் போரிற் கலந்து கொண்டானென்னும் முடிவே இவற்றின் முடிபாக இங் கெடுத்துக் கொண்டு, இனி உழிஞைப் பொருளையே கருதிச் செல்வாம்.

போரிற் கலந்துகொண்டு இவ்விருபெரும் பகையரசருஞ் சினம்பெருகி நிகழ்த்தும் போர் நிகழ்ச்சியை ஆசிரியர் தும்பைத் திணையென்று வகுத்துக்கொண்டு வேறு விளக்கு

வர். ஆதலின், அஃது அங்குக் கூறற்பாலது. அது கிடக்க, இனி, இவ்வாறு போர்மலையும் பகைமன்னரிருவரில் இடையே படைக் காற்றாது தளரும் ஒருவன் தனது அரணகத்துச் சென்று ஓடி ஒளித்து, அதன் வாயில் மூடியடங்கி, அவ்வரணுதவியாக நின்று பின் அம் மாற்றாசனொடு பொருது வெற்றிகோடல் கருதுவான். இவ்வுண்மையை, "வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர்செய்தலாற்றாது உடைந்து, மாற்று வேந்தன் அரண்வலியாகப் போர்செய்யு மாகலானும்"* என்று இளம்பூரணரொருவர் மட்டுமே தெளிவாய் எடுத்துக்காட்டினர். இங்ஙனம் அரண்செய்து வாயிலடைத்துக் கொண்டு அதுவே உதவியாகப் போர்புரிபவன், முதலில் வஞ்சி சூடி வந்த காஞ்சி மன்னனாகவேனும், அல்லது அவன் மேற்செலவு கண்டு எதிர்வந்து கலந்த வெட்சிமன்னனாகவேனும் இருக்கலாம்.

## அரண் அமைப்பு:

இனி, பழந்தமிழரசர்கள் தமக்கு அரணாக அமைத்துக்கொண்ட மதிலமைப்புக்கள் மிகவும் வியத்தற்குரியவை. இம் மதிலரணைச் சூழ்ந்து நீரரண் நிலவரண் மலையரண் காட்டரண் என்று இயற்கையுஞ் செயற்கையுமான நான்கரணங்கள் முறையே அமைந்திருக்கும். இவற்றை,

> [1] "மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்
> காடும் உடையது அரண்" †

என்று திருவள்ளுவப் பெருமானும் வகுத்துக் கூறினர். உரையாசிரியர் பரிமேலழகர் இவற்றினியல்பினை "எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார் மணிநீரென்றும், நீரு நிழலுமில்லா [2]மருநில மென்பார் மண்ணென்றும், செறிந்த காடென்பார் அணிநிழற் காடென்றுங் கூறினர்" என்னுந் தமது உரைக் கூற்றினால் நன்கு விளக்கினர். நீரரணொன்

---

1. மணிநீர் - நீலமணிபோலும் நிறத்தினையுடைய ஆழ்ந்த நீர்.

2. மருநிலம் - பாலைநிலம்.

* தொல். புறத். அ. † திருக்குறள், எசு: உ.

பது மதிலைச் சூழ்ந்து ஆழ்ந்தகன்ற அகழியாகும். இவ் வரண்களே பகையரசர் திடுமென்று நாட்டுட் புகுந்து கோட்டையைக் கைப்பற்றாமைக்குப் போதுமான பாது காப்புக்களாம்.

அதனாற்றான், கரந்தையரசன் வஞ்சி சூடிப் பகைப் புலம் வந்தஞான்று, அந்நாட்டின் கடைசி அரணான காட் டின்கண் மலைஅரணுக்கு அப்பாற் பாடிவீ டமைத்துக் கொண்டு அவண் தங்கினன். இடையே மலையாணும் நில வரணும் அவற்றின் காவலும் இன்றேல், அவ்வாசன் அவண் தங்காது நேராய் மதிலரணருகாகவே வந்து பாசறை அமைத்திருப்பான். ஈண்டு இவ்வரண்களுக்குரிய அரசன் போர் செய்த லாற்றாது இளைத்துத் தனது மதி லரண் மாட்டுப் புகுந்தடங்கின னாதலின், மாற்றரசனும் அஞ்ஞான்று அவனைப் பின்பற்றியபடியாய் மேற்காட்டிய காட்டரண், மலையரண், நிலவரண் முதலான கடத்தற்கரிய அரண்களையெல்லாங் கடந்து மதிலரணைக் கிட்டுதல் அவன் றனக்கு எளிதாயிற்று. இன்றேல், அஃது அரிதேயாகு மென்க.

எனினும் மதிலரணையுங் கடந்து அம் மாற்றரசன் உள் நுழைதல் இவைபோலும் அத்துணை எளிதாவதன்று. மதிலரண் சிறுசிறு துண்டுக் கருங்கற்களாலேனும் அன்றிச் செங்கற்களாலேனுஞ் சுண்ணாம்பினால் இறுக்கி மிக வலு வாய்க் கட்டப்பட்டிருக்கும். அம் மதிற்சுவர் ஏறக்குறைய ஏழெட்டு முழம் வரையிலும் அதற்கு மேலுங்கூட அகன் றிருக்கும். அவற்றிற்குரிய வாயில்களின் அகலம் பதி னைந்து அல்லது இருபது முழங்கட்கு மேலுங் கொள்ளப் படும். உயரமோ அண்ணாந்து காண்டற்கு இயலாததே யாகும். அவ்வாறமைந்த அம் மதிற் சுவர் தொலைவிற் காண்பார்க்கு ஒரு மலைக்காட்சிபோலத் தோன்று மென்க. புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியரான ஐயனாரிதனார், இம் மதிலின் உயர்வை ஓர் உவமை வாயிலாக நன்கு தெளி வித்தற் பொருட்டு, மாற்றரசன் பகைவர் மதிலை முற்றுகையிட்டிருக்கும்போது அவன் வீரர் போர்செய்தற்

காக அம் மதிலின்மேற் பாய்ந்தேறுதலைப் புட் கூட்டங்கள் ஓருயர்ந்த மலையுச்சியிற் சென்று புதல் புகுதலைப்போற் றோற்றுகின்றதென்று கூறுவர். இதனை,

[1] 'நிரைபொறி வாயில் நெடுமதிற் சூழி
வரைபுகு புள்ளினம் மான—விரைபுஅடைந்தார்
வேலேந்து தானை விறலோன் விறன்மறவர்
தோலேந்தி ஆடல் தொடர்ந்து' *

என்னும் வெண்பாமாலையிற் காண்க. இங்ஙனமே பிறிதோரிடத்தும் அவர், மதின்முகடு ஏறிய புறத்து வீரர் பின்னர்க் கீழ்முகமாய் உட்பாய்ந்து ஆரவாரித்தலை, மலையுச்சியிலிருக்கும் பறவை யினங்கள் கீழே நிலத்தின்கட் கிடக்கும் இரையைக் கண்டு அதனை எடுத்தற் பொருட்டு ஒரே பாய்ச்சலாய் விரைந்து பாய்தலைப்போற் றோன்றுமென்பர்.† திண்மை அகலம் உயர்வு என்பனவும் பிறவும் இவ்வாறு இனிதமைந்து காணும் இம் மதிலமைப்பினை ஆசிரியர் திருவள்ளுவர்,

" உயர்வகலந் திண்மை அருமைஇந் நான்கின்
அமைவரண் என்றுரைக்கும் நூல்" ‡

என்று நன்றாய் எடுத்துக் கூறினர்.

## அதன் அருமை :

இனி இத் திருவள்ளுவர் திருமொழியில் 'அருமை' யென்று நான்காவதாய்க் கூறப்படுவதோ ருண்மையையும் அறிதல் வேண்டும். 'அருமை' யென்றது, பகைவர் அணுகுதற்கு அரிதாம்படி அம் மதிலரண் அமைந்திருப்பதாகும். எனவே திண்மை, அகலம், உயர்வு என்னும் அவையேயல்லாமல், மாற்றார் அணுகுதற்கியலாதவாறு வேறு சில அமைப்புகளையும் அம் மதிலரண் உடையதாய் விளங்கு

---

1. நிரை பொறி-ஒழுங்குபட்ட இயந்திரங்களாலமைந்த. மதிற் சூழி - மதிலின் நெற்றியில். மான – ஒப்ப. தோல் - கேடகம்.

* புறப்-வெ. ௬ : கரு. † புறப்-வெ. ௬ : உ௦.
‡ திருக்குறள், எ௪ : ௬.

மென்பது இதனாற் பெறப்படும். அவைதாம், அம் மதிலரண் வஞ்சனை பலவும் வாய்ந்து பொறிகள் பலவும் அமைந்திருப்பதாமென்று கொள்க.

இம் மதிலரணை யல்லாமல் ஏனைப் பிற அரண்களும் வஞ்சனை பல உடையவாயிருக்கு மென்ப. காட்டரண் மாட்டு, முட்கதவுகளை ஆங்காங்குடைய முள்வேலிகள் பலவும், நெருங்கிய புதல்களில்லாவிடத்து வஞ்சனை மிக்க படுபள்ளங்கள் பலவும், நெறிகளினிடையே கீழ் பரப்பிய முட்படல்கள் பலவும், காவல்களும் அமைந்திருக்கும். மலையரணகத்து நேர்நெறிகள் காணப்படா. அல்லாமலும் அதன்கண் மறைந்த காவல்கள் பல அங்கங்குமிருக்கும். நிலவரண் நீருநிழலுமில்லாத வெறும் மருநிலமாகவே கிடக்கும். நீரரணும் கொடிய முதலைகள் முதலியவற்றை உடையதாகிக் கடத்தற்கரிதாகவே காணப்படும்.

இவ்வெல்லா அரண்களிலும் பிறரறியாதவாறு மேலே இருந்துகொண்டு பகைவரை அம்பு முதலியவற்றாற் றுக்கு தற்கேற்ற உயரமான மறைவிடங்களும் பொறிகளும் ஆங் காங்கும் உண்டென்க. காட்டரண் முதலிய ஏனை நான் கரண்களும் இங்ஙனம் வஞ்சனைகள் வாய்ந்து பகைவர்கள் கடத்தற்கரிதான பாதுகாப்புடன் திகழுமென்பது, "தோட்டிமுள் முதலியன பதித்த காவற்காடு புறஞ் சூழ்ந்து அதனுள்ளே இடங்கர் முதலியன உள்ளுடைத் தாகிய கிடங்கு புறஞ்சூழ்ந்து" என்றும், "இனி மலையரணும் நிலவரணுஞ் சென்று சூழ்ந்து நேர்தலில்லா ஆரதர் அமைந் தனவும், இடத்தியற்றிய மதில்போல அடிச்சிலம்பின் அர ணமைந்தனவும், மீதிருந்து கணை சொரியும் இடமும் பிற எந்திரங்களும் அமைந்தனவுமாம். இனிக் காட்டரணும் நீரரணும் அவ்வாறே வேண்டுவனயாவும் அமைந்தனவாம்" என்றும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் தமது புறத்திணையிய லுரையிற் கூறும் உரைப்பகுதிகளாற்* றெளியப்படும்.

இனி மதிலரண்மாட்டுக் காணப்படும் வஞ்சனைகளா வன: மதிற் சுவர்க்கண் உள்ளறைகள் பல அமைக்கப்பட்

* தொல். புறத். ௧௦.

டிருக்கும். அவ்வறைகளிலெல்லாம் பகைவரை யழிக்கும் பொறிகள் பலவும் நிறுத்தப்பட்டிருக்கும். அப்பொறிகளிலிருந்து பல கருவிகள் வெளிப்பட்டுப் பகைவரைக் கெடுப்பதற்காக, அம் மதில்களூடு பற்பல வடிவங்களுடன் நெடுக சந்துகளும் அமைந்திருக்கும். பொறிகளை இயக்கும் மறவர்கள் அவ்வரணகத்தே யிருந்து உள்ளியங்குவர்; எனவே, பொறிகளும் இயங்கும். விற்பொறிகளும், குரங்கு, குருவி, களிறு, பன்றி, பாம்பு, ஆடு, குதிரை, பேய், பருந்து, அரிகயிறு, தூண்டில், மூங்கில் முதலியவற்றின் வடிவாகச் செய்துவைக்கப்பட்ட மிகக்கொடிய பொறிகளும், நெய்யுமிழ் கருவி, தீ யுமிழ் கருவி, செம்புருக்குமிடா, கவண், கற்பொறி, தொடக்கு, கவை, கழு, புதை, புழை, ஊசி, எழூவுஞ் சீப்பு, கோல், குந்தம், வேல், நூற்றுவரைக்கொல்லி, தள்ளி வெட்டி, சகடம், மரநிலை யென்பனவாகப் பல பொறிகளும் படைக் கருவிகளும் அவ்வரணகத்தறைகள் உடையவாயிருக்கும்.

இவற்றுள் விற்பொறிகளென்பவை, தாமே வளைந்து தாமே அம்புகளையும் எடுத்தெறியும்; குரங்குப் பொறி, மதிலை யணுகும் பகைவரை அவரணுகுதற்குமுன் தானே எட்டிப் பாய்ந்து அவர்களுடம்பைப் பல்லாற் கடித்து வெவ்வேறாய்ப் பிய்த்தெறியும். குருவிப் பொறி, மாற்றார் மேற் சென்று அவர் கண்களைக் குத்தும். இதனையே உரையாசிரியன்மார் 'சிச்சிலிப் பொறி' யென்ப. களிற்றுப் பொறி யென்பது, தம் துதிக்கைகளாற் பகைவர் தலைகளை முறுக்கிப் பிடுங்கியெறிவது. பன்றிப் பொறி, மதின்மே லேறும் பகைவருடம்புகளைத் தனது கூர்ங்கொம்பினாற் கிழித்தழிக்கும். இது மதிலின் மேற்புறத்திலமைக்கப்பட்டிருக்கும். பாம்புப் பொறி யென்பது, பகைவரை அப்படியே வாய்திறந்து விழுங்கிவிடும். ஆட்டுப் பொறிகள் தம்முடைய திருகிய கொம்புகளாற் பகைவருடலை முட்டிக் குத்தி அவர்தங் குடரைச் சிக்கி யிழுத்து வெளிக்கொணரும். குதிரைப் பொறி, மாற்றாருடைய மார்பைச் சிதற உதைத்து அகழியிற் றள்ளி முதலைக்கு

இரையாக்கும். பேய்ப் பொறி, புறத்து வீரரை ஓரே அற்றையாய் ஓங்கி யறையும். பருந்துப் பொறியோ வெனின், அவர்தம் உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும். அரிகயிறு என்பது, மறவரிடையே காற்றில் அலைவது போலக் காணப்பட்டுத் தன்னைப் பற்றுவாரது கையை நாணற்புல் முதலியவற்றைப்போல அரியுங் கயிறாகும்; தூண்டில், அகழியோரமாய்க் கரையிற் சார்த்தப்பட்டது போற் கிடந்து அவ் வகழியைக் கடந்து மதிலைப் பற்றும் மாற்றாரைக் கோத்து வலிக்கும்; மூங்கிற் பொறி, மூங்கிற் றடியளவாய் நின்று பகைவீரரை எலும்பொடிய நையப் புடைக்கும்.

நெய்யுமிழ் கருவி யென்பது, கொதிக்கக் கொதிக்கக் காய்ச்சிய எண்ணெய் முதலியவற்றைப் பகைவர் கூட்டத்திற்கு மேலே யசைந்து அவர்மீது மழையெனச் சொரிந்து கொண்டிருக்கும். தீயுமிழ் கருவி யென்பதும், அதைப் போலவே தீயை உமிழாநிற்கும்; செம்புருக்குமிடாவென் பதும் அவற்றைப்போலவே ஈயம் செம்பு முதலியவற்றை நீராயுருக்கி அவற்றின் குழம்பைப் பகைவர்மீது சொரியும்; இவற்றை உருக்குதற் கேற்ற 'உலை' யும் பாகெனக் காயுங் 'குழிசி' களும் அம் மதிலறைகளில் அகலமாய் அமைக்கப் பட்டிருக்கும்; கவண் என்பது, கவண் கயிறுபோற் காணப்பட்டுக் குறித்த ஓரிடத்திலேயே கற்களை ஒவ்வொன்றாக விறுவிறுவென்று எறிந்துகொண் டிருக்கும். ஆனாற் கற்பொறி யென்பது அங்ஙனமன்று; அஃது ஓரிடத்திலேயே யிருந்துகொண்டு பகைவரது கூட்டம் முழுதுஞ் சிறு சிறு கற்களைக் கன்மழைபோல எங்குஞ் சொரியும். இதனை 'இடங்கணிப் பொறி' யென்றுங் கூறுப. தொடக்கென்பது, மாற்றார் கழுத்திற் கழுக்கோல்போலப் பூட்டி முறுக்குஞ் சங்கிலியாகும். இது முறுக்கேறிய கயிற்றையும் உணர்த்தாநிற்கும். கவை, குறடுபோல் இரு பிளவாய் அகழியிற் கிடந்து அதனைக் கடந்து செல்வாரை இடுக்கி மறியத் தள்ளுவதாகும். கழுவென்பது பகைவர் கழுத்தை நெருக்குங் கழுக்கோ லென்க. புதை, அம்பு

களை மழையென எறியும்; இவையிருக்கும் மதிலறைகள் 'புழை' யெனப்படும். "ஏவறை" களென்று நூலுரைகளிற் கூறப்படுவதும் இது. ஊசியாவது, பகைவர்கள் மதின் மேல் ஏறுங்கால் அவர்கள் கைகளைப் பொதுக்கும்படி அம் மதிலின்மேற் செருகி இறுக்கப்பட்டிருக்கும். மதிலின் வாயிற் கதவுக்கு வலிமையாக உள்வாயிற் படியில் நிலத்திலே வீழவிடும் மரக்கட்டைகள் 'எழுவுஞ் சீப்பு' எனப்படும். கோல், நீண்ட ஈட்டி; குந்தம், குத்திக் குடரை யிழுக்கும் வகையாக நுனி வளைந்து குட்டையா யிருப்பதொரு சிற்றீட்டியாகும். வேல் என்பது, நுனி இலை வடிவா யமைந்ததொரு படைக்கருவி; 'நூற்றுவரைக் கொல்லி' யென்பது, மதிற்சுவரிலிருந்து வெளிப்பட்டுப் படையிடையே வெடித்ததாயின், அது நூறு பேரைக் கொன்றழிக்கும் ஆற்றலுடையதா யிருக்கும். 'ஆட்களைக் குப்புறத் தள்ளித் துணிக்கும் பொறியைத் 'தள்ளி வெட்டி' யென்ப. இழுப்பு வண்டியைப்போலிருந்து ஆட்களை உட்படுத்திக் கொணரும் ஒரு வகைப் பொறிக்குச் 'சகட' மென்று பெயர். தலைகளைத் திருகிக் கொள்ளும் வலியுடனே உடம்பை நெருக்கி எலும்புகளை முறித்துக் கூழ்படுத்தும் நெருக்குமரம் 'மரநிலை'ப் பொறியாம். இம் மரநிலைப் பொறி 'ஐயவித்துலா' மென்றுங் கூறப்படுகின்றது.* 'ஐயவித்துலா' மென்பதைப் பழைய உரையாசிரியன்மாரே பலவாறுங் கூறுப.

பண்டைத் தமிழரசரின் மதிலரணங்கள் இத்துணை வஞ்சமும் பொறிகளும் அமைந்து, மிக்க பாதுகாப்புடன், ஆசிரியர் திருவள்ளுவர் கருதியபடி பகைவர்கள் அணுகுதல் இயலாத அருமை வாய்ந்து, பதாகையொடுந் திகழும் என்னும் இவ் வுண்மைகளை, ஆசிரியர் இளங்கோவடிகள்,

> "மிளையுங் கிடங்கும் வளைவிற் பொறியும்
> கருவிர லூகமுங் கல்லுமிழ் கவணும்
> பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியும்
> காய்பொன் உலையுங் கல்லிடு கூடையும்

*சிந்தா. கடுஉ.

தூண்டிலும் தொடக்கும் ஆண்டலை யடுப்பும்
கவையும் கழுவும் புதையும் புழையும்
ஐயவித் துலாமும் கைபெய ரூசியும்
சென்றெறி சிரலும் பன்றியும் பணையும்
எழுவுஞ் சீப்பும் முழுவிறற் கணையமும்
கோலும் குந்தமும் வேலும் பிறவும்
ஞாயிலும் சிறந்து நாட்கொடி நுடங்கும்
வாயில் "*

என்று தமது சிலப்பதிகாரத்தில் இனிதெடுத்துக் கூறினார். பாதுகாப்புக்கு முதலிடமாய் விளங்கும் இத்தகைய மதிலரண்களையே தொல்காப்பியனார் 'முழுமுதலரணம்' என்பர்.

இனி இம் மதிலரணங்கள் புறஞ்சேரி மதில், நகர்ப் புறத்து மதில், மனைப்புறத்து மதில், உண்மதில் எனப் பலப்பல மதில்களாக அரசர் பட்டினத்திற் காணப்படு மென்க. இவற்றின் நடுவிலேயே அரசருடைய காவற் கோட்டைகள் திண்மை வாய்ந்து திகழும். இக் காவற் கோட்டைகட்கு எவரும் அறியாதபடி போக்கு வரவு செய்ய நிலத்தூடு அகழ்ந்தெடுக்கப்பட்ட கள்ளவழிகள் (சுரங்கம்) சிலவும் அமைக்கப்பட்டிருக்கும். இவற்றையும் இவை போன்ற மதிலமைப்புகள் பிறவற்றையு மெல்லாம் பழைய தமிழ் நூல்களில் ஆங்காங்கும் விளக்கமாகக் கண்டுகொள்க.

இத்தகைய வஞ்சனைகளும் பொறிகளு மமைந்த மதிலரணத்தை முற்றிவரும் மாற்றரசரும் இவற்றையெல்லாந் தப்பி அவ்வரணகத்தைக் கைப்பற்றுதற்கான கிடுகு படை, வலிய இருப்பு மூடுகள், மாற்றுக்கோலங்கள் முதலான வஞ்சனைகள் வாய்ந்தே அரண்முற்றுவரென்பது இங்கு நினைவுகூரற்பாலது. இவையெல்லாம் நம் பழந் தமிழரசரின் நாகரிக மேன்மைக்குச் சிறந்த அடையாளங்களாகும்.

---

* சிலப். கடு: உ0எ-உகஅ.

உழிஞைப் பொருள் வரம்பு :

இனிப் போர் செய்தலாற்ருது உடைந்து அரண் கண்டு புகுந்த அரசனை, மாற்று வேந்தன் பின்ருெடர்ந்து அவ்வரணத்தைத் தனதாக்கிக் கொண்டு, பின்னர் அவனைப் புகலும் போக்கும் இல்லாதபடி செய்து கறுவு தீர்ப்பான் கருதி அவ்வரண் முற்றுவான். முற்றுதலென்பது, அவ் வரணிடத்தை நாற்புறமுஞ் சூழ்ந்து அகத்தாரொடு பொருது உள் நுழைந்து அதனைக் கைப்பற்றப் பார்த்தலென்க. இவ்வுணர்ச்சியுஞ் செய்கையும் ஒருங்கு வாய்ந்த ஒழுக்கமே உழிஞைத்திணை யென்று ஆசிரியாற் குறிக்கப் படும். ஆசிரியர் தொல்காப்பியனுர்,

[1] "உழிஞை தானே மருதத்துப் புறனே
முழுமுத லரணம் முற்றலும் கோடலும்
அனைநெறி மரபிற் றாகு மென்ப."*

என்று இதனை நன்கு விளங்க வைப்பர்.

இதன்கண், 'முற்றலும்' 'கோடலும்' என்று வந்த இரண்டு சொற்களும், நூற்பாக் கருத்தினை அது சென்ருெழுகு முறையே காணவல்லார்க்கு, அரண் முற்றும் வேந்தன் ஒருவனுடைய தொழில்களையே தெளிவாய் உணர்த்துகின்றன வென்பது எளிதாய்ப் புலப்படும். அங்ஙனமாகவும், ஆசிரியர் நச்சினுர்க்கினியர் 'முற்ற' வென்பதைச் 'சென்ற வேந்தன் வளைத்த' லென்றும், 'கோட' லென்பதை 'இருந்த வேந்தன் கைக்கொண்டு காத்த' லென்றும் இருவேறரசர் தொழில்களாக உரை கூறினுர். ஆனுல் இளம்பூரணரோ அங்ஙனங் கூறுவாரல்லர். முற்றும் வேந்தனது தொழிலே கோடலுமாமென்பர்.

இவைதம்முள் நச்சினுர்க்கினியருரை, ஆசிரியர் தொல்காப்பியனுர் கருத்தினை நூற்பாவின் வேருக மாறு

---

1. முற்றலும் - வளைத்துக் கொள்ளுதலும். கோடலும்- கொள்ளுதலும். அனைநெறி - அவ்விரண்டு நெறியாகிய.
* தொல். புறத். கூ.

படுத்துதலே யல்லாமல், உழிஞைத்திணை யிலக்கணத்தை யும் வேறுபடுத்தாநின்றது. முற்றலுங் கோடலு மென்னும் இரண்டுமே வளைத்த அரசனுக்குரிய தொழில்க ளென்று உரையாமல், ஒன்றை வளைத்த அரசனுக்கும் மற்றொன்றை இருந்த அரசனுக்கும் உரியவாக உரை நிறுத்துதலின், உணர்ச்சியில் இருவேறு வகைப்பட்ட அவ்வரசர் இருவரொழுக்கங்களையுமே அவ்வுரைகாரர் உழிஞையெனக் கருதினரென்பது போதரும். நச்சினார்க் கினியர் கருத்து இஃதேயாதல், "எதிர் சென்ற வேந்தன் பொருது தோற்றுச் சென்று அடைத்திருத்தலும் உழிஞையாம்" என்று மிகவும் விளக்கமாய் இவ்வுரையைத் தொடர்ந்து வரும் அவரது விளக்க உரையினாலேயே சற்றும் ஐயுறவின்றி நேராய்த் துணியப்படும். ஆனால், உழிஞையிலக்கணம் வகுத்து நூற்பா உரைத்து வரம்பு காட்டிய தொல்காப்பியனார்தம் கருத்து அஃதன்றாய் நிற்கின்றது. மதிலை வளைத்துக் கைப்பற்ற முயலும் மாற்றரசனொழுக்கம் ஒன்றைமட்டுமே அவர் உழிஞை யென்றார். அஞ்ஞான்று அம் மதிலகத்தே யிருந்து அதனைக் காக்கும் உரிமையரச னொழுக்கத்தை அவர் 'நொச்சி' யென்றே கருதினார். இது 'குடையும் வாளு' மென்று இவ் வுழிஞைத்திணைக்குத் துறைகள் வகுத்துக் கூறுந் தமது புறத்திணையிய னூற்பாவிலேயே ஆசிரியர் "அகத்தோன் வீழ்ந்த நொச்சியு"மென்று தெளித்துக் கூறுமாற்றால் இனிது பெறப்படுமென்க. அந் நூற்பாத் தொடர்க்கண்ணும் நச்சினார்க்கினியர் ஏலா உரையே உரையாநின்றார்.

இங்ஙனமே இவர் வெட்சித்திணைப் பகுதியினும், ஆசிரியர் ஆநிரை கோடலையே வெட்சித்திணையென்று முதல் நான்கு நூற்பாக்களால் எடுத்து விளக்கி, அவற் றுக்கு வேறாக ஆநிரை மீட்டலைக் கரந்தை யென்று கூறி அதற்கோ ரேழுதுறைகளையும் வகுத்து ஐந்தாம் நூற்பா வில் நிறுத்தினாராக, அவ் வெட்சித்திணை நூற்பாக்களே கரந்தைத்திணையையும் ஒருங்குணர்த்துமென்று தவறாய்த் துணிந்து ஆசிரியர் கருத்தைத் திரித்து உரை காட்டினார்.

நச்சினார்க்கினியர்க்குப் பிற்காலத்திலே பழந் தமிழ் நூல்களுக்கு எவரேனுந் தக்கார் உரை கண்டிருப்பாராயின், பழைய உரையாசிரியன்மார் உரைகள் பலவற்றுள்ளும் நச்சினார்க்கினியருரைகளே பெரும்பான்மையும் மறுக்கப் பட்டிருக்குமென்பது ஒருதலை. இஞ்ஞான்றும் அவருரைகள் முழுமையுஞ் செவ்வையாய் ஆராய்ந்து ஓரிய உரையாராய்ச்சிநூ லெழுதுதல் அது செய்யவல்லார் தம் பெருங் கடமையாகும்.

எனவே, மாற்று வேந்தன் மதிலரண்களை முற்றுதலுங் கைப்பற்றுதலும் 'உழிஞை' யாமென்றும், அரணகத்தரசன் அதனைக் காத்து நிற்றல் 'நொச்சி' யாமென்றும் பகுத்துணர்ந்து கொள்க. தொல்காப்பியனார் முதலிற் கரந்தைப்பகுதியை வெட்சித்திணைக்கண் அடக்கினாற் போல, நொச்சி யொழுக்கத்தை ஈண்டு ஒரு தனித் திணையா யெடாமல் 'உழிஞை'க்கண் அடக்கினாரென் றறிதல் வேண்டும்.

**உணர்ச்சியும் செயலும் :**

இனி ஆசிரியர் இவ் வுழிஞைத் திணைக்குத் துறைகள் கூறும்போது உழிஞையரசனை புறத்தோன் அஞ்ஞான்று உணரும் உணர்ச்சி வகைகளைக் 'கொள்ளார் தேம்'* என்னும் நூற்பாவினும், பின்னர் அவன் அரண்முற்றிப் பொரும்போழ்து அவண் செய்யுஞ் செயல் வகைகளைக் 'குடையும் வாளு'† மென்னும் மற்றொரு நூற்பாவினு மாகப் பிரித்துக் கூறுகின்றார். ஏனெனில், இந்தத் திணைக்கண் ஏனைத் திணைகளைக் காட்டினும் அறிவின் முனைப்பு இன்றியமையாததாய் வேண்டற்பாலதாதலி னென்பது. புறத்திணையான இவ்வுழிஞையையும் இதற்கு அகத்திணையான மருதத்தையும் நன்கு பயில்வார்க்கு முடிந்த பயனாய் விளைவது அறிவே யாமென்று முன் கட்டுரைகளில் அட்டவணை வகுத்துக் காட்டியிருக்கின்றேம். புறத்திணை உழிஞையாலும் அகத்திணை மருதத்தாலும் ஒருவன்

---

* தொல். புறத். கஉ.
† ,, ,, கங.

பயின்று பெறும் பயன் அறிவேயா மென்னுமிது அடுத்த 'நொச்சித்திணை'க் கட்டுரையில் விரிவாய் விளக்கிக் காட்டப்படும். ஆதலால் அறிவுணர்ச்சியின் முனைப்பினை இவ் வுழிஞைத் திணைக்கண் வேறு பிரித்துக் காட்டல் வேண்டியே, அவ் வுணர்ச்சி வகைகட்கு ஏனையொரு நூற்பாவும் ஆசிரியர் இயற்றுவாராயினர்.

இவற்றை முறையே தொகையும் விரியுமென்று கொள்ளல்வேண்டும். நச்சினார்க்கினியர் இந் நுண்முறையினை உற்றுநோக்காமல் தமக்குத் தோன்றியவாறே அவற்றிற்கு வேறு கூறினார். அவர் கூறிய உரை முறைகளை யெடுத்து ஒவ்வொன்றாய் மறுத்துக் கூறப்புகின், இது மிகவும் விரியுமென்றஞ்சி விடுக்கின்றேம். மேல் 'வாகைத் திணை'க் கண்ணும் ஆசிரியர் இங்ஙனம் தொகையும் விரியுமாகத் துறைகளை வகுத்து அவற்றிற்குத் தனித் தனி நூற்பாக்கள் இயற்றினார். அங்ஙனம் அவர் அதற்குத் தொகைவிரி நூற்பாக்கள் வகுத்தியற்றுதற்குரிய இன்றியமையாமையும், பாகுபாடும் அவ் வாகைத்திணைக் கட்டுரையில் விளக்குவேம். ஆயினும் அவை இவ்வுழிஞைப் பகுப்பைப்போல உணர்ச்சியுஞ் செயலுமென்னும் முறையிற் பாகுபடுவன அல்லவென்பது ஈண்டறியற்பாலது.

இனி,

'கொள்ளார் தேஎம் குறித்த கொற்றமும்,
உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பும்,
தொல்லெயிற் கிவர்தலும், தோலது பெருக்கமும்,
அகத்தோன் செல்வமும், அன்றியும் முரணிய
புறத்தோன் அணங்கிய பக்கமும், திறற்பட
ஒருதான் மண்டிய குறுமையும், உடன்றோர்
வருபடை பேணார் ஆர்எயில், உளப்படச்
சொல்லப் பட்ட நாலிரு வகைத்தே'*

என்னும் நூற்பாவிற் கூறப்படும் உழிஞையரசன் உணர்ச்சிகளாவன, முறையே பகையரசனது நாட்டை எப்படியுங் கைப்பற்ற வேண்டுமெனல், நினைத்ததை முடிக்கவேண்டு

* தொல். புறத். ௬௨.

மெனல், இவ் வழியாத மதிலை இற்றைப் பகலே அழித்து மென விரும்புதல், அதற்குரிய 'கிடுகு' 'கேடக' முதலிய பாதுகாப்புக் கருவிகளை மிகுதியாய்க் கண்டுகொள்ளல், அகத்தோனது செல்வ நிலையை யுன்னிப் பார்த்தல், இடையிடையே தமக்கு எய்தும் வருத்தங்களையு முணர் தல், தளர்வு நேர்ந்தால் தானொருவனே யாகித் தனித்துப் போர் செயத் துணிதல், எதிரிகளைச் சிறிதும் பொருள் செய்யாது மதின் முற்றுதலென்பனவாம். இவ்வகையான உணர்ச்சிகளாற் றிண்ணிய நெஞ்சுறுதி பெற்ற உழிஞை மன்னன் இனிச் செயல் புரிவான்.

இச் செயல்கட்காகத் தொல்காப்பியனார் வகுத்துக் கொண்ட துறைகள் பன்னிரண்டாகும். அவை முறையே, நல்ல நாழிகையில் மாற்றார் மதிலகத்தே முதன்முதற் காவற் குடையை முன்னிடுதலும், அவ்வாறே வாட் படையை முன்னிடுதலும், ஏணியை மதின்மேற் சார்த்திக் கொண்டு அதன்மேலேறி நின்று போர்புரிதலும், மிகக் கொடிய போர்புரிந்து புறமதிலைக் கைப்பற்றிக்கொண்டு அவ் வூக்கத்தோடு உண்மதிலைக் கிட்டி வளைத்தலும், அங்ஙனம் உள்ளணுகிப் பொருதலால் அகத்தோன் தளர் தலும், அதைக் கண்ட புறத்தோன் பின்னும் முறுகி அவ் வகத்தரசன்மேல் வீழ்தலும், அகழியிற் பொருதலும், மதிலகத்தன்றி ஊரகத்தே பொருதலும், இருதிறத்தாரும் மதின்மேல் நின்று பொருதலும், அம் மதிலுச்சியில் யாரேனு மொருவன் பட்டானாக அவன் மணிமுடி கொண்டு முடிசூடி மகிழ்தலும், அஞ்ஞான்று மாற்றாரைக் கொல்லுங் கருவியாயிருந்த வாளினைக் கொற்றவையா யெண்ணி நீராட்டி மகிழ்தலும், தான் மதிலரணைக் கைப் பற்றிக் கொண்டமையால் இதுகாறும் இருபிரிவினராய் மாறுபட்டு ஏனைப் பல மதில்களினும் பொருதுகொண் டிருந்த மாற்றரசரும் வீரருமெல்லாம் தாமே மாறுபாடு அவிய அவரெல்லாரையும் ஒருங்கு தொகுத்தலுமாகும்.

இவற்றுட், கரந்தையரசன் வஞ்சி சூடிப் பகைமே லெழுந்த ஞான்றும் அவன் தன் குடையையும் வாளையும்

நாட்கொண்டு முன்னே விடுத்தானாயினும், ஈண்டுப் பகை யரசன் மதிலகத்தை முற்றும்போது தனக்கே உரித்தாய் வரவிருக்கும் அப் பகைநாட்டின்கண் முதன் முதல் அவற்றை நாட்கொண்டுவிடல் அதனினும் முதன்மையா மாதலின், ஆசிரியர் தொல்காப்பியனார் அவைதம்மை அவ் வஞ்சிப் பகுதியிற் கூறாமல் இவ் வுழிஞைப் பகுதியிற் கூறினாரென்க. இந் நுண்முறையினை நச்சினார்க்கினியர் ‘குடைநாட்கோளும் வாணாட்கோளும் இன்றியமையாதன அன்மையின், ஈண்டுக் கூறாராயினார், அவை உழிஞைக்குக் கூறுப அதற்கின்றியமையாமையின்’ என்று வஞ்சித் திணைப் பகுதியி* லெடுத்துக் காட்டினார். புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியரோ இதனைக் கருதினாரல்லர். குடையும் வாளுந் தன்னாட்டைக் காத்தலும் பகை மன்னரை அழித்தலுந் தொழிலாயுடைமையின், அம் முதன்மைபற்றி அரசன் நாட்கொள்ளுதற்கு அவ்விரண்டும் ஏனையவற்றைப் பார்க்கினும் இன்றியமையாத கருவிக ளாயின வென்க.

இவ் வுழிஞைத் திணைக்குப் புறப்பொருள் வெண்பா மாலை இருபத்தெட்டுத் துறைகள் வகுத்துக்கூறும். எனி னும் அவை யெல்லாம் பெரும்பான்மையும் முதன்மை யல்லாதனவாதலின் அவைதாம் மேற்காட்டிவந்த இத் தொல்காப்பியத்துறைகளிலேயே அடங்கியமையும். அவை அவ்வா றடங்கியமையுமாற்றை அவ்வவற்றின் விளக்கங் களையெல்லாம் இவைதம்மோடு ஒருங்கு பொருத்திக் கண்டு கொள்க.

வெற்றி :

இனி முதலிலேயே போர்செய்தலாற்றாது உடைந்து பின் வாங்கிய வேந்தன் அரணுதவியை நாடி அதனுட் புகுந்து பொருவானேயாயினும் அவன் மதின் முற்றிய அரசனை ஓட்டிப் புறத்தே வந்து போர்வெல்லலென்பது பெரும்பான்மையும் இயலாததொன்றாமாதலாலும், இஃது, “எதிர்செல்லா தடைத்திருந்தோன் புறப்பட்டுப் படுதல் சிறுபான்மை” யென்று நச்சினார்க்கினியர் கூறும் உரைத்

தொடரினும் ஓராறு விளங்குமாதலானும், அஃதேயன்றி வெற்றித் துறைகட்கெல்லாம் ஆசிரியர் இளம்பூரணர் உழிஞைத் திணைப் பாட்டுக்களையுந் தோல்வித் துறைகட்கெல்லாம் நொச்சித்திணைப் பாட்டுக்களையுந் தமது புறத்திணையியலி னுரையிடையே மேற்கோட் காட்டுதலானும், தொல்காப்பியனார் நூற்பாமுறைகளும் இவ்வகைத் துணிவுக்கே இடனாய் அமைந்திருத்தலானும் ஈண்டு உழிஞையரசர்க்கே பெரும்பான்மையும் வெற்றியுண்டாமென்பது நன்கு தெளியப்படும்.

---

# ரு. நொச்சித் திணை

[அரண் உதவியாய் அதனுள்ளிருந்து புறத்தாரொடு பொருது ஒருவன் தன்னைக் காத்துக்கொள்ளுதல்.]

குன்றுஉயர் திங்கள்போல் கொற்றக் குடை ஒன்று
நின்றுஉயர் வாயிற் புறம்நிவப்ப—ஒன்றார்
விளங்குஉருவப் பல்குடை விண்மீன்போல் தோன்றித்
துளங்கினவே தோற்றம் தொலைந்து.

—தகடூர். எயில் காத்தல்.

மலையுச்சியில் உயர்ந்து விளங்குந் திங்களைப்போல அரணகத்தரசனது வெற்றிக்குடை யொன்று உயர்ந்த மதில் வாயிலில் நின்று உயர்ந்து விளங்க, ஏனைப் பகைவருடைய விளங்கிய உருவத்தையுடைய பலவான குடைகள் விண்மீன்கள் போலச் சிறியவாய்த் தாழத் தோன்றித் தமது வெற்றித்தோற்றம் தொலைந்து நிலை தளர்ந்தன' வென்க.

'வாயிற்புறம்' என்பதிற் புறம் ஏழனுருபு; 'செல்லுமென் னுயிர்ப்புறத் திறுத்தந்த மருண்மாலை'* யென்னுங் கலித்தொகையினும் புறம் ஏழனுருபின் மேலதாய் வந்

* கலித். கஉ : ௬.

தமை காண்க. 'தொலைந்து துளங்கின' வென்க. 'தோற்றந்தொலைந்' தென்றார், தலைமைக்காட்சி கெட்டு நிலை ஒடுங்கின வென்றற்கு. நொச்சியரசன் குடைக்குத் திங்களையும் ஏனை உழிஞையரசர் குடைகட்கு விண்மீன்களையும் உவமை காட்டினமை, முறையே வெற்றியையுந் தோல்வியையும் உணர்த்தாநிற்கும்.

**நொச்சி யொழுக்கம்:**

போர்செய்த லாற்றாது அரணகத்துச் சென்று வாயிலடைத்துக்கொண்டு பதுங்கியிருந்த அரசன், மாற்றார் தன்னைப் பின்பற்றியபடியாய் அரணை அணுகி முற்றிப் பொருதல் கண்டு அவ்வரணுதவியாய் நின்று அவரொடு தானும் பொருது அரண்காத்தலே இங்கு 'நொச்சி யொழுக்கம்' அல்லது நோச்சித் திணை யெனப்படும். இந்நொச்சித் திணையை ஆசிரியர் தோல்காப்பியனார் 'அன்றி முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சியும்'* என்று 'குடையும் வாளு' மென்னும் நூற்பாவில் ஒரு துறையுறுப்புக் கூறி விளக்கி உழிஞைத் திணைக்கண் அடக்குவர். ஏனென்றால், அஃது உழிஞையைப்போல அத்துணை முதன்மையுடைய தாகாமையி னென்பது. புறப்பொருள் வெண்பாமாலையுடையார் தமது நூன் முறைப்படி இந்நொச்சித் திணைக்கென ஒரு தனிப்படலம் வகுத்து, அதற்கோரொன்பது துறைகள் கூறி நிறுத்துகின்றார்.

'நுவலருங் காப்பின் நொச்சி; ஏனை
மறனுடைப் பாசி; ஊர்ச்செரு வென்றா;
செருவிடை வீழ்தல்; திண்பரி மறனே;
எயிலது போரே; எயில்தனை யழித்தல்,
அழிபடை தாங்கல்; மகண்மறுத்து மொழிதலென
எச்ச மின்றி எண்ணிய ஒன்பதும்
நொச்சித் திணையும் துறையு மாகும்'

என்பது வெண்பாமாலையின் நொச்சித்திணை நூற்பாவாகும்.

---

* தொல். புறத். கரு.

எயில் காக்கும் அகத்து வீரர் அதற்குரிய நொச்சிப் பூவைத் தலையிற் சூடிக்கொள்ளல் 'நொச்சி' யென்றும், தமது படையைச் சார்ந்த வீரரும் மன்னரும் விண்ணுலகு சென்றமையை எடுத்துக் கூறுதல் 'மறனுடைப்பாசி' யென்றும், ஊரிடையே அரண் சிதையாதபடி உழிஞையா ரொடு பொருத பெருஞ்சிறப்பைக் கூறுதல் 'ஊர்ச்செரு' வென்றும், எயில் காக்கும் முனைப்புடன் பொருது செருக் களத்தில் உயிர் துறத்தல் 'செருவிடை வீழ்த' லென்றும் அறிதல் வேண்டும். மதிற்சுவர்களின்மேற் பாயுங் குதி ரைப்படைகளின் சிறப்பைக் கூறுதல் 'குதிரைமற' மாம். மதிலிடத்திற் போர் புரிதல் 'எயிர்போ' ராகும்; அப் போரிடையே நொச்சியார் சாய்ந்து பட்டு எயிலழிதல் 'எயிறனை யழித்த' லென்க. அங்ஙனமாயினும் நொச்சி வீரர் உறுதி தளராமல் எஞ்சிய படைகளைத் திரட்டி முனைந்து பொருது எயில் காத்தல் 'அழிபடைதாங்க' லெனப்படும். உழிஞை மறவர் வெற்றி யுற்றமையால், அவர் நொச்சி மறவர் மகளை மணம் புரிதற்கு வேண்ட, அதற்கு அவ் வாணகத்து வீரர் மறுத்து மொழிதல் 'மகண் மறுத்து மொழித' லெனப்படுகின்றது.

மேற்காட்டிய இத்தனைத் துறைகளும் நொச்சியாசற் குச் சிறிதும் வெற்றியைக் கூறாமற் பெரும்பான்மையும் அழிவையுந் தோல்வியையுமே விளக்குதல் தெற்றெனப் புலப்படும். இவ்வுண்மையைக்,

> [1]'காப்புடைப் புரிசை புக்குமாறு அழித்தலின்
> ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை
> பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே'*

என்னும் புறநானூற் றடிகளுநம் நன்கு விளக்கின. ஆதலாற் றன் ஆசிரியர் தொல்காப்பியனார் நொச்சியொழுக்கத்துக் குத் தோல்வியையே யேற்றி 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி யும்' என்று ஒரே துறைத்தொடரில் அடக்கி அவ்வளவோடு

1. மாறு - பகையை.
* புறநானூறு, உளஉ.

நொச்சி யொழுக்கத்தைக் கூறி முடித்துவிட்டார். எனவே புறப்பொருள் வெண்பாமாலையின் நொச்சிப்படலமும், அப்படலப்பாட்டுகளும் தொல்காப்பியனார் காட்டிய ஒரே தோல்வித்துறையில் அடங்கிவிட்டன வென்க. நுணுகி நோக்கினால், ஒரு துறையென வெடுத்துக் கூறுதற்குந் தொல்காப்பியர் இசைவுக்கு இடமுந் தகுதியும் பெறும் முதன்மையில் நில்லாத நொச்சி யொழுக்கத்தை ஐயனாரிதனார் ஒரு திணையெனவே யெடுத்து விளக்கலுற்றது, உலக வியற்கை உள்ள வியற்கைகளின் பயனை நூன் முறை யழகுக்கு உண்மையில் வேறுவதொன்றேயாம். இனி இத் திணைக்கட் காணப்படும் 'மகண் மறுத்து மொழித' லென்னுந் துறைப்பொருள் 'மகட்பாற் காஞ்சி' யோடு ஒருபுடை யொத்து நிற்றலின், அது 'காஞ்சித்திணை'க் கட்டுரையில் விளங்குதற் கிடம்பெறும். ஆதலின் அதனை அங்குக் கண்டுகொள்க.

## இடம் :

இனி இங்கு ஆராய்தற்குரியது, இந்நொச்சி யொழுக்கம் உள்ளிட்ட புறத்திணை உழிஞைக்கும் அகத்திணை மருதத்துக்கும் உள்ள ஒற்றுமை நுணுக்கமாகும். புறப்பொருள் உழிஞைக்கும் அகப்பொருண் மருதத்திற்கும் உரிய இடம் மருதநில மென்பது உழிஞை யொழுக்கம் நிகழுமிடமான அரசனது அரண், வயலும் வயல் சார்ந்த இடமுமான மருத நிலத்தின்கண்ணதாதலைப்

> [1]'பிணங்குகதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று
> உணங்குகலன் ஆழியின் தோன்றும்
> ஓர் எயில்*'

என்று புறநானூற்றுள் வரும் ஆசிரியர் குன்றூர்கிழார் மகனார் பாட்டினால் அறிந்துகொள்க. இதன்கண் அவ்வாசிரியர், பச்சைப் பசேலெனப் பயிர் பரந்த கழனிகளின் நடுவில் அமைந்திருக்கும் அரசனது கோட்டையரணுக்கு, நீலப்

1. பிணங்கு - செறிந்த. கலன் - கப்பல்.
* புறம். ௩௩௮.

பாயலை விரித்தாற் போன்ற நீர்ப்பரப்பினை யுடைய கடலின் நடுவிடத்ததான கப்பலை உவமை காட்டி மிகவுந் தெளி வாய் விளக்கியிருப்பது நினைவிற் பதிக்கற்பாலது.

## காலம் :

ஆசிரியர் தொல்காப்பியர் 'வைகுறுவிடியன் மருதம்'* என்று மருதத்துக்கு விடியலையே பொழுதாக ஆணை தருவர். கறுவுமேற்கொண்டு பகைமேற் சென்ற வஞ்சிமன்னன் இரவெல்லாம் பாசறையிற் றங்கியிருந்து விடியற்காலையிற் போர்க்கெழுந்து மதின்முற்றுவானாதலின், புறப்பொருள் உழிஞைக்கும் பொழுது விடியலாதல் கண்டுகொள்க. இவ்வுண்மையை 'மருதத்திற்கு இது புறனாயவாறு என்னை யெனின், வஞ்சியிற் சென்ற வேந்தனொடு போர் செய்த லாற்றாது உடைந்த மாற்று வேந்தன் அரண் வழியாகப் போர் செய்யுமாதலானும், அஃது அவர் நாட்டகத்தாகலா னும், அவ் வழிப் பொருவார்க்கு விடியற்பொழுது கால மாக லானும் அதற்கு அது புறனாயிற்றென்க' † என்று ஆசிரியர் இளம்பூரணர் தமதுரையிற் றெளிவாய் விளக்குதலின் வைத்தும் இனிதறியப்படும்.

## பொருள் :

இனிப் பூவென்னுங் கருப்பொருளும் இவ் வகப்புறத் திணைகட்கு ஓரினமுடையனவேயாம். மருதத்திணையொழுக் கத்தில் தலைவனுந் தலைவியும் ஆண்டுப் பயன்படுத்துவன தாமரையுஞ் செங்கழுநீரும் முதலான மருதநிலத்துப் பூக்களாகும். இங்ஙனமே உழிஞை யொழுக்கத்துக்கும் அதன்கண் அடங்கும் நொச்சி யொழுக்கத்துக்கும் அரசர் அணியும் உழிஞைத்தழையும் நொச்சிப்பூவும் மருதநிலத் தனவேயாயின. உழிஞைப்பூடும் நொச்சிச்செடியும் மருத நிலத்தின்கண்ண வென்பது முறையே 'பொலங்குழை யுழிஞையொடு பொலியச் சூட்டி' ‡ யென்னும் புறநானூற் றடியி னுரையில் உரையாசிரியர் 'உழிஞை, கொற்றா' னென்றுறைத்தலானும்,

---

* தொல். அகத். ௬. † தொல். புறத். ௮. ‡ புறம். ௫௦.

[1] "நீரற வறியா நிலமுதற் கலந்த
　கருங்குரல் நொச்சி" *

என்னும் புறநானூற்றடிகளில் வெறிபாடிய காமக்கண்ணி யார் நொச்சி நீர்வளமிக்க மருதநிலத்தின்கண் விளைவதா மென் றுரைத்தலானுந் தெளியப்படும்.

**வாயிலடைப்பு:**

இனி உரிப்பொருள் நிகழ்ச்சியினும் இவ்வகப் புறத் திணைகள் மிகவும் ஒற்றுமையுடையனவாய் விளங்குகின் றன. அகப்பொருண் மருதத்துக்கு உரிப்பொருள் ஊட லென்று நிறுத்தினர் ஆசிரியர் தொல்காப்பியனர். தலை மகன் இரவெல்லாம் பரத்தையர் சேரியனுய்ப் பொழுது கழித்து விடியற்காலையிற் றலைமகள் வாயிலை அண்மி உட் செல்ல விழைந்தானக, அஞ்ஞான்று தலைமகள் அவ்விரவு முழுதும் அவனைப் பிரிந்திருந்த பிரிவாற்றுமையினல் உள்ளங் கவன்று ஊடற் குறிப்பினளாய் வாயிலடைத்துக் கொண்டு உள்ளிருப்பள். இங்ஙனமே புறத்திணை யுழிஞை யிலும் அரண்புறத் தரசன் உள்ளிடத்தைக் கதுவ விழை கின்றனனக, அகத்தரசன் அதற்கு மறுத்து வாயிலடைத் துக்கொண்டு உள்ளிருக்கின்றனன். இன்னும் இல்லகத் திருந்த தலைவி வாயிலடைத்துக்கொண் டிருந்தனளேனும் உற்ற நேரங்கண்டு வாயிலைத் திறந்து தன் றலைவனேடு ஊடற்போர் புரியவே விழைகின்றமைபோல, வாயி லடைத்துக்கொண் டிருக்கும் அரணகத்தரசனும் உற்ற நேரத்தில் வாயில் திறந்து வெளிப்பட்டுப் புறத்தானெடு பொருதல் செய்யவே விரும்புகின்றன். 'ஒருவன் வாயில் வேண்டத் திறவாது அடைத்திருந்த ஒப்புமையானும், உள்ளிருந்தவனும் புறப்பட விரும்புதலானும் உழிஞை மருதத்திற்குப் புறனயிற்'றென்றார் நச்சினர்க்கினியரும். ஆகவே இவ்வாற்றுலெல்லாம் புறத்திணை உழிஞைக்கும் அகத்திணை மருதத்துக்கும் உள்ள ஒற்றுமை நுணுக்கம் இனிது விளங்குதல் காண்க.

---

1. நில முதல் - நிலத்தில்.

* புறம். உஎக.

முத்தொழில் முனைப்பு:

இனிச் சற்று நுணுகி நோக்குவார்க்கு வயலும் வயல் சார்ந்த ஊரிடமுமாகிய மருதநிலத்தில் மண்முதலான ஐம்பொருள்களிலுந் தீயின்முனைப்பே நன்றாய் விளங்கித்திகழு மென்க. அற்றன்று: ஆசிரியர் தொல்காப்பியனாரே மருத நிலத்தைப் 'புனலுலக'* மெனக் கூறினராலெனின், அவர் முகில் வேந்தனை முதன்மையாய் வைத்து அவ் விடத்து நீர்வளத்தைக் குறித்தற்கே அங்ஙனங் கூறினமை யின், அதனால் ஈண்டைக்காவதோ ரிழுக்கில்லை யென் றறிந்துகொள்க. மருதநிலத்தின் றோற்றமெல்லாம் பெரும் பான்மையும் விளைச்சலாகும். அதுவேயுமன்றிக் குறிஞ்சி முல்லை முதலான ஏனை நான்கு நிலங்களையும்விட இந்நிலத் தின் மட்டுமே அறிவான் மிக்க மக்கள் நெருங்கி யுறைந்து தொழிலியற்றும் உலக முயற்சிகள் செவ்வையாய் நிகழப் பெறுகின்றன. ஆதலால், ஏனை யெல்லா நிலங்களைக் காட் டினும் மருதநிலத்தின்கண்ணே இயற்கையுஞ் செயற் கையுமான தொழின்முறைகள் தோன்றுதலும் நிகழ்தலும் அழிதலுஞ் சிறப்பாக நிகழக் காண்கின்றோம். எனவே தோற்ற நிகழ்ச்சியிறுதிகளெனப்படும். இம் முத்தொழில் நிகழ்ச்சிகளும் மருதநிலத்திற்கே சிறப்பினுரியவென் றறிந்துகொள்க.

ஒரு பொருளைத் தோற்றுவதும் அதைச் சிலகாலம் இருத்துவதும் பின்னர் அழிப்பதுமான இம் முத்தொழில் களையும் நிகழ்த்துவது, மண் முதலான ஐம்பொருள்களி லுந் தீப்பொருளொன்றேயாம். இத் திறத்தில் நீரும் வல்லதெனினும், தீயே அதனினும் மிக்க ஆற்றலுடைய தாய்த் திகழ்கின்றதென்க. தீப்பொருள் முனைந்து இம் முத்தொழில்களைச் செய்யாநிற்ப, நீர் அதற்கு உதவியள வாய் மட்டும் நின்று பயன்படாநிற்கின்றது. நீரின் வல் லமை அவ்வளவே யாதலின், தீப்பொருட்கே இம் முத் தொழில்களையும் நன்காற்ற வல்ல இயற்கைத் திறமும்,

---

* தொல். அக. ரு.

முதன்மையும் மிகுதியுமுண்டென் றறிதல்வேண்டும். மக்கள் தாய் வயிற்றிற் கருவாயிருக்குங் காலத்தில் தீயே முதன்மையாய் நின்று அதனை உருவாக்கித் தோற்றுகின்றது. பெட்டைப் பறவைகள் அடைகாத்துக் குஞ்சு பொரித்தலும் ஈண்டு நினைவுகூரற்பாலது. பின்னர் மண்ணிடையிற் பிறந்து உயிர்வாழுங் காலத்திலுந் தீயே முதன்மையாகவும் உறுதுணையாகவும் நின்று மக்களைக் காப்பாற்றுகின்றது. இறுதியில் இறக்குங் காலத்திலும் அதுவே முனைந்து நின்று அழித்தொழிக்கின்றது. இவ்வியற்கை நுட்பங்களை ஆராய்ந்து இனிதுணர்ந்து கொண்டமையாற்றான் நந் தமிழ்ப் பெருஞ் சான்றோர்கள் தீயின் இயல்பினனாய் நின்று இவ்வுலகத்தை அழிக்குங் கடவுளே மீண்டும் அதனைப் படைக்கவுங் காக்கவும் உரியவனென்றும், அவன் தீவடிவினனாகவே இருத்தல்வேண்டுமென்றும், மிகவும் ஆழ்ந்தகன்ற நுட்பவறிவினால் நுணுகியறிந்து கடவுளுண்மை தேறுவாராயினர். இன்னும் இவ்வுண்மை நுணுக்கங்களை யெல்லாம் சிவஞானபோதம் முதலான மெய்யறிவு நூல்களிற் பரக்கக் கண்டுகொள்க.

"அறுதியில் அரனே எல்லாம் அழித்தலால் அவனால் இன்னும்
பெறுதும்நாம் ஆக்க நோக்கம் பேரதி கரணத் தாலே"*

என்னுஞ் சிவஞான சித்தியார் அருண்மொழி இங்கு நினைவுகூரற்பாலது.

## வெம்மை யியல்பு :

இவ்வாறு மருதநிலத்தின்கண் தீப்பொருளொன்றே முனைந்து விளங்குமெனக் காண்டலால், இனி அத்தீயினியல்பே அகப்பொருண் மருதத்துக்கும் புறப்பொருளுழிஞைக்கும் இடனாதல் வேண்டும். தீயினியல்பை 'வெம்மை' யென்று ஆசிரியன்மார் கூறுப. மருதவொழுக்கமென்பது ஊடல்; எனவே தலைவி வெம்மையுடையளாய் நின்று தன் றலைவனொடு ஊடுகின்றமை வெம்மை

---

* சுபக்கம், க : ருரு.

யொழுக்கமே யாகின்றது; இங்ஙனமே புறப்பொருட் கண்ணும் உழிஞை யரசனும் நொச்சி யரசன்பால் வெம் மையுடையனாய் மதின் முற்றுதலின், அவனொழுக்கமும் வெம்மை யொழுக்கமேயாதல் கண்டுகொள்க. அவ்வாறு யின் வெட்சி யொழுக்கம் முதல் இவ்வுழிஞைகாறுங் கூறப் பட்டனவும், தும்பை யொழுக்கம் முதலாக இனிக் கூற விருப்பனவும் சினக்கொதிப்பாகிய வெம்மையினாலேயே நிகழ்வனவாய்க் காணப்படாநிற்பவும், நீவிர் வெம்மை யியல்பை இவ்வுழிஞை யொழுக்கம் ஒன்றற்கு மட்டுமே ஏற் றிக் கூறுதல் என்னை யெனின், நன்று, புறப்பொருளொழுக் கங்கள் எல்லாவற்றுள்ளும் இவ்வுழிஞை யொழுக்கம் ஒன் றுமே இளைத்தார்மேற் காட்டும் வெம்மை யொழுக்கமாய் விளங்காநிற்கின்றது. ஏனையவெல்லாம் ஒத்தார்மேற் காட் டும் வெம்மையவா மென்க. இளைத்தார்மேற் செல்லும் வெம்மையே வேறுபாடு விளங்க வெம்மையென விளங்கித் தோன்றுவதாமல்லது ஒத்தார்மேற் செல்வது அங்ஙன மாகாது. நொச்சியரசன் போர்செய்த லாற்றாது படை தளர்ந்து உதவியற்று இளைத்து அரணுதவியை நாடினனாத லின், அவன் உழிஞையார்க்கு இளைத்தவனே யாவன். அத னாற்றான் அவன் அரணினின்றும் வெளிப்பட்டு உழிஞை யரசனோடு படைவலிமையில் ஒத்து போர்புரிந்து வெற்றி யடைதல் இனி மிகவும் அருமையா மென்று மிகப் பழைய தான தொல்காப்பியம் முதலாக எல்லாப் பொருளிலக்கண நூல்களும் ஒத்துக் கருதின. ஆகவே ஓரரசன் புறத்தாரை எதிர்க்கு நோக்கஞ் சிறிது மின்றி அரணகத்தைக் காத்துக் கொள்ளு நோக்கமொன்றே யுடையனாய் வெம்மைத் தன் மையில் அளவு குறையாநிற்ப, மற்றுப் புற முற்றி யிருக்கும் ஏனையோ ரரசன் தன்னைக் காக்கு நோக்கஞ் சிறிதுமின்றி அகத்தாரை எதிர்க்கு நோக்கமே மேற்கொண்டு வெம்மை யில் அளவுமிகா நிற்பன். ஆதலால், வெட்சி முதலாக வரும் ஏனையெல்லாப் புறத்திணை யொழுக்கங்களையும்விட இவ்வுழிஞை யொழுக்கத்தின் மட்டுமே வெம்மை யியல்பு வேறுபட்டு விளங்கித் தோன்றுவதாமென் றறிந்து கொள்க. இங்ஙனமே இதன் அகத்திணை யொழுக்க மெனப்படும்

ஊடல் நிகழ்ச்சியினும் தலைவன் தன் றலைவிக்கு இளைத்த நிலையில் முகநோக்கி நின்றனனாகத் தலைவி அவன்மேல் வெம்மையுடையளாய் ஊடல் நிகழ்த்துதலும் இங்கு இனப்படுத்தி உற்றுநோக்கற்பாலது.

**கண்ணொளி :**

தீயின் வெம்மை விளக்கத்தைப் புலனறிவது கட்பொறி யாதலின், ஊடற்போரினும் மதிற்போரினும் மெய் முத லான ஏனை நாற்பொறிகளினுங் கட்பொறியே மிகவும் பயன்படலாயிற்றென்க. ஊடலொழுக்கத்தில் தலைவன் தன் றலைவியை அருகில் அணுகானாகவே அவனுக்கு மெய்யும் வாயும் மூக்கும் ஆண்டுப் பயன்படா. செவி சிறுகவே பய னாம். எனவே கட்பொறியே தலைவியின்கண் உருத்தெழுந்த வெம்மை விளக்கத்தைக் காண்டலில் அவனுக்கு மிகுதியும் பயன்படுமென்க. இங்ஙனமே உழிஞையொழுக்கத்திலும் அரசர் ஒருவரையொருவர் அணுகிப் பொருதற் கியலாத வாறு இடையே அரண் அமைந்திருத்தலின், அவரிடையே வெம்மை விளக்கத்தை யறிந்துகொள்ளற்குக் கட்பொறியே மிக்குப் பயனாமென் றறிந்துகொள்க. ஒளி என்பது வெம்மை யியல்பினதாதலின், அதனை யுணரும் பொறி கட்பொறியேயாகும். மெய்ப் பொறியினானு முணரலா மெனின், அற்றன்று, வெம்மையியல்பின் பெருக்கத்தையே அஃது ஒரு சிறிது ஊறியறிய வல்லதாமல்லது, மற்றதன் நுணுக்கமான விளக்கத்தை அறியமாட்டாதா மென் றுணர்க. மேலும், மென்மை வன்மைகளைத் தொட்டறி தலே மெய்ப்பொறியினியல்பாகு மென்பதும் ஈண்டறியற் பாலது.

**அறியாமை நீக்கம் :**

இனித் தீயின் முனைப்பியல்பு பொருள்களின் அணுக் களைப் பிரிப்பதாகும். உழிஞையொழுக்கத்திலும் ஊட லொழுக்கத்திலும் அகப்பொருட்டலைவரும் புறப்பொரு ளரசருந் தத்தமக்குட் பிரிவு தோன்ற நின்றொழுகலை அறிந்துகொள்க. மேலும், புறப்பொருளரசனும் அகப் பொருட்டலைவியும் வெம்மையுடையராய் ஒழுகலின், அவர்

மாட்டும் அவர்க் கெதிராவார் மாட்டும் இயற்கையே புணர்ந்து கிடக்கும் அறியாமை யென்னும் பழமலம் அவ் வெம்மையி னியல்பினுற் றுகளாக்கப்பட்டு விலகலின், அவ் வாற்றால் அவர்க்கு உயிரறிவு நனிபெரிதும் விளங்காநிற் கும். இக்கட்டுகளும் எதிர்ப்புகளுமான வெம்மைகள் மக் கட்கு அவர்தம் வாழ்விடையே அடிக்கடி தோன்றுதலாற் றுன், அவ் வெம்மையி னியல்பாற் பழமலம் வலிகெட்டுப் பிரிந்துபோக, அவர்க்குப் பேரறிவு விளக்கமாகின்றது. இவ்வியற்கை நுணுக்கத்தை இனிதுணர்ந்தே பேரறிவு சான்ற நம் செந்தமிழ் முதுமக்கள் இறைவனைத் தீயுருவின் வழியாய் வழிபட்டுத் தம் மலமிரியப் பெற்றுப் பண்டு தொட்டே அறிவு விளங்கி வந்தன ரென்க. அறிவுக்கு ஒளியினை யேற்றி 'அறிவொளி' யென்றும், 'அகக்கண்' என்றுங் கூறுந் தமிழ்வழக்கும் இவ்வுண்மைகளை யெல்லாம் மெய்ப்பியாநிற்கும்.

## அறிவுப் பேறு

மேலும், புறப்பொருளொழுக்கங்கள் பலவற்றுள்ளும் இவ்வுழிஞை யொழுக்கம் ஒன்று மட்டுமே அறிவின்றிறம் மிக்கு விளங்கப் பெறுவதாகும். வெட்சியுங் கரந்தையும் வஞ்சியுந் தும்பையும் வாகையு மெல்லாம் பெரும்பான்மை யும் ஊக்கத்தினுலும் உடம்புறுதியினுலும் நடைபெறு வனவா மெனவும், மற்றிவ் வுழிஞை யொழுக்க மொன்றுமே பெரும்பான்மையும் அறிவின் றிறத்தால் நடைபெறுவதா மெனவும் பகுத்தறிந்து கொள்ளல் வேண்டும். பகைவர் அணுகுதற் கியலாதவாறு நீரரண் நிலவரண் மலையரண் காட்டரண் என்னும் நால்வகை யரண்களையுஞ் சூழ்ச்சி களும் வஞ்சனைகளும் வாய்ப்ப அமைத்து, அவற்றினடுவில் வலிமை சான்ற மதிலரணங்கள் பலவுங் கோட்டைகளும் எழுப்பிப் பல்வேறு வகையான போர்ப்பொறிகளையுங் கருவிகளையும் ஆண்டு நிறுத்தி, எத்தனை நாட்களாயினும் அங்குநின்றும் புறப்படாது தனி வாழ்க்கை செலுத்தும் அருநிலையுடையராய் அகத்தரசர் புறத்தரசரொடு பொருதலும், இங்ஙனமே புறத்தரசரும் மேற்காட்டிய

அணுகற்கரிய இத்தனை இடையூறுகளையுந் தப்பி அவ் வலிய அரண்களையும் அழித்து அகத்தரசனைக் கைப்பற்றுதலும் எத்துணை ஆன்ற அறிவின் திறத்தால் நடைபெறல் வேண்டும்! மக்களின் அறிவு விளக்கமே குறிஞ்சி முல்லை முதலான ஏனை நிலங்களைக் காட்டிலும் மருதநிலத்தின்கண்ணேயே அவர்தம் வாழ்விடங்களாலும் வாழ்முறைகளாலும் நன்கு விளங்கப் பெறுகின்றதென் றறிந்துகொள்க.

இனி அகப்பொருளொழுக்கத்தின்கண்ணும் ஏனைய முறைகளெல்லாம் உடம்பின் றொடர்பால் இன்பம் விளைப்பனவாக, ஊடன் முறைமட்டும் அறிவுப் போரினால் இன்பம் விளைவியாநின்றமையும் இங்கு நினைவுகூரற்பாலது. எனவே, உழிஞையாலும் ஊடலாலும் புறப்பொருளரசரும் அகப்பொருட்டலைவரும் பயின்று பெறுமியல்பு அறிவேயா மென்பது நுண்ணுணர்ந்து தெளியப்படும்.

இவ்வாற்றால், அகப்பொருண் மருதமும் புறப்பொருளுழிஞையும் அகம்புறமாய் இயையுமாறும், தீப்பொருளின் இயல்பான உழிஞையெனும் வெம்மையுணர்ச்சி, கட்பொறி கொண்டு ஒளிகாணுஞ் செயலால், மருதமென்னும் அறிவின் றிறமாய் நுணுகியமையுமாறும் இனிது விளங்காநிற்கு மென்பது.

---

## ௯. தும்பைத் திணை

[மாற்றரசர் இருவரும் தத்தம் படைகளுடன் ஊக்கமிகவார்ந்து தந்நலங் கருதாது போர்செய்தல்.]

ஆர்ப்பெழுந்த ஞாட்பினுள் ஆள்ஆள் எதிர்த்தோடித்
தாக்கி எறிதர வீழ்தரும் ஒண்குருதி
கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்கைப் போன்றனவே
போர்க்கொடித் தானைப் பொருபுனல் நீர்நாடன்
ஆர்த்தமர் அட்ட களத்து.

—களவழி நாற்பது, ௧௭.

'போர்க்கொடியைப் பொருந்திய சேனையையுடைய அலைமோதும் புனல்மிக்க காவிரி நாட்டினனான செங்கட் சோழன் போரில் ஆரவாரித்து மாற்றாரைக் கொன்ற பொருகளத்தில், ஆரவாரம் மிகுந்த அப் போரின்கண் ஆளும் ஆளும் எதிர்த்தோடி ஒருவரை யொருவர் தாக்கிப் படைகளை வீசுதலால் அவருடம்பினின்றும் ஒழுகாநின்ற செந்நீர்த்துளிகள் கார்த்திகைத் திருவிழாவில் வைக்கப் படும் நிரைவிளக் கொளிகளை யொத்திருந்தன' வென்பது.

எழுந்த, மிகுதியை யுணர்த்தாநின்றது; 'ஒண்குருதி' யென்றார், நிறத்தின் விளக்கம் புலனாதற்கு மிகுதிப் பொருளில் வருங் கழியென்பது ஈண்டு, மிகுதியாய்க் காணப்படுங்கால் ஏற்படும் நிரையினை விளக்கிற்று. பொருந ருடம்பினின்றும் ஒழுகுஞ் செந்நீர்த் துளிகள் விளக்கு நிரைகளின் சுடர்ப் பிழம்புகளை யொத்திருந்தன வென் னும் உவமையழகு பெரிதும் உணர்ந்து மகிழற்பாலது. சாறு; விழா, இச்சொல் இப்பொருட்டாதல் 'சாறயர் களத்து' என்னுஞ் * சிலப்பதிகாரத் தொடரானு முணர்க. கார்த்திகை நாளன்று நிரைநிரையாக விளக்கிட்டு விழாக் கொண்டாடுந் தமிழர் வழக்கம் பண்டுதொட்டே நிகழு முண்மை,

> " குறுமுயன் மறுநிறங் கிளர மதிநிறைந்
> தறுமீன் சேரும் அகலிருள் நடுநாள்
> மறுகுவிளக் குறுத்து மாலை தூக்கிப்
> பழவிறன் மூதூர்ப் பலருடன் துவன்றிய
> விழவுடன் அயர வருகதில் அம்ம." †

என்னும் நக்கீரரது அகப்பாட்டினும் மிகவும் விளக்கமாய்க் கூறப்பட்டிருக்கின்றது. நீர்நாடு, சோழநாடு; காவிரி யாற் பெற்ற பெயர். களத்து உருபுதொகச் சாரியை நின்றது. இக் களவழிப்பாட்டு, பொருநரை அமர்க்களத் திற் படையெறிந்து கோறல் நுவலலின், இஃது 'ஒள்வாள்

---

* சிலப். கடலாடு. கக௨.   † அகம். கசக.

வீசிய நூழிலு'* மென, ஆசிரியர் தொல்காப்பியனார் யாப்புறுத்து நிறுத்திய நூழிலாட்டென்னுந் தும்பைத்திணைத் துறைக்கண் அடங்குமென்க. இதனையே பாடாண்டிணைப் படுத்துரைப்பின் அது வேறாம்.

## போர் ஒழுக்கம் :

தும்பை யொழுக்கமென்பது போர்செய்தல். எனவே அரசரும் அல்லது அவரேவல் கேட்கும் மறவருந் தம்முண் மாறுபட்டுப் போர்செயு மிடமெல்லாம், ஆண்டு அவர்க்குத் தும்பையொழுக்க முண்டென்றறியப்படும். மறவர் முதன்முதல் ஆநிரைகொண்ட காலத்திலும், பின்னர்க் கறுவெண்ணங் கொண்டு பகைமேற் சென்ற காலத்திலும், மதில்வளைத்த காலத்திலும் ஆங்காங்கும் அவர்க்குப் போர்நிகழ்ந்தன. அப் போரொழுக்க மெல்லாமுந் தும்பை யொழுக்கமென்று துணிதல்வேண்டும். ஆனால் அவையெல்லாம் முறையே வெட்சிப் புறத்துத் தும்பை யெனவும், வஞ்சிப் புறத்துத் தும்பை எனவும், உழிஞைப் புறத்துத் தும்பை யெனவுங் கூறப்படும். ஏனென்றால் நிரைகோட லேதுவாகப் போர்நிகழலின், அப் போர் நிகழ்ச்சி 'வெட்சிப் புறத்துத் தும்பை'யெனப் பட்டது. மேற்செல்லல் ஏதுவாகவும் மதின்முற்றுத லேதுவாகவும் போர் நிகழ்தலின், அவை வஞ்சிப்புறத்துத் தும்பையெனவும் உழிஞைப் புறத்துத் தும்பையெனவுங் கூறப்பட்டன. ஆனால் இனி நிகழும் போர் நிகழ்ச்சி அங்ஙனம் பிறிதோ ரேது நிகழுங்காலத்தில் உடன் நிகழ்வதன்றித் தானே தனித்து நிகழ்வதாகும். ஆதலாற்றான் இவ்வொழுக்கம் வெறுந் தும்பையெனவே கூறப்பட்டது.

இத்தும்பை யொழுக்கத்தில் மறவர்க்கும் அரசர்க்கும் முதன்மையாகப் பயன்பட்டு நிற்பது அவரவர் வலிமையே யாகும். இவ் வலிமையில்லாக்கால் இவர்தமக்குட் போரும் நிகழ்தலில்லை. இதனாற்றான் ஆசிரியர் தொல்காப்பியனார்,

* தொல். புறத். ௭௭.

"[1]மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
சென்றுதலை யழிக்குஞ் சிறப்பிற் றென்ப"*

என்று நூற்பாவியற்றித் தும்பைத்திணைக் கருத்தை நன்கு விளக்கினர். இந்நூற்பாவில் மைந்து பொருளாகத் தலை யழிக்குஞ் சிறப்பிற் றென்றமையால். வஞ்சனையாற் பொருதலும் ஆணைமொழியாற் பொருதலும் முதலாயின தும்பைத் திணைக்குச் சிறப்பாகாவென்பது பெறப்படும். இவற்றை விளக்குதற்கே ஆசிரியர் மைந்து பொருளாக என்று விதந்தியற்றியதூஉ மென்க.

இனி இத் தும்பையொழுக்க மென்பது, வந்த வேந்தனும் எதிர் சென்ற வேந்தனும் ஒரே செயலாய் மேற்கொள்ளப்படுகின்றமையின், அவ்விருவ ரொழுக்கமுந் தும்பை யொழுக்கமே யாயிற்று. ஆசிரியரும் 'இருபாற் பட்ட வொரு சிறப்பின்றே'† யென்று இவ் வுண்மையை மேல் நூற்பாவிற் கிளந்தோதினர். பகைகொண்ட மன்னர் இருவகையினரும் இவ்வாறு தத்தம் மறவர் முதலான படைகளுடன் பொருகளங் குறித்துச் சென்று வலிமையே இடையீடாக நின்று பொருதலென்னும் ஓரொழுக்கமே யுடையராய் ஒருவரையொருவர் தாக்கிக் கொடும்போர் புரிதலே தும்பைத்திணைக் கருத்தாதல் கண்டுகொள்க.

## துறை வகுப்பு :

இனி இத்திணைக்குத் தொல்காப்பியனர் பன்னிரண்டு துறைகள் கூறுவார் :

" தானை யானை குதிரை யென்ற
நோனர் உட்கும் மூவகை நிலையும் ;
வேன்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்
தான்மீண் டெறிந்த தார்நிலை யன்றியும்
இருவர் தலைவர் தபுதிப் பக்கமும்

---

1. மைந்து : வலிமை.
* தொல். புறத். ௭௧.
† ,, ,, ௭௨.

ஒருவன் ஒருவனை யுடைபடை புக்குக்
கூழை தாங்கிய பெருமையும்; படையறுத்துப்
பாழிகொள்ளும் ஏமத் தானும்;
களிறெறிந் தெதிர்ந்தோர் பாடும்; களிற்றொடு
பட்ட வேந்தனை அட்ட வேந்தன்
வாளோ ராடும் அமலையும்; வாள்வாய்த்
திருபெரு வேந்தர் தாமும் சுற்றமும்
ஒருவரும் ஒழியாத் தொகைநிலைக் கண்ணும்
செருவகத் திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ
ஒருவன் மண்டிய நல்லிசை நிலையும்;
பல்படை யொருவற் குடைதலின் மற்றவன்
ஒள்வாள் வீசிய நூழிலும் உளப்படப்
புல்லித் தோன்றும் பன்னிரு துறைத்தே."*

என்பது. இவற்றுள் தானைப் போர்நிலையும், யானைப்போர் நிலையும் குதிரைப் போர்நிலையு மென்னும் மூன்றும் மூன்று துறைகளாகக் கூட்டிக் கணக்கெண்ணிக் கொள்க. இனித் 'தானை' யென்பது மறவர்கள் போர்செய்யும் நிலையாம். தும்பைத் திணைத்தொடர்பாய் இம் மறவர்களுக்கு நிகழும் நிகழ்ச்சிகளெல்லாம் 'தானை' யென்னும் இத் துறைக் கண் அடங்கும். போர்க்கெழுகின்ற வீரர் அப் போர் நிகழ்ச்சிக் குரிய தும்பைப்பூவைத் தலைமிசை யணிந்து வீரக்களிப்புந் துணிவுமுடையவராய் அரசனாற் செய்யப் படுஞ் சிறப்புகளை யேற்றுக்கொண்டு அவனையும் அவனுக் குத் துணையாய் வந்த ஏனையாசர்களையும் வாழ்த்திப் போர்க்களஞ்சென்று அவண் கீழ்நின்றும் அல்லது குதிரை முதலியவற்றின்மே லூர்ந்தும் பகைவரைப் பொருள்செய்யாது படையெறிந்தும் அன்றிக் கைகலந் தும் புறங்கொடாமற் பொருதலே தானையின் செயலென்க. வீரர் பூச்சூடுதலைத் தும்பை யென்றொரு துறையாகவும், பின்னரவர்கள் எழுச்சியுடையராய் அரசன் செய்யுஞ் சிறப்புகளையேற்றுப் புறப்பட்டுச் செல்லுதலைத் தும்பை யரவ மென்று மற்றொரு துறையாகவும் இத் தானைத் துறைக்கு வேறாகப் புறப்பொருள் வெண்பாமாலை கூறும்.

---

* தொல். புறத். கஎ.

போர் நிகழ்த்தும்போது மறவர் தும்பைப் பூ அணியு முண்மையை, ஆசிரியர் நச்சினார்க்கினியர் அதனைப் 'போர்ப் பூ'* வென்றே மதுரைக் காஞ்சி யுரையில் உரை கூறுதலின் வைத்தும் உணர்ந்துகொள்க. போர்க்கெழும் போது அரசன் வீரர்க்குப் போர்வெல்லும் அடையாள மும், பல ஊர்களையுடைய சிறுநாடும், மிகுந்த பணமும், மருத நிலமும், யானையும், குதிரையும் முதலாயின வழங்கிச் சிறப்புச் செய்வானென்பது

[1] "வெல்பொறியும் நாடும் விழுப்பொருளும் தண்ணடையும்
கொல்களிறும் மாவும் கொடுத்தளித்தான்—பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தலைபனிப்பப்
பன்மணிப் பூணான் படைக்கு."†

என்னும் புறப்பொருள் வெண்பாமாலைப் பாட்டாற் பெறப்படும்.

இனி யானையுங் குதிரையும் மாற்றார் படைமேற் றாக் கிய படியாய்ப் போர் செய்தலை 'யானை நிலை'யும் 'குதிரை நிலை'யும் என்னுந் துறைகளாம். யானைப் படை யுங் குதிரைப் படையும் போரிற் கலந்து போர்செய்யு முண்மையை,

[2] "பரும இனமாக் கடவித் தெரிமறவர்
ஊக்கி யெடுத்த அரவத்தின் ஆர்ப்பஞ்சாக்
குஞ்சரக் கும்பத்துப் பாய்வன குன்றிவரும்
வேங்கை யிரும்புலி போன்ற புனனாடன்
வேந்தரை அட்ட களத்து."‡

என்னும் போய்கையா ரியற்றிய களவழிப் பாட்டினால் நன்கு தெளியலாம்.

---

1. பொறியும் - அடையாளமும். தண்ணடையும் - விளைநிலனும். மாவும் - குதிரையும். நயவார் - பகைவர்.

2. கடவி - செலுத்தி. குஞ்சரக்கும்பத்து - யானையின் மத்தகத்தில். இவரும் - ஏறும்.

* மதுரைக் காஞ்சி, ருகசு.

† புறப்-வெ. தும்பைப். உ. ‡ களவழி நாற்பது, கசு

தேர்ப்படை தானை, வீரவுணர்ச்சி கொண்டு பொருத லின்மையின், ஆசிரியர் அதற்கொரு தனித்துறை வகுத் திற்றிலர். 'குதிரையானன்றித் தேர் தானே செல்லாமை யாற் றேர்க்கு மறமின்றென்று அது கூறாராயினார்' * என்று நச்சினார்க்கினியரும் இதனை எடுத்துக் காட்டினார். ஆனால் வெண்பாமாலைகாரர் இவ் வியற்கை நிலையை எண் ணிப் பாராமல், 'தேர்மற' மென்றும் ஒரு துறை வகுப் பார். இயற்கைத் தன்மைகளைச் செவ்வையாய் உற்றுநோக்கி அவையுள்ளவாறே உரைநிறுத்தி நூலியற்றுத லென்பதே, பண்டைக்காலத் தமிழ்ப்பெரும் பனுவல்களுக்கும், பின் றைக் காலப் பனுவல்களுக்குமுள்ள முதன்மையான வேறு பாடாகும். மேலும், ஆசிரியர் தொல்காப்பியனார் தானை யானை குதிரைகட்குத் துறைவகுக்கு மிடத்து,

[1] "தானை யானை குதிரை யென்ற
நோனா ருட்கு மூவகை நிலையும்."†

என்று ஏற்ற பெற்றிச் சொற்பெய்து மிகவிழிப்பாய் நூற்பா வியற்றி அவற்றின் நிலை கூறினார். எனவே 'தானை நிலை' 'யானைநிலை' 'குதிரைநிலை' யென்பனவே ஆசிரியர் வகுத்த துறைகளா மென்க. 'இனி இவைதாமே கறுவு கொண்டு பொருவுழித் தானைமறம் யானைமறங் குதிரைமற மென்று வெவ்வேறு பெயர்பெறு மென்று கொள்க' வென நச்சினார்க்கினியர் அந் நூற்பாவுக்கு உரைநிறுத்துத லின், உணர்ச்சியில்லாதவழி உணர்வுடைப் பொருள்க ளான தானைக்கும் யானைக்குங் குதிரைக்குமே மறமென்று கூறல் இயையாதென்பது நன்கு விளங்கும். விளங்கவே, அத் தானை முதலியவற்றைப் போல உணர்வுடைப் பொரு ளல்லாத தேருக்கு மறங் கூறித் 'தேர்மற' மென்பதோர் துறைவகுத்தல், இயற்கை யுண்மைகளோ டியையாதென் பது கூறல்வேண்டா வென்க.

---

1. நோனார் - பகைவர்.
* † தொல்., புறத். ௬௭.

**கருவிப் போர்:**

இனி வேந்தனுக்குத் துணையாய் வந்த துணையரசருஞ் சேனைத் தலைவரும் அவ் வேந்தனை மாற்றார் சூழ்ந்து கொண்டமை கண்டனராயின் அவர் அங்கு முற்பட்டுச் சென்று அம் மாற்றாரைப் படையெறிந்து தாக்குதல், 'வேன்மிகு வேந்தனை மொய்த்த வழி ஒருவன் றான்மீண் டெறிந்த தார்நிலை' யென்னுந் துறையாம். தாரென்பது முற்பட்டுப் பொரும் படையாதலின், இத்துறை தார்நிலையெனப்பட்டது. இங்ஙனம் முன்சென்று பொருகின்ற இருவகைப் படைத்தலைவரும் ஒருகால் இறப்பினும் இறப்பர்; அவ்வாறு நேருமாயின் அஞ்ஞான்று அஃது 'இருவர் தலைவர் தபுதிப் பக்க' மென்னுந் துறையாமென்க. இதன்கண் படைத்தலைவரே யன்றி வேந்தரிருவருமே வீழ்ந்து படுதலு முண்டென்பது 'பொருபடை களத்தவிய இரு வேந்தரும் இகலவிந்தன்று,' 'வேந்த ரிருவரும் விண்படர' என்று வெண்பா மாலையில் 'இருவருந் தபுநிலை' யென்னுந் துறைக்கீழ்க் கூறப்படுகின்றது.* போர்க்கு உடைந்து தன் படைகள் நிலை தளர்ந்தமை காணும் படைத்தலைவனொருவன் அப் படைமுன் சென்று மாற்றார் படைத் தலைவனை அவனது பிற்படையோடு தாக்கி எருமைக் கடாப்போல் மதியாது நிற்கு நிலைமை 'ஒருவனொருவனை யுடைபடை புக்குக் கூழை தாங்கிய வெருமை' யென்னுந் துறை யெனப்படும். எதனையும் பொருள்செய்யாது நிற்றலே எருமையின் இயல்பாதலின், மாற்றார் படையை யுடைத்து அப் படைத்தலைவனைச் சிறிதும் பொருள்செய் யாது நிற்கும் வீரனது நிலை 'எருமை நிலை' எனப்பட்டது. இவ்வியல்பு 'கடாப்போலச் சிறக்கணித்து நிற்கு நிலைமைக்கண்ணு' மென்னும் நச்சினார்க்கினியருரையினும் விளங்குதல் காண்க.

**மற்போர்:**

இனி வேல் முதலிய படைக்கருவிகள் கொண்டு போர் விளைக்கும் மறவர் அக் கருவிகளை நீக்கி உடம்பினாற்

---

* புறப்-வெ. தும்பை. ௧௨.

போர் செய்யும் மற்போரும் நிகழ்தலுண்டு. இத் துறையை ஆசிரியர் 'படை யறுத்துப் பாழி கொள்ளும் ஏமம்' என்று உரைப்பர். பாழியென்றது வலிமையை. அஃது ஈண்டு ஆகுபெயராய் மற்போரைக் குறித்தது. மற் போரில் மிகவும் வல்லவனான வீமனையும், அவனது மற் போரைக் குறிக்குங்,

"கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து
மல்லேறு தோள்வீமன் மாமனைப்—புல்லிக்கொண்
டாருத போர்மலைந் தாங்கரசர் கண்டார்த்தார்
ஏருட லாய ரென."

வென்னும் பாரத வெண்பாவையும் இங்கு நினைவுகூர்க. 'பாழி கொள்ளும் ஏம' மென்னும் இத்துறை புறப் பொருள் வெண்பா மாலையில் 'ஏமவெருமை' யென்னுந் துறையாகக் காணப்படுகின்றது. வெண்பாமாலை யுரையா சிரியரும் இதனைக் குறிப்பிட்டார்.

மாற்றார் யானையைப் படையெறிந்து அவ்வியானைமே லூர்ந்துவரும் படைத்தலைவனை எதிர்த்த போர்வீரர் அவ் வியானையோடு இறந்துபடுதல் 'களிறெறிந்து எதிர்ந் தோர் பாடு' மென்னுந் துறையென்க. ஈண்டுப் பாடென் றது அழிவென்னும் பொருளது; இங்ஙனமே ஆசிரியர் இளம்பூரணரும் 'களிறு எறிந்து எதிர்ந்தோர் பட்ட வழியும்' என்று உரை கூறினர். இத்துறையைப் புறப் பொருள் வெண்பாமாலை 'களிற்றுடனிலை' யென்னும் பெயரால் வகுத்து அதன்கீழ் ஆசிரியர் இளம்பூரணர் கூறிய இறந்துபட்ட கருத்தையே நிறுத்தி,

[1] 'ஒளிற்றெஃகம் படவீழ்ந்த
களிற்றின்கீழ்க் கண்படுத்தன்று.'*

என்று கொளுவுரைக்கும். இங்ஙனமே இத் துறைக் கண்ணதாய் வரும் 'ஆசாகெந்தை' யென்னும் புறப்பாட்டி

1. எஃகம் - வேல். கீழ்க்கண் - கீழே. படுத்தன்று - பட்டது.

* புறப்-வெ. தும்பைப். உ0.

னுள்ளும்* 'குன்றத் தன்ன களிற்றொடு பட்டோன்' என்று போரெதிர்ந்தோர் இறந்துபட்ட செய்தியே உரைக்கப்படுகின்றது. இவ்வளவும், 'களிறெறிந்து எதிர்ந்தோர் பாடு' என்று வருந் தொல்காப்பிய நூற்பாக் கூற்றிலுள்ள 'பாடு' என்னுஞ் சொல்லுக்குப் 'பட்ட' தென்னும் பொருளே கருத்தாமென்று நிறுவுதற்குச் சான்றாய் நிற்பவும், நச்சினார்க்கினியர் அச்சொல்லுக்குப் 'பெருமை' யென்று உரைகூறி ஆசிரியர் கருதிய துறைக் கருத்தை மாற்றினார். களிறெறிந்து அதன்மே லூர்ந்தாரையும் எதிர்த்துப் பட்டவன் வேந்தனுமா மென்பது, 'களிறெறிந் தெதிர்ந்தோர் பாடு' மென்னும் இத் துறையை அடுத்துக் 'களிற்றொடு பட்ட வேந்தனை' யெனவரும் மறுதுறைத் தொடராலும் விளங்கும்.

## ஆடுதலும் பாடுதலும் :

இனி அங்ஙனம் களிற்றொடுபட்ட வேந்தனை மாற்று வேந்தன் படைமறவர் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு இரக்கத்தால் ஆடுதலும் பாடுதலுஞ் செய்வர். இதனையே ஆசிரியர் 'களிற்றொடு பட்ட வேந்தனை அட்டவேந்தன் வாளோ ராடும் அமலை' யென்பர். வெண்பாமாலை 'ஒள் வாளமலை' என்னும்.

> [1] "வலம்படு முரசந் துவைப்ப வாளுயர்த்
> திலங்கும் பூணன் பொலங்கொடி யுழிஞையன்
> மடம்பெரு மையி னுடன்றுமேல் வந்த
> வேந்துமெய்ம் மறந்த வாழ்ச்சி
> வீந்துகு போர்க்களத் தாடுங் கோவே."†

என்னும் பதிற்றுப்பத்திலும் இப் போர்க்களத்தாட்டங் கூறப்படுகின்றது. இத் துறைக் கருத்துப்படி ஒரு பக்கத்து வேந்தனும் அவ் வேந்தன் படையாளருமன்றி இருபக்கங்களின் இருபெரு வேந்தரும் அவர்க்குத் துணையாய் வந்த ஏனைத் துணை வேந்தரும் படைத்தலைவரும் படையாளரு

1. துவைப்ப - ஒலிக்க. வாழ்ச்சி - வாழ்வு.
* புறம். ௩0௭. † பதிற்றுப். ௫௬.

மாகக் களங்கிட்டிய அனைவரும் எவரும் பிழையாதபடி ஒருங்குபடுதலும் ஓரோரொருகால் நிகழ்தலுண்டு. 'வாள் வாய்த் திருபெருவேந்தர் தாமுஞ் சுற்றமு மொருவரு மொழியாத் தொகைநிலை' யென்று ஆசிரியர் கூறியது மிது. களங்கிட்டிய வேந்தன் முதலான ஆடவரேயல்லாமல், அவரவர் பெண்டிரும் அக் களமணுகித் தந்தங் கணவரெல்லாம் இறந்து கிடத்தல் கண்டு தாந்தாமும் எரிவீழ்ந் திறப்பரென்னுங் குறிப்பும் புறப்பொருள் வெண்பாமாலையில் இத் தொகைநிலைத் துறைக்கண்ணதாய்க் காணப்படுகின்றது.* இக் குறிப்புக் 'களங்கொளற் குரியோரின்றித் தெறுவர, வுடன்வீழ்ந்தன்றூ லமரே பெண்டிரும்'† என்னு புறநானூற்றில் வருங் கழாத்தலையார் பாட்டிற் குறிக்கப்படுதலும் இங்கு நினைவுகூரற்பாலது.

களவேள்வி:

தன் வேந்தன் மாற்றாராற் களத்துப்பட்டானென்பதை அறிந்த வீரன் உடனே சினமுங் கறுவெண்ணமு முடையனாய் வேந்தன் இறந்துபட்டனனே யென்னும் வீரவுணர்ச்சியினால் அம் மாற்றாரோடு பொருது உயிர்துறந்த வீரநிலை 'செருவகத்திறைவன் வீழ்ந்தெனச் சினைஇ யொருவன் மண்டிய நல்லிசை நிலை' யெனப்பட்டது. இதனை வெண்பாமாலை 'அவ்வீரன் தனது வாட்படையே துடுப்பாகவும், மானமே நெய்யாகவும், வீரமே சுள்ளியாகவும் வாட்போரே அழலாகவும் அமையத் தனது இன்னுயிரை வேள்வி செய்தா' னென்னும் உருவகத்தால்,

> [1]" வான மிறைவன் படர்ந்தென வாள்துடுப்பா
> மானமே நெய்யா மறம்விறகாத் - தேனிமிருங்
> கள்ளவிழ் கண்ணிக் கழல்வெய்யோன் வாளமரொள்ளழலுள் வேட்டா னுயிர் "

என்று மிகவுந் திறமாகக் கூறுவதாயிற்று. இதற்கேற்பவே இத் துறைப் பெயருந் 'தன்னைவேட்டல்' என்று அதன்

1. வேட்டான் - வேள்விசெய்தான்.
* புறப் - வெ. தும்பை. உ௬-உ௭.  † புறம். ௬உ.

கட் காணப்படுகின்றமை மிகவும் வியத்தற்குரியதென்க. வேந்தனும் வேந்தன் படைஞரும் இவ்வாறு நிலைதளர்ந்து கெடுதலை யறியும் மற்றொரு பக்கத்தார் அவ்வெதிர்ப்பக்கத்தில் எஞ்சியுள்ள ஏனையோரையும் ஒருங்கே கொன்று குவித்தல் 'நூழிலாட்'டெனப்படும். இதனைப் 'பல்படையொருவற் குடைதலின் மற்றவனொள்வாள் வீசிய நூழில்' என்றார் தொல்காப்பியனார். 'நூழி'லென்பது 'பலவுயிர்களைக் கொன்று குவித்த' லென்றே பொருளாம். இளம்பூரணரும் 'பலவுயிரை ஒருவன் கொன்றதனை நூழில் என்றுரைத்தல்' என்று உரை கூறினர் புறத்திணையியலுரையில்.* ஆக இப் பன்னிரண்டு துறைக்கருத்துகளும் ஏனையவற்றைப்போல ஒரு பக்கத்தார்மாட்டே நிகழ்வனவல்லவாய் இருபக்கத்தாருங் கலந்து நிகழ்த்துங் கலப்பு நிகழ்ச்சியில் அவ்விருவர்மாட்டும் ஒரு காலத்தே நிகழும் ஒழுக்கமாகலின், இவற்றை ஆசிரியர் புல்லித்தோன்றும் பன்னிரு துறைத்தென்று இத் தும்பைத் திணையை முடித்திட்டாரென்க.

**ஏனைய விரிந்த துறைகள் :**

இனி இத் தொல்காப்பியத் துறைகளுக்கு வேறாகப் புறப்பொருள் வெண்பாமாலையில் வரும் ஏனைத் துறைகளெல்லாம் மேற்கூறிய இப் பன்னிருதுறைகளிலேயே அடங்குமென்பது நுணுகி நோக்குவார்க்கெல்லாம் விளங்காநிற்கும். பட்டாரைப் பாடும் 'பாண்பாட்டும்,' வீரர்கள் வீரக்களிப்பினால் தேர்முன் ஆடும் 'முன்தேர்க்குரவை'யும், தேர்ப்பின் ஆடும் 'பின்தேர்க்குரவை'யும், தேரின் முன்னும் பின்னுமாகப் பேய்கள் ஆடும் 'பேய்க்குரவை'யுமெல்லாம், 'வாளோராடும் அமலை' யாகிய ஒள்வாளமலைக்கண் அடங்கும். வெற்றித்தோற்றம் மிக்க 'தானைநிலைத்' துறையும், ஆண்மைத்தோற்றம் மிக்க 'வெருவருநிலை'த் துறையும் 'கூழைதாங்கிய வெருமையு' மென்பதன்கண் அடங்காநிற்கும். போர்க்களத்தில் இறந்துபட்ட தங் கணவன்

* தொல். புறத். கச.

மாரைப் பெண்டிர் சென்று தழுவித் தாமு மிறத்தலான 'சிருங்கார நிலை'யும், தங் கணவன்மாரது புண்பட்ட உடம்பைக் கண்டு புறங்கொடாது அங்ஙனம் புண்பட்டிறந்தமைக்கு உவகையும் ஆனால் மண்ணுலகு நீத்தமைக்கு வருத்தமும் அப் பெண்டிர் ஒருங்கே பொருந்திக் கண்ணீருகுக்கும் உவகைக் கலுழ்ச்சியு மெல்லாந் 'தொகைநிலை'த் துறைக்கண் அடங்குமென்க. போர்மறவர்கள் தம் மெய்யிற் பாய்ந்த வேலைப் பறித்து மாற்றார்மேல் விடுத்து அவரைக் கோறல் உணர்த்தும் 'நூழிலாட்'டெனுந் துறை 'நூழி' லிலேயே அடங்குதல் காண்க. மேலும், புறப்பொருள் வெண்பா மாலை இத் தும்பைத் திணைக்கண் அடக்கித் தொல்காப்பியத் துறைகட்கு வேறாகக் கூறுந் துறைகளுட் சிலவற்றைத் தொல்காப்பியனார் வாகைத்திணைக்கண் அடக்கி உரை நிறுத்துகின்றார். அவற்றை அடுத்த 'வாகைத் திணை'க் கட்டுரைக்கண் விளக்கி உண்மைச் சார்பு தெரிப்பேமாகலின், அவற்றை ஆண்டுக் கண்டுகொள்க வென்பது. 'இனி (போர்க்களத்திடையே இறந்துபட்டாரைக் கண்டு) தாயர் கூறுவன மூதின் முல்லையாம்; மனைவியர் கூறுவன இல்லாண் முல்லையாம்; கண்டோர் கூறுவன வல்லாண் முல்லையாம்; பாணர் கூறுவன பாண்பாட்டாம் என்க' என்று நச்சினார்க்கினியர் தும்பைத்திணைக் கருத்தாகக் கூறும் உரைப்பகுதிப்பொருளும் அக் கட்டுரைக்கண் ஆராய்ந்துரைக்கப்படுமென்க. எனவே அரசர்கள் தமக்குள் மாறு கொண்டு தத்தம் படைகளின் றுணையினாற் போர்செய்யுமொழுக்கமே தும்பையொழுக்க மென்பது பெறப்பட்டது.

**அகமும் புறமும்:**

இனி இவ்வியல்பினதான தும்பைத்திணை புறப்பொருளொழுக்கமாகலின், இது தனக்கு அகமான நெய்தலொழுக்கத்தோடு நணுகிப் பொருந்துமாறும் இவண் ஆராய்ந்து தெளிதல் வேண்டும். தும்பையொழுக்கம் நிகழுமிடம் மலைச்சாரலுமாகாது; காட்டகமுமாகாது; வயற்புறமுமாகாது; மற்று அதற்குக் களரும் மணலும் பரந்த

வெளி நிலமே வேண்டப்படும்; அத்தகைய வெளிநிலம் கடல் சார்ந்தவிடத்தே யிருப்பதல்லது வேறுகாமையின், தும்பையொழுக்கம் நிகழுமிடம் மணல் பரந்த களர் வெளிநிலமான நெய்தல் நிலமேயாமென்க. தும்பை யொழுக்கம் நிகழ்வதற்குக் களர் வெளியே வேண்டப்படு மென்பதும், அக் களர்வெளி நிலமாவது கடல் சார்ந்த நெய்தல் நிலமேயா மென்பதும், 'இருபெருவேந்தரும் ஒரு களத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையானும், களரும் மணலும் பரந்த வெளி நிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழி யல்லது இன்மையானும்'* என்று ஆசிரியர் இளம்பூரணவடிகள் உரைக்குமாற்றால் இனிதறியப்படும். மேலும் இத்தும்பைத் திணையைப்பற்றி நுவலும் பழந் தமிழ்ப் புறப்பாட்டுகளிலெல்லாம் பெரும்பாலுங் கடலை யுங் கடற்புறத்தையும் பற்றிய கருத்துக்களே உவமைப் பொருள்களாக எடுத்துக் காட்டப்பட்டிருத்தலும் போ ரொழுக்கம் நிகழுமிடம் பெரும்பாலும் நெய்தல் நிலமே யாகு மென்பதை வற்புறுத்துவ தொரு பெருஞ்சான்றுதல் இங்குப் பெரிதும் நினைவுகூரற்பாலது. நெய்தலுக்கும் இஃதொக்கும்.

## பொழுதுகள் :

இனி இப்போரொழுக்கம் முனைப்பாய் நிகழ்ந்து முடியு நேரம் ஞாயிறு பொழுது படும்போதாகும். அதனை 'எற்பாடு' என்ப ஆசிரியன்மார்; ஆவது பிற்பகல்; இது சிறுபொழு தெனப்படும். ஆசிரியர் தொல்காப்பியனார் நெய்தலுக்கு இச் சிறுபொழுதினை வரைந்தோதினரேயல் லது பெரும்பொழுதினை அங்ஙனம் வரைந்து காட்டின ரல்லர். காட்டாராகவே பெரும்பொழுது ஆறுமே நெய் தற்குக் கொள்ளப்படுமென்று ஆசிரியர் இளம்பூரணரும்† களவியலுரைகாரருங்‡ கருதினர். ஆசிரியர் நச்சினார்க்கினி

---

* தொல். புறத். கஉ. † தொல். அகத். கூ.
‡ இறையனு. க.

யர் இவ்வுரையாசிரியர் இருவர் கருத்தினைத் தழுவிக்கொள்ளுதலோடு காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாமென வேறொன்றுந் துணிந்து 'இவற்றிற்கு அறுவகை இருதுவும் உரியவென்பதன்றிக் காரும் இளவேனிலும் வேனிலும் பெரும்பொழுதாகக் கொள்பவென்றற்குப் பொருள்பெறத் தோன்றுமென்றார்' என்று எய்தியது ஒருவகை விலக்கிப் பிறிது விதி வகுத்தார். ஆனாற் சிலப்பதிகார உரையாசிரியரான ஆசிரியர் அடியார்க்கு நல்லாரோ வெனின், பெரும்பொழுதைப்பற்றி ஆசிரியர் ஏதுங் கூறாமையாற் றாமும் ஏதுங் கூறலாகாதென்னுங் கருத்துடையராய்க் காணப்படுகின்றார்.* உரையாசிரியன்மார் இவ்வாறெல்லாம் ஏது கூறினாராயினும் ஈண்டு முதன்மையாய் வேண்டற்பாலது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தேயாம்.

ஆசிரியர் பெரும்பொழுது சிறு பொழுதெனப் பொழுதை இருகூறாகப் பிரித்து அவற்றை மீண்டுந் தனித் தனி ஆறு ஆறு பிரிவுகளாகப் பகுத்தோதலின், அப் பிரிவுகள் அவ் வாறுந் தம்முள் ஒன்றற்கொன்று இயைபுடையனவாகவே இருத்தல் வேண்டும். எனவே, மாலை, யாமம், வைகுறு, காலை, நண்பகல், எற்பாடென்னுஞ் சிறுபொழுதுக வாறும் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பெரும் பொழுதுகளாறோடும் முறையே இயைபுடையவாகும் இயற்கை யுண்மை ஆராய்ந்து மகிழற்பாலதாமென்க. இவ் வியைபுண்மைகளைப் 'பொருள்வயிற் பிரிவு' என்னும் அகப்பொருட் கட்டுரையினும், ஏனைப் புறத்திணைக் கட்டுரைகளினும் ஒரு சிறிது விளக்கியிருக்கின்றேம். அவற்றை இங்கு விரித்துரைப்பின் இது மிகவும் பெருகுமாதலின், ஏற்புழி விளக்குதல் கருதி விடுக்கின்றேம். எனவே ஆசிரியர் தொல்காப்பியனார் 'எற்பாடு நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்று'† மென்று நெய்தலுக்கு எற்பாட்டைச் சிறு பொழுதாகக்

* சிலப். பதிகவுரை. † தொல். அகத். ௮.

குறித்துரைத்தலின், அவ்வெற்பாட்டுக்கு இயைபான முது வேனிற் பருவமே அதுதனக்குப் பெரும்பொழுதாதல் இயற்கையாகும்.

இங்ஙனமே ஆசிரியர் மருதத்துக்கும் வைகறையும் விடியலுஞ் சிறுபொழுதுகளாகக் கூறிப் பெரும்பொழுது கள் கூறாது விட்டமையின், அவ் வைகறைக்கும் விடியலுக் கும்இயைபான முன்பனிப்பருவமும் பின்பனிப்பருவமுமே மருதத்திற்குப் பெரும்பொழுதுகளாதல் வேண்டுமென்க அற்றாயின் ஆசிரியர் அவற்றை எடுத்துக் கூறாராயினு ரென்னையோவெனின், அவண் எடுத்துக் கூறுங் கட்டாய மின்றியே அவை எளிதாய்ப் பெறப்படுதலின் கூறாராயினு ரென்க. என்னை? முல்லைக்குரியது காரென்னும் பெரும் பொழுதெனவுங், குறிஞ்சிக்குரியது கூதிரெனவும், பாலைக்கு நண்பகல்வேனிலெனவுங் கூறினமையே, வைகறையும் விடியலுமென்னுஞ் சிறுபொழுதுகளில் நிகழுமெனப்பட்ட மருதத்துக்கும், எற்பாட்டில் நிகழுமெனப்பட்ட நெய்த லுக்கும் முறையே உரிய பெரும் பொழுதுகள் முன்பனி பின்பனி யென்னும் பனிப்பருவங்களும், முதுவேனிற் பருவமுமா மென்பதைக் கூறாமலே எளிதாய் விளக்குதலி னென்பது. மேலும் முன்பனி பின்பனி யென்னும் பருவங்களிரண்டும் பனிப்பருவமென்னும் ஒருவகைப் பருவமேயாகும். எனவே இவ்விருகைப் பனிப்பருவங் களிலும் ஒருவகை யொழுக்கம் நிகழ்தலே இயற்கையோ டொக்குமென்பது தெள்ளிதின் விளங்கும். ஈதறிந்தே ஆசிரியரும் அவ்விருபெரும் பொழுதுகளுக்கும் இயை பான வைகுறுவும் விடியலுமென்னும் இரண்டு சிறு பொழுதுகளையும் மருதவொழுக்கத்துக்குப் பொழுது களாக வரைந்தோதினரென்றறிந்து கொள்க. வைகறை விடியலென்னும் இரண்டு சிறுபொழுதுகளிலும் மருத வொழுக்கம் நிகழுமுண்மையை,

"அணைமென்றோ ளியாம்வாட அமர்துணைப் புணர்ந்துநீ
மணமனை யா யெனவந்த மல்லலின் மாண்பன்றோ

பொதுக்கொண்ட கௌவையிற் பூவணிப் பொலிந்தநின்
வதுவையங் கமழ்நாற்றம் வைகறைப் பெற்றதை"*

என்னுங் கலித்தொகையினுங்,

'காலை யெழுந்து கடுந்தேர் பண்ணி
வாலிழை மகளிர்த் தழீஇய சென்ற
மல்ல லூரன்'†

என்னுங் குறுந்தொகையினுங் கண்டுகொள்க.

அவ்வாறாயின் இளவேனில் முதுவேனி லென்னும் பருவங்களும் வேனிலென்னும் ஒருவகைப் பருவமே யாகலின், அவ்விரு பருவங்களினும் ஒரு வகை யொழுக்கமே நிகழற்பாலதாமெனவும், அதுபற்றியே ஆசிரியரும் 'நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனில்'‡ என்று நூற்பா ஓதி இளவேனில் முதுவேனி லென்னு மிரண்டையும் வேனிலென்னும் பொதுச் சொல்லாற் றழுவி அவ் விரு பருவங்களினும் பாலை யொழுக்கம் நிகழுமென லொழுக்க நிகழ்ச்சியே வரைந்தோதினா ரெனவுங் கூறினாலோ வெனின்; அற்றன்று, ஆசிரியர் அந்நூற்பாவில் 'வேனில் நண்பக' லென்னாமல் 'நண்பகல்வேனி, லென்று கூறினமையின், அத்தொடர்க்கு நண்பகற் சிறுபொழுதுக் கியைபான இளவேனிற் பெரும்பொழு தென்பதே பொருளாவதல்லது, நீவிர் கூறுமாறு அவ்வேனில் இருவகை வேனிலையுந் தழுவிற் றன்றென் றறிந்துகொள்க. 'இளவேனில் முதுவேனில் என்னும் இருவகைப் பருவத்தின்கண்ணும் வரும் நண்பகற்பொழுது காலமா' மென்று உரையாசிரியரே கூறினரெனின், உரையாசிரியர் கூறினமையினாலேயே யாமும் அது கூறல் வேண்டுமென்பது கட்டாயமின்று. உரையாசிரியர் கருத்து ஆசிரியர் கருத்தன்றெனக் காணப்படின், யாம் வேறு ஆராயவுங் கடமைப்பட்டிருக்கின்றோம். மேனும், பாலை யொழுக்கத்துக்கு இளவேனிற் பருவமே காலமாக ஆசிரியர் மாமூலனார் 'பனிப்பருவம் நீங்கிய அரிய

* மருதக்கலி. க௪ † குறுந்தொகை, சஅ. ‡ தொல். அகத். க.

செவ்வியையுடைய இளவேனி' லென்னும் பொருளில்வர 'அற்சிர நீங்கிய வரும்பத வேனி,* லென்று குறித்துப் பாடிய அகப்பாட்டியையும் இங்குப் பெரிதும் நினைவுகூரற் பாலது.

இனி, இருவகை வேனிலும் வேனிலென்னும் ஒரு வகைப் பருவமேயாகலின், அவற்றின்கண் ஓரொழுக்கமே நிகழல் வேண்டுமென்னுங் கருத்துறு பொருளே ஈண்டு ஆராய்தற் குரியதாம். பனிப்பருவப் பிரிவுகளான முன் பனிக்காலம் பின்பனிக்காலம் என்பவற்றை விட வேனிற் பருவப் பிரிவுகளான இளவேனில் முதுவேனில் என்பவற் றில் மிகவும் வேறுபாடுண்டு. இளவேனில் முதுவேனிற் பருவங்களை அவைபோல ஓரியல்புடையனவென்று கூறலிய லாது. இவ்வுண்மை அவ்வவற்றின் பெயர்களிலேயே நன்கு விளங்குகின்றது. முன்பனி பின்பனி யென்பன வெறுங்கால முன்பின்னையே குறிக்கின்றன. ஆனல் இள வேனில் முதுவேனி லென்பன அங்ஙனங் கால முன்பின் னைக் குறியாமல் வேனிலின் ஆற்றலை யுணர்த்துவனவாயிருக் கின்றன. இளவேனி லென்பது வெயிற் கொடுமை மிக் குள்ளது. முதுவேனி லென்பது அக்கொடுமைகுறைந்துள் ளது. இளவேனிற் பருவம் சித்திரைத்திங்களும் வைகாசித் திங்களுமாம், முதுவேனிற் பருவம் ஆனியும் ஆடியும். இவ் விரிரு திங்கள்களிலும் வெயில் மிகுதியையும் வெயிற் குறைவையும் நிகழ்ச்சியிற் றெரிந்து கொள்ளலாம். எனவே இவ்விருவேறு காலவியற்கைகளும் முன்பனி பின்பனிப் பருவங்களைப்போ லல்லாமல் வேறு வேறியல்புடையனவா மென்பது தெளிவு. தெளிவாகவே, இவ்விரண்டு பருவங் களினும் நிகழும் எல்லா நிகழ்ச்சிகளும் வேறுபா டுடைய வாய் வேறுவேருகுமென்பது கூருமலே பெறப்படும். ஆகையாற்றுன் ஆசிரியர் இளவேனிற் பொழுதைப் பாலை யொழுக்கத்திற்கும், முதுவேனிற் பொழுதை நெய்த லொழுக்கத்திற்கும் வகுத்தோதுங் கருத்தினராவ ரென் பது.

---

* அகநானூறு, கஎ.

இக்கோட்பாடு இன்னொன்றானும் உறுதி செய்யப்படு கின்றது! பாலையென்பதும் நெய்தலென்பதுங் கணவனும் மனைவியுந் தம்முள் ஒருவரை யொருவர் பிரிந்து வாடும் வாட்டமாகும். பாலையால் விளையும் வாட்டம் முதற்கண் நிகழ்வதாய்க் கடுமை மிக்கதாய்த் தோன்றுதலின் அதனை வருத்தமென்றும், நெய்தலால் வரும் வாட்டம் அதன்பின் முதிர்ந்து நிகழ்வதாய் மென்மையுற்றுத் திகழ்தலின் அதனை இரக்கமென்றும் ஆசிரியன்மார் கூறுவர். பொதுவில் இவ் விரண்டொழுக்கங்களும் வருத்தமென்னும் ஒரு கூற்றிலே அடங்குமாயினும், அவை தமக்குள் முறுக்கமும் முதிர்வும் பற்றிவரும் வேறுபாடு பெரிதாகலின் அவ்விரண்டும் வேறு வேறொழுக்கங்களாயினவென்க. அவற்றைப் போலவே, இளவேனிலும் முதுவேனிலும் பொதுவில் வேனிலென் னும் ஒருவகைப் பருவத்துளடங்குமாயினும் அவை தமக் குள் ஆற்றற்றொடர்பான முறுக்கமும் முதிர்வும் பற்றி ஏற் படும் வேறுபாடு பெரிதாகலின், அவ்விரண்டு பருவங்களும் வேறு வேறு பருவங்களாகக் கொள்ளப்படுமென்க. இள வேனிலின் வெயில் கடுமைக் கேற்பவே அக்காலத் தொழுக்கமான பாலையிலும் வருத்தம் முறுக்கமாயிற்றென வும், முதுவேனிலின் வெயில் முதிர்வுக் கேற்பவே அக் காலத்தொழுக்கமான நெய்தலிலும் வருத்தம் முதிர்வுற்று இரக்கமாயிற்றெனவும் அறிந்துகொள்க.

இனி இவையெல்லாம் ஒக்கும்; ஆசிரியர் தொல்காப் பியனார், நமது கருத்துப்படி மருதத்துக் குரியவெனப் படும் முன்பனிப்பெரும் பொழுதையும் பின்பனிப்பெரும் பொழுதையும் அம் மருதத்துக்கே உரியவாக உரையாமல் அவற்றுள் முன்னதைக் கூதிர்ப்பொழுதொடு சேர்த்துக் குறிஞ்சிக்கும், பின்னதை இளவேனிற் பருவத்தொடு சேர்த்துப் பாலைக்கும் உரியவாக நூற்பா யாத்தமைக்கு வழிவிடுமா றியாங்ஙனமோ வெனிற், கூறுதும். முன்பனிப் பருவம் குறிஞ்சிக்கே உரியதாயின் ஆசிரியர் அதனைக் குறிஞ் சிக்குக் கூறிய நூற்பாவிலேயே சேர்த்துக் கூறியிருப்பர்; அங்ஙனமே பின்பனிப்பருவமென்பதும் பாலைக்கே உரிய

தாயின், அவரதனைப் பாலைக்குரைத்த நூற்பாவிலேயே சேர்த்துரைத்திருப்பர். ஆனால் அவ்விரண்டு பருவங்களும் அங்ஙனங் குறிஞ்சிக்கும் பாலைக்குமே சிறப்பினுரியவாகா மல் மருதமென்னும் வேறொன்றுக்கே சிறப்பினுரியவாத லின், அவற்றைக் குறிஞ்சி பாலை நூற்பாக்களிலேயே சேர்த்துரையாமற் பிரித்து வேறு நிறுத்தினர். ஆனாற் கூதிர்க்காலத்தை யொட்டிவரும் முன்பனிப்பருவம் அக் கூதிரியல்பு சிறிதுகலந்தும், இளவேனிற்காலத்தை யொட்டி முன் வந்த பின்பனிப் பருவம் அவ்விளவேனிலியல்பு சிறிது கலந்தும் இயல்வனவாதலின், அக் கூதிரொழுக்க மும் இளவேனி லொழுக்கமுமான குறிஞ்சி பாலைகள் நிகழ்தற்கு முறையே முன்பனி பின்பனிப் பருவங்களையும் உரியவாகக் கூறுப வென்றார் ஆசிரியர். அங்ஙனம் கூறு மிடத்தும்

'பனியெதிர் பருவமும் உரித்தென மொழிப'
பின்பனி தானும் உரித்தென மொழிப' †

என்றவற்றிற்கு இழிவுசிறப்பும்மை கொடுத்தே விழிப்பாய் நூற்பா ஓதினர். உம்மையை இழிவுசிறப்போ டெச்ச மென்றலும் பொருந்தும். ஆகவே ஆசிரியர் இவ்வா றோதினமையால் யாங் காட்டிய கோட்பாட்டிற்கு உறும் இழுக்குச் சிறிது மில்லையென் றறிந்துகொள்க.

எனவே இதுகாறுங் கூறியவாற்றால், முல்லை முதலிய ஒழுக்கங்களுக் குரியவான பொழுதுகளைப் பற்றிய தோல்காப்பியனர் கருத்து,

| திணை | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|
| முல்லை | கார் | மாலை |
| குறிஞ்சி | கூதிர் | யாமம் |
| மருதம் | முன்பனி } | வைகுறு } |
| | பின்பனி } | விடியல் } |
| பாலை | இளவேனில் | நண்பகல் |
| நெய்தல் | முதுவேனில் | எற்பாடு |

* தொல். அகத். எ. † தொல். அகத். கூ.

என்றிதுவேயாகு மென்பது சிறிதுமே ஐயத்துக் கிட னின்றி நன்கு தெளியப்படுமென்க.

இவ்வாற்றல் ஈண்டைக்கு வேண்டியபடி அகப் பொருள் நெய்தலுக்கும் அதற்கினமான புறப்பொருள் தும்பைக்கும் உரிய பெரும்பொழுதுகள் முறையே முது வேனிலும் எற்பாடுமாமென் றறிந்துகொள்க. போர் மேற் சென்ற தன் தலைவன் கார்காலத் தொடக்கத்திற் போர் முடித்துத் திரும்புவனென்று தலைவி எதிர்பார்த் திருப்பளென எல்லா இலக்கண இலக்கியங்களும் முல்லை யொழுக்கத்தில் முடித்துக் கூறுதலின், பகைமேற் சென்ற தலைவனுக்குப் போர் நிகழுங் காலம் அக் கார்ப்பருவத் துக்கு முன் பருவமான முதுவேனிற் பருவமே யாகுமென் பது இனிது பெறப்படுதலும், அகப்பொருண் முல்லைக் கும் புறப்பொருள் தும்பைக்கும் உரிய பெரும்பொழுது முதுவேனி லென்பதே ஆசிரியர் தோல்காப்பியனார் கருத் தென்று யாம் மேல் விளக்கிக் காட்டிய உரைக் கூற்றொடு முழுதொத்திருத்தல் கண்டு மாணாக்கர் பெரிதும் நினைவு கூர்ந்து கருத்தமையற்பாலா ரென்க.

புறப்பொருளரசன் பகைமேற் சென்ற இரவெல்லாம் பாடிவீட்டிலிருந்து மறுநாட் பகலிற் போர் தொடங்கிப் பிற்பகலிற் பொருது முடிப்பானாகலின், முதுவேனிலின் எற்பாடு தும்பைத்திணைக் குரித்தாயிற்று. இங்ஙனமே, அலையிடைவளியும் பொழிலிடை மணமுமான நெய்த னிலப் பயனெல்லாம் எழுகின்ற நேரம் எற்பாட்டு நேரமே யாகலின் அவற்றை அகப்பொருட்டலைவியும் அஞ்ஞான்று நுகர்ந்து காண்பாள்.

இனிப் போரொழுக்கத்திற் குரிய தும்பைப்பூ ஏனைய நிலங்களாற் பெறப்படாமையின், அது நெய்தனிலத்துப் பூவென்றே முடிக்கப்படும். 'வருணன் மேய பெருமண லுலகமும்' * என்று ஆசிரியர் கூறுமாறு போல நெய்த லைச் சார்ந்த மணற்றிட்டுகளிலேயே இத் தும்பைப் பூக்கள் பூத்தலும் நிகழ்ச்சியிற் றெளிந்து கொள்க.

* தொல். அகத். ரு.

**இரக்க உணர்ச்சி :**

இனி அறியற்பாலது நெய்தலின் உரிப்பொருளான இரங்கலாம். தலைவனுந் தலைவியும் ஒருவரை யொருவர் பிரிந்தக்கால் நெய்தல் நிலத்தின் கடற்காற்றுங் கானற்காற்றும் ஊறி மாலைப் பயனும் பொழிற்பயனும் நுகர்ந்து அவ்வாற்றுற் றம் துணையை நினைந்து பிரிவாற்றுமல் இரங்குவர். போர் நிகழ்ச்சியிலும் இந்நேரத்தில் ஆண்டுள்ளார்க்கு இரக்கவுணர்ச்சி தோன்றுநிற்கும். தன் வேந்தனுக்காகத் தன்னலங்களெவற்றையும் பொருட்படுத்தாமற் போர்முனை யணுகி வீரமாய்ப் பொருது புண் பட்டு வீழும் மறவர்களைப்பற்றி மாற்றுரும் மற்றையோரும் இரங்காமலிரார். இவ்வுண்மையை ஆசிரியர் 'வாளோாடும் அமலை' யென்று துறை வகுத்தார். பகையினுல் வீர முனைப்பும் அவர் வீழ்ச்சியினுல் இரக்க முனைப்பும் ஆக இருவகை யுணர்ச்சிகளே போர்க்களம் அணுகினுர்க்கு நிகழும்; அவற்றுள் வீரர்க்கு வீர முனைப்பென்பது பொது; ஆகவே போர் நிகழ்ச்சியில் அவர்க்குச் சிறப்பாயெழும் புத்துணர்ச்சி இரக்கமேயாதலின் அஃதே ஈண்டுப் போர்நிகழ்ச்சியின் முடிந்த பயனுகக் கொள்ளப்படும். துன்பத்தின் பயன் இன்பமாதல் போலவென்க. தன் வெற்றியினுற் பகைவர் நாடு அழிதற்கிரங்கித் தோற்றவனை விளங்கப் பாடுதலான 'கொற்றவள்ளை' யென்னுந் துறை வஞ்சித்திணைக்கண் வந்தமையும் போர் நிகழ்ச்சியில் இரக்கவுணர்ச்சி யுண்டாகு முண்மைக்குப் பெருஞ்சான்றும்.

மேலும், போர்க்களத்தில் இறந்துபட்ட போர் வீரரின் பெண்டிர் ஆண்டெய்தித் தங் கணவன்மார் விழுப் புண்பட்டு வீழ்ந்து கிடத்தல் கண்டு அவராகந் தழுவிக் கண்ணீர் விட்டு இரங்குபவாகலான், போர் நிகழ்ச்சியின் பயன் எல்லா வகையானும் இரக்கவுணர்ச்சியாகவே முடிகின்றது. மாதரிரங்கு நிலையைக் குறித்தற்கே ஐயனுரிதனுர் 'சிருங்கார நிலை' யென்றும், 'உவகைக் கலுழ்ச்சி' யென்றுந் தமது வெண்பா மாலையில் இரண்டு துறைகள் வகுத்துள்ளார். 'உவகைக்கலுழ்ச்சி'யில் வரும் ;

[1]'வெந்தொழிற் கூற்றமும் நாணின்று வெங்களத்து
வந்த மறவர்கை வாடுமிப்பப்—பைந்தொடி
யாடரிமா வன்றன் கிடப்ப அகத்துவகை
யோடரிக்க ணீர்பா யுக'*

என்னும் வெண்பாவினைக் காண்க. ஆசிரியர் நச்சினார்க்கினியரும் 'இரக்கமுந் தலைமகட்கே பெரும்பான்மையும் உளதாயவாறுபோலக் கணவனை யிழந்தார்க்கன்றி வீரர்க்கு இரக்கமின்மையானும், அவ் வீரக்குறிப்பின் அருள்பற்றி ஒருவர் ஒருவரை நோக்கிப் போரின்கண் இரங்குபவாகலானும், ஒருவரும் ஒழியாமற் பட்டுழிக் கண்டோர் இரங்குபவாகலானும், பிற காரணங்களானும் நெய்தற்குத் தும்பை புறனாயிற்று' †என்று இவ்வுண்மைகளை யெல்லாம் நுணுக்கமாய் எடுத்துக்காட்டினமை கண்டுகொள்க. இவ்வாற்றால் இத் தும்பைக்கும் நெய்தற்கு முள்ள ஒற்றுமை நுணுக்கம் அறியப்படும்.

நுணுகிப் பொருந்துதல் :

இனி, இத் தும்பைப் புறப்பொருள் நெய்தலகப் பொருளாய் நுணுகிப் பொருந்துமாறு ஆராயற்பாலது.

கடலும் கடல் சார்ந்த இடமுமான நெய்தல் நிலத்தில் மண் முதலான ஐம்முதற் பொருள்களினுங் காற்றே விளங்கித் தோன்றும். ஏனையெல்லா நிலங்களினும், மணல் பரந்து நீரூறும் நெய்தனிலத்தின் மட்டுமே இடம் நிறைந்த சோலைகளுஞ் சோலை நிறைந்த இலை மலர்களும் மிக்கு விளங்குதலாலும் கடலலைகள் எப்போதும் எறிந்து கொண்டேயிருத்தலாலும் காற்றுக்குப் பிறப்பிடம் நிலத்தளவிற் கடல்நிலமேயாயிற்று. மேலுங் கடலே பெரும் பரப்புடையதாகலின், ஆண்டெழூங் காற்றே மிகுந்து தோன்றும்; அங்ஙனந் தோன்றுங் கடல்காற்றே ஏனை நிலங்களினும் ஊடுவிராய் அவ்வந் நிலக்காற்றாய் மாறு

---

1. துமிப்ப - துணிக்க. அரிமா - சிங்கம்.
* புறப் - வெ. தும்பைப். ௨௫. † தொல்.புறத். ௧௪.

மென்றறிக. பண்டைத் தமிழ்நூல்க ளெல்லாமுங் காற்றின் இனிமையைக் கடல்சார் நிலத்திற்கே மிகுத்துக் கூறினமையும் நினைவுகூர்க.

இனி இக் காற்றிற் குரிய தன்மை ஊக்கமெனப்படும். காற்று எப்பொழுதும் ஊசலாடிக்கொண்டிருத்தலே இதற்கு ஒரு பெருஞ் சான்று. மாணிக்கவாசகப் பெருமானும் "மேதகு காலின் ஊக்கங் கண்டோன்"* என்று காற்றுக்கு ஊக்கத்தையே யேற்றிக் கூறுவாராயினர். ஊக்கமென்பது ஒரு கருத்தில் முனைப்புடைமையாகும். போர் நிகழ்ச்சியிற் பெரிதும் பயன்பட்டது இவ் வூக்கமேயா மன்றோ? தலைவன் றலைவியருந் தந்தந் துணைவரைப் பிரிந்த பிரிவில் ஒரே முனைப்புடையராயிருந்து இரங்குவரல்லரோ? ஆகவே ஊக்கமென்பது நெய்தலகப்புறப் பொருள்களில் முனைந்து நிகழ்தல் இனிது பெறப்படும்.

காற்றின் ஊக்கத்தை மலர் மணங்களால் முகர்ந்தறிவது மூக்குப் பொறியாகு மென்பது தெளிவாகலின், போர் நிகழ்ச்சியிலும் வீரர்க்கு ஊக்கமாய்ப் புலால் முகர்ந்தது மூக்கு; நெய்தல் நிகழ்ச்சியிலுங் கடற்காற்றினை மலர் மணமாக முனைப்பாய் முகர்ந்துணர்ந்தது மூக்கு என்பதூஉம் அறிந்துகொள்க. இவ்வாற்றால் இருதிறத்தாரும் முகர்ந்துணர்ந்தது நாற்றமாகுமென்பது வெளிப்படை.

இனிப் போர்க்களத்துப் பட்ட வீரர் வீழ்ச்சியால் இரங்கும் ஏனையோர்க்கு முடிவில் அவர்பாலுண்டாவது உண்மைக் காத லெண்ணமாகும். மிகக் கொடுமையான வீரக்குறிப்பி லுழல்வார்க்கு முடிவில் விளைவது காதலாகும்; போர் முடிந்ததுந் தலைவன் தன் தலைவியின்பாற் காதல்கொண்டு இல்லந் திரும்பு முண்மையும் இதனை வற்புறுத்தாநிற்கும். திருவள்ளுவனாரும்,

---

* திருவாசகம், திருவண்டப். உகூ - உச.

[1] ‘முயங்கிய கைகளை யூக்கப் பசந்தது
பைந்தொடிப் பேதை நுதல்,’*

என்பதுபோன்ற திருக்குறள்களைத் தெளித்தருளுவா ராயினர். இங்ஙனமே தலைவிக்கும் நெய்தனிலப் பயனை எற்பாட்டில் நுகர்ந்து இரக்கம் எய்த எய்தத் தன் றலைவன் பால் முறுகிய காதலுணர்ச்சி பெருகி யெழுதல் கண்டு கொள்க. இங்குக் காட்டியவற்றுள் ஊக்கமென்பதே தும்பையொழுக்கமெனவும், காதலென்பதே நெய்த லுணர்ச்சி யெனவுங் கருத்திருத்துதல் வேண்டும்.

எனவே, காற்றின் பொருட்டயிற்சி ஊக்கமென் னுந் தும்பை யுணர்ச்சியாய் நுணுகி முகருஞ்செயலாற் காதலென்னும் நெய்த லுணர்ச்சியாய்ப் பின்னும் நுணுகி அகப்பொருளாகி மெய்க்காதலர்க்கு இன்பம் விளைத்தல் உணரப்படுமென்பது.

---

# ௭. வாகைத் திணை

[அரசர் அறிவர் தாபதர் முதலிய பலவகையினரும் தந் தங் கொள்கைகளிலும் செயல்களிலும் உயர்ந்து நிறைவெய்தி வெற்றியுறுதல்.]

அஞ்செவி நிறைய ஆலின, வென்றுபிறர்
வேண்டுபுலம் கவர்ந்த ஈண்டுபெருந் தானையொடு
விசயம் வெல்கொடி உயரி வலன்ஏர்பு
வயிரும் வளையும் ஆர்ப்ப......
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே.

—முல்லைப்பாட்டு ௮௯ - ௯௨, ௧0௩.

‘பகைவர்களைப் போரில் வென்று அவர்கட்கு, இன்றி யமையாதனவான புலங்களைக் கவர்ந்துகொண்ட வெற்றியி

---

1. ஊக்க - நெகிழ்க்க.
* திருக்குறள், ௧௨௩௪ : ௮.

ணால், திரண்ட பெரிய படைகளோடு வெற்றிக்கொடி பிடித்து அவ்வெற்றியைத் தோற்றுவித்துக்கொண்டு கொம்புஞ் சங்கும் முழங்க விரைந்து வருந் தலைவருடைய தொழின் முனைப்பு விளங்கும் உயர்ந்த தேரிற் பூட்டப்பட்ட குதிரைகள் தலைவியின் செவிகள் நிறையும்படி ஆரவாரித்தன.'

'மா ஆலின' வென்க. தலைவி இருக்கும் மாளிகையினருகில் வருதலால், மா ஆலினவென்பது. பிறர், பகைவர். உயரி, இகரவிகுதி பெற்று வந்த செய்தென் வாய்பாட்டு வினையெச்சம். ஏர்பு, செய்புவென் வாய்பாட்டு வினையெச்சம். 'வினை விளங்கு மா' வென்க. அகஞ்செவி, அஞ்செவியெனத் திரிந்தது. இஃது 'அகமென் கிளவிக்கு'* என்பதனால் முடிந்தற்பாலது. இஃது 'உட்செவிக' ளென்று பொருள்படுதலின், பண்புத் தொகையென்க. ஆலின, ஒலித்தன; ஆலுதல், ஒலித்தற் பொருட்டாதலை,

[1] "வெண்ணுதற் கம்பு ளரிக்குரற் பேடை
தண்ணறும் பழனத்துக் கிளையோ டாலும்" †

என்னும் ஐங்குறுநூற்றினுங் கண்டுகொள்க. இதன்கண் வேந்தனது வெற்றித் தோற்றம் விளங்குதல் காண்க.

## வெற்றி நிலை :

பகைமேற் சென்ற அரசன் நால்வகைப் படைகளோடும் பொருகளங் குறித்து ஊக்கமாய்ப் பொருது பகையரசனை அவன்றன் படைகளோடு கொன்று குவித்து வெற்றியெய்தினான். அரசன் தான் கொண்ட கொள்கையை மிகுதிப்படுத்தி வெற்றிகொண்டமையின், இது 'வாகைத்திணை' யெனப்படும், எவருந் தத்தங் கொள்கையை மிகுதிப்படுத்திக் கொள்ளுதலே 'வாகை யொழுக்க' மெனப்படு மென்பது,

1. கம்புள் - ஒரு வகை நீர்ப்பறவை.
* தொல். புள்ளிமயங். ௨0. † ஐங்குறு. ௬ : ௫.

'தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
பாகுபட மிகுதிப் படுத்த லென்ப'*

வென்று தொல்காப்பியனார் கூறும் வாகைத்திணை நூற்பாவி னாற் றெளியப்படும். ஆசிரியர் இந் நூற்பாவில் அரசாது கொள்கை மிகையைப் பற்றி மட்டுங் கூறாமல், 'தத்தங் கூற்றைப் பாகுபட மிகுதிப்படுத்த' லென்று ஏனையோரது கொள்கை மிகையைப் பற்றியும் எடுத்தோதுதல் இங்குப் பெரிதும் உற்று நோக்கற் பாலது. அரசரல்லாத பார்ப்ப னர் முதலான ஏனையோரின் கொள்கை மிகையைப்பற்றி யும் இவ் வாகைத்திணையில் அடக்கியோதுதலே ஆசிரியர்க் குக் கருத்தா மென்பது,

"அறுவகைப் பட்ட பார்ப்பனப் பக்கமும்,
ஐவகை மரபின் அரசர் பக்கமும்,
இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்,
மறுவில் செய்தி மூவகைக் காலமும்,
நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்,
நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்,
பாலறி மரபின் பொருநர் கண்ணும்,
அனைநிலை வகையோடு ஆங்குஎழு வகையின்
றொகைநிலை பெற்றது என்மனார் புலவர்"†

என்று இவ் வாகைத்திணைப் பரப்பையெல்லாம் ஏழுவகை யாகத் தொகைப்படுத்து மேல் நூற்பாவிற் கூறுமிடத்துப் பார்ப்பனரையும் வணிக வேளாளரையும் அறிவரையுந் தாபதரையும் பொருநரையும் பிறரையும் அவர் எடுத்துக் காட்டி அவரவர்தங் கொள்கைளின் மிகுதிப்பாடுகளை விளக்கிச் செல்லுதலாற் றெளிவாய்ப் புலப்படுதல் காண்க.

**வாகை யுண்மை :**

வெட்சித்திணை முதல் தும்பைத்திணை யீறாக அரச ருடைய ஒழுக்கங்களையே கிளந்துரைத்து வந்த ஆசிரியர் இவ் வாகைத்திணையை மட்டும் ஏனையோர்க்கும் உரியதாக

---

* தொல். புறத். கடு.   † தொல். புறத். உ௦.

வைத்து உரைகிளத்தலால், 'ஏனைத் திணைகளெல்லாம் அரசர்க்கு மட்டுமே உரிய; இத்திணை யொன்றுமே எல்லார்க்கு முரித்தென்ப' தன்று. எல்லாத் திணைகளும் எல்லார்க்கு முரிய. தலைமைபற்றித் தும்பையீறாக உரைத்த திணைகளிலெல்லாம் அரசரொழுக்கங்களை எடுத்துக் கூறினார். மற்று, எல்லாத்திணைகளும் எல்லார்க்கு முரியவென்னும் உண்மையை விளக்குதற்கு இவ் வாகைத் திணையை இடனாகக் கொண்டு ஏற்றவை உரைதந்து உய்த்துணரவைப்பா ராயினரென் றறிந்துகொள்க. ஆனால் புறப்பொருள் வெண்பாமாலை தானெடுத்துக்கொண்ட பொருளுக்கேற்ப முன் பின் றொடர்பு கண்டு அரசரது கொள்கை மிகையைப்பற்றி மட்டும் எடுத்து வாகைப் பகுதியில்,

> [1]'இலைபுனை வாகை சூடி இகன்மலைந்து
> அலைகடற் றானை யரசட் டார்த்தன்று'*

என்று வாகை யுரையாநின்றது. தொல்காப்பியனார் ஏனையோர் கொள்கை மிகைகளையும் இதுவே இடனாக அடக்கிக் காட்டினாராக, புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் அங்ஙனம் பிறர்தங் கொள்கை மிகைகளை வெளிப்படையாய் எடுத்துக்காட்டாமல் அரசரது மிகையைமட்டும் விளக்கிக் காட்டினார். இவ்வளவே ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கும் வெண்பாமாலையார் கருத்துக்குங் காணப்படும் வேறுபாடாமல்லது, வாகையொழுக்கம் இன்னது என்பதைப்பற்றி அவ்விருவர் கருத்துக்களுள்ளுங் காணப்படும் வேறுபாடு வேறு சிறிதுமில்லை.

மற்றுத் தொல்காப்பியனார் வாகையிடனே இடனாக அரசரல்லாத ஏனையோர் மிகைகளையும் எடுத்துக் கூறுதல் போலவே, வெண்பா மாலையாரும் அங்ஙனமே இயைத்துக் கூறுங் கருத்துடையராதல், அரசவாகை மட்டுமன்றிப் பார்ப்பனவாகை, வாணிகவாகை, வேளாண்வாகை, பொருநவாகை, அறிவன் வாகை, தாபதவாகையெனப் பிறர்தங்

---

1. அட்டு - கொன்று.
* புறப்-வெ. வாகை. க.

கொள்கை மிகைகட்குந் துறைகள் வகுத்து விளக்கங் கூறு தலின்வைத் தினிதறியப்படும். ஆதலால், தொல்காப்பியத் தேவர்க்கும் வெண்பாமாலை யாசிரியர்க்கும் இவ் வாகைத் திணைப் பகுதியில் ஏதுங் கருத்து வேற்றுமையும் முரண் பாடுங் காணப்படா வென்பது நினைவிற் பதிக்கற்பாற்று. இங்ஙன மிவற்றை நூற்போக்குகட் கேற்பப் பகுத்துப் பொருத்தி யுணரமாட்டாதார், தாங் கருதியவாறே இவை தம்மில் வேற்றுமையுள்ளதுபோல் உரை காட்டுவர். அது மேல் விளக்கிக்காட்டிய ஒற்றுமையுரையினாற் போலியா யொழிதல் கண்டுகொள்க வென்பது.

இனி, ஆசிரியர் ஏனையோர் செயல்களையும் விளக்கு தற்கு வாகைத் திணையையே இடனாகத் துணிந்தா ரென் பது என்னையோ வெனிற் கூறுதும்; வாகை யென்பது கொள்கைகள் ஆற்றல் மிகுந்து வெற்றியுறுதலைக் குறிக்கும். எனவே கொள்கைகளின் வெற்றிப் பேறே வாகைத் திணைக்க ணெடுத்து விளக்கற்பாலதாம். கொள்கைகளும், அக் கொள்கைகளையுடைய ஒழுக்கங்களுமென மக்களின் நிகழ்ச்சி இருவகைப்படும். இவ்விரண்டனுட் கொள்கை களே முதன்மையாவன. கொள்கைகள் பற்றியே எவர்க் குஞ் செயல்கள் நிகழும். சில கொள்கைகட்குரிய செயல் கள் விளக்கமாகத் தோன்றமாட்டாவாய் நுட்பமாகவே நிகழும்; சில விளக்கமாய்த் தோன்றுவனவாய் உருக் கொண்டு நிகழும். அரசன் தனது ஆற்றலை மிகுத்துக் கொள்வதாகிய வாகைக் கொள்கையைப் பற்றி அவனுக்கு நிகழும் ஆரவாரித்தல் முதலான வெற்றிச் செயல்கள் விளங்கித் தோன்றுவனவாய் உருக்கொண்டு நிகழ்தலும், தவம் புரிவார் தமது தவவலிமையை மிகுத்துக்கொள்வ தாகிய வாகைக் கொள்கையைப் பற்றி அவர்க்கு நிகழும் நினைவொருமை செய்தல் முதலிய வெற்றிச் செயல்கள் அங்ஙனம் விளங்கித் தோன்றமாட்டாமல் நுட்பமாய் நிகழ் தலும் இவ்வுண்மைகளை நன்கு புலப்படுத்தாநிற்கும். ஆதல்பற்றியே, விளங்கித் தோன்றுவனவாய், எடுத்து விளக்குதற்கு எளிதாவனவாய் நிகழும் அரசருடைய

வாகைச் செயல்களையே இவ் வாகைத் திணைக்கண்ணும் பெரும்பான்மையும் ஆசிரியர் விரித்துரைத்து, அங்ஙனந் தோன்றுதற்கும் விளக்குதற்கும் எளியவல்லவாய் நிகழும் ஏனையோர் கொள்கைகளின் நுட்பச் செயல்களைச் சிறுபான்மையாய்ச் சுருக்கியே கூறித் துறைகள் நிறுத்துவாராயினர்.

நுட்பச் செயல்களெல்லாம் முற்றும் நிறைவாகி வெற்றியெய்திய பின்னரே இச்சிறிதேனும் எடுத்துரைக்குந் தகுதியுடையனவாம். அவ்வாறாக, அவைதாம் நிறைவெய்திவரற்கு முன்னெல்லாம், இன்னும் நுணுக்க மிக்கனவாய் நிகழாநிற்குமாகலின், அவை எவ்வாற்றானும் அந்நிலையில் எடுத்துரைக்கும் பெற்றியன அல்லவென்க. அந்தணர் வணிகர் வேளாளர் முதலாயினார்தங் கொள்கைகட்கும் அரசர்தங் கொள்கைகளிற் போல வெட்சி முதலான திணையொழுக்கங்கள் போல்வன நிகழ்தலுண்டு. அவையெல்லாம் நுணுக்கத்தினும் நுணுக்கம் மிக்கு எடுத்துரைத்தற்குரிய செயற் பரப்பும் நூற்பொருணீர்மையும் புறப்பொருண் முதன்மையு மில்லாமையின் ஆசிரியர் அவற்றையெல்லாம் ஒவ்வொரு திணைக்கண்ணும் எடுத் திணைத் துரையாராய், வாகை முதலான திணைகளிற் கூறுதல் கொண்டு உய்த்துணரவே வைத்தாரென்க. முற்றும் நிறைவாகி வெற்றிப்பேறு காட்டும் வாகைத் திணைக்கண்ணேயே அதினுஞ் சிறுபான்மையாய்ச் சுருக்கியே விளக்குதற்குரிய நுண்ணியல்பினவாய் நிகழும் பார்ப்பனர் முதலியோர் கொள்கைகளின் நுட்பச் செயல்கள், முற்றும் நிறைவாகாமல் நுணுக்கம் மிக்கு வெட்சி முதலான திணைகள்போல்வனவற்றுள் நிகழ்ந்து வருங்கால் அவை ஒரு சிறிதும் எடுத்துரைக்கப்படும் நீரனவல்ல வென்பது கூறல் வேண்டா வென்க.

## ஏனையோர் தொழில் மரபுகள் :

இனித் 'தாவில் கொள்கை' யென்னு நூற்பாவால் வாகையிலக்கணங் கூறிய தொல்காப்பியனார், பல்வகை மர

புடையராய் உலகியல் நிகழ்த்தும் மக்களின் வாகையியல்பு களை 'அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமு' மென்னு நூற் பாவினால் தொகுத்துச் சுட்டிப் பின்னரவற்றின் விரிவு களைக் 'கூதிர்வேனி' லென்னு நூற்பாவினால் வகுத்துக் காட்டுகின்றார். எனவே 'அறுவகைப்பட்ட' வென்னு நூற்பாவும், 'கூதிர்வேனி' லென்னு நூற்பாவும் முறையே தொகைவகை நூற்பாக்களாகு மென்க. இனி ஆசிரியர் தொகை நூற்பாக்கண், உலகிய லொழுகும் மக்கள் தாந் தாமும் ஒரு நெறிப்பட்ட ஒழுகலாறுடையராய் மேற் கொண்டு நிகழ்த்திவந்த தொழிற்கூறுபாட்டு நிகழ்ச்சிகளைத் தொகுத்துரைக்கின்றார். அங்ஙனம் உரைக்கும் வழிப் பார்ப்பனர் மரபு, அரசர் மரபு, வணிகவேளாளர் மரபு, அறிவர் மரபு, தாபதர் மரபு, பொருநர் மரபு, வேறு பிறர் மரபு என்று ஏழு வகைகள் தொகுத்துரைக்கப்படுகின்றன. இங்கு மரபெனப்படுவது அவரவருந் தொன்றுதொட்டு வழக்கமாய் மேற்கொண்டு செய்துபோதருந் தொழின் மரபினை யுணர்த்துகின்றது. இனி இம் மரபுகளின் விளக் கம் உரையாசிரியன்மாரான் உரைக்கப்படுவது வருமாறு:

பார்ப்பனர்க்குரிய அறுவகைத் தொழின் மரபுகள் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்பன. இவைதாமே அப் பார்ப்பனர்க்குரிய தொழின் மரபுகளென்று,

"ஓதல் வேட்டல் அவைபிறர்ச் செய்தல்
ஈதல் ஏற்றலென்று ஆறுபுரிந் தொழுகும்
அறம்புரி அந்தனர்"*

என்று பதிற்றுப்பத்தும் எடுத்தோதுவதாயிற்று. இனி அரசர்க்குரிய ஐந்து தொழின் மரபுகள் ஓதல், வேட்டல், ஈதல், படை வழங்குதல், குடியோம்புத லென்றார் இளம் பூரணர்; இவற்றுட் 'படை வழங்கு' தலை நீக்கி அதற்கு ஈடாகத் 'தண்டஞ் செய்த' லென்பதொன்று சேர்த்துரைப் பர் நச்சினார்க்கினியர். வணிகர்க்குரிய அறுவகைத்

* பதிற்றுப். உச.

தொழின் மரபுகள் ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம், நிரையோம்பல் என்பன வென்றும், வேளாளர்க்கு உரிய அறுவகைத் தொழில்கள் உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தரல், வேட்டல், வேதமொழிந்த கல்வியோதல் என்பனவென்றும் ஆசிரியர் இளம்பூரணர் உரைப்பர். ஆனால் நச்சினார்க்கினியரோவெனின், உரையாசிரியர் வணிகர்க்கு உரைத்த மரபுகளை உரைத்தவாறே ஒத்துக்கொண்டு, வேளாளர்க்குக் கூறிய மரபுகளின்மட்டுங் கருத்துடம்படாமல் வேதம் ஒழிந்தன ஓதலும், ஈதலும், உழவும், நிரையோம்பலும், வாணிகமும், வழிபாடு மெனத் தாம் வேறு ஆறு உரைப்பர். வேளாளர்க்கு வழிபாடு உண்டென்று மேலும் வற்புறுத்துரைக்கும் உரைப்பகுதி யொன்று நச்சினார்க்கினிய ருரையில் வருகின்றது. அதன்கண் அவர், 'இனி வேளாளர்க்கு வழிபாடு கொள்ளாது பெண் கோடல் பற்றி வேட்டல் உளதென்று வேட்டலைக் கூட்டி ஆறென்பாரு முளர். வழிபாடு இருவகை வேளாளர்க்கும் உரித்து. இனி வேட்டலைக் கூட்டுவார் அரசராற் சிறப்பெய்தாத வேளாளர்க்கே வழிமாடு உரித்தென்பர்' என்று உரையாடுவர்.

இனி அறிவர்க்குரிய மரபினை ஆசிரியர் இளம்பூரணர் மழையும் பனியும் வெயிலுமென்னும் மூவகைக் காலங்களிலும் நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூமமும் மின்வீழ்வும் கோணிலையும் மழைநிலையும் பிறவும் பார்த்துக் கூறுதலென்று கூறி, இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலங்களின் நிகழ்ச்சிகளையும் அறிந்து கூறலென் றுரையாநிற்கும் பிறர் மதத்தை மறுப்பர். நச்சினார்க்கினியர், இறப்பு முதலான முக்காலங்களையும் அறிதலே அறிவன் மரபென நாட்டுவர். தாபதர்க்குரிய மரபுகள் நீராடல், நிலத்திடைதல், தோலுடுத்தல், சடைபுனைதல், எரியோம்பல், ஊரடையாமை, கான் உணவே கோடல், தெய்வ வழிபாடு முதலியன செய்தலென்னும் எட்டுவகை நிகழ்ச்சிகளா மென்பது இளம்பூரணர் கோட்பாடு; நச்சினார்க்கினியர் ஊணசையின்மை, நீர்நசையின்மை, வெப்பம் பொறுத்

தல், தட்பம் பொறுத்தல், இடம் வரையறுத்தல், ஆசனம் வரையறுத்தல், இடையிட்டு மொழிதல் வாய்வாளாமை என்று தவம்புரிவார்க்கு ஓரெட்டும்; இயமம், நியமம், ஆசனம், வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைதல், சமாதி என்று தவஞ்செய்து நினைவொருமை செய்வார்க்கு மற்றோரெட்டுமாகத் தாபதரை இருவகைப்படுத்து மா புரைப்பர்.

பொருநர்க்குரிய மரபு வாளானுந் தோளானும் பொருதலும் வேறலுமென்று இளம்பூரணருரையிற் காணப்படுகின்றது; 'அனைநிலை வகையோ'டென்று தொல்காப்பியர் ஏழாவதாகக் கூறும் மரபு வாளானுந் தோளானும் பொருநர் வேறலன்றிச் சொல்லானும் பாட்டானுங் கூத்தானுஞ் சூதானுந் தகர்ப்போர் பூழ்ப்போர் என்பவற்றானும் பிறர் வெல்லுதலென்று அதன்கண் எடுத்துக் காட்டப்படுகின்றது. ஆனால் நச்சினார்க்கினியத்தில், இவ்வனைத்தையும் பொருநர்க்குரிய மரபாகவேவைத்துரைத்து, தொல்காப்பியர் கூறிய 'அனைநிலை வகையோ'டென்னும் மரபு, மேலெல்லாங் காட்டிய பார்ப்பனப் பக்கம் முதலான அறுவகைப் பக்கங்களினுந் தோன்றி அவற்றிற்கு வேறுபட்டுக் காட்டும் பிறர்மரபுக ளாகுமென்று உரைநிறீஇ விளக்கப்பட்டிருக்கின்றது. அது, பார்ப்பார் அரசர் வணிகர் வேளாளர் என்னும் நால்வகைப் பகுப்பினுள்ளுங் களவினுற் பிறந்த மக்கள் தத்தங் கோட்பாட்டை மிகுத்துக் கொள்வதான வாகையெனவும், அறிவு முயற்சியானன்றித் தவமுயற்சியான் முக்காலமு முணரும் அறிவாது வாகையெனவும், அன்னார்க்கு மாணக்கராகித் தவமொன்றுமே யுடையரான தாபதரது வாகையெனவும், போர்க்களத்துப் பொருநரை யொப்பவே தகர்வென்றியும் பூழ்வென்றியுங் கோழிவென்றியும் முதலியன உடையரான பொருநரது வாகையெனவுங் கூறப்படுவதாகும். ஆசிரியர் தொல்காப்பியனார் எல்லா மக்கட்குந் தொழின்மரபு தொகுத்துரைத்தியற்றிய 'அறுவகைப்பட்ட பார்ப்பனப்பக்க' மென்னு நூற்பாவுக்கு உரையாசிரியன்மார் விளக்கிக் காட்டிய உரை இவையேயாம்.

**துறை விளக்கம் :**

இனி ஆசிரியர் அரசரது வாகைக்கு வகுத்த துறைகள்,

"கூதிர் வேனி லென்றிரு பாசறைக்
காதலி னொன்றிக் கண்ணிய வகையினும்,
ஏரோர் களவழி யன்றிக் களவழித்
தேரோர் தோற்றிய வென்றியும், தேரோர்
வென்ற கோமான் முன்றேர்க் குரவையும்,
ஒன்றிய மரபிற் பின்றேர்க் குரவையும்,
பெரும்பகை தாங்கும் வேலி னானும்,
அரும்பகை தாங்கும் ஆற்ற லானும்,
புல்லா வாழ்க்கை வல்லாண் பக்கமும்,
ஒல்லார் நாணப், பெரியவர்க் கண்ணிச்
சொல்லிய வகையின் ஒன்றொடு புணர்த்துத்
தொல்லுயிர் வழங்கிய அவிப்பலி யானும்,
ஒல்லா ரிடவயிற் புல்லிய பாங்கினும்"*

என்பனவாம், இந்நூற்பாவில், அரசன் பாசறையிலிருந்து சிறத்தலும், தேரேறி வந்த புலவர் களம்பாடுதலும், பகைவரை வென்ற வெற்றிக்களிப்பினால் அரசன் தேர் முன் குரவையாடுதலும், அங்ஙனமே தேர்ப்பின் ஆடுதலும், வேற்றொழில் சிறத்தலும், கொடும் பகைவரையுந் தாங்கிப் பொருகின்ற ஆற்றல் சிறத்தலும், உயிரை ஒரு துரும்பாய் நினைத்து வீரமாய்ப் போர் மேற்கொள்ளுதலும், வஞ்சினங் கூறிப் படைஞர் ஆண்மையுடன் உயிர் துறத்தலும், பகைவருந் தம்மை ஒருதவி நாடியவழி அதனை நட்புணர்ச்சியோடு பெருந்தகைமையுடன் உளமாரச் செய்தலுமென அவைதாம் முறையே கூறப்படுகின்றன.

இனி ஏனோர்க்கும் உரியவாக வருந் துறைகள், ஆனிரைகளால் வணிகவேளாளர் சிறத்தலும், மனையறமுடையார் பிறர்மனை நயவாதிருத்தலும், அவையத்தார் குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூய்மை, நடுநிலைமை, அழுக்காறுமை, அவாவின்மை என்னு மியல்புகளிற் பெருமை பெறலும், இல்லறவொழுக்க முடையார்

---

* தொல். புறத். உக.

அடக்க முடைமை, ஒழுக்கமுடைமை, நடுவுநிலைமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை முதலியவற்றிற் சிறப்புறுதலும், எவருங் கொடுத்தற்கரியன கொடுத்தலில் வல்லராதலும், தம்மாட்டுத் தவறு செய்தாரைப் பொறுத்துப் பாதுகாக்கும் பெருந்திறல் பெறுதலும், செல்வப்பொருளினுங் கல்விப்பொருளினும் மேம்பாடு பெறுதலும், அங்ஙனம் பெற்ற விடத்தும் அவற்றோடு அருளுடைமை யுடையராய்ப் பொருந்திப்பற்றின்றிப் பயன் துய்த்தலில் ஆண்மை பெறுதலும், இவ்வாறே இன்பத்தின்கண்ணும் பற்றற்று நிற்றலில் வன்மைபெறுதலுமென்று வகுக்கப்படுகின்றன. இவ்வியல்புகளெல்லாம்,

> பகட்டி னானும் மாவி னானுந்
> துகடபு சிறப்பிற் சான்றோர் பக்கமும்
> கடிமனை நீத்த பாலின் கண்ணும்,
> எட்டுவகை நுதலிய அவையகத் தானும்,
> கட்டமை யொழுக்கத்துக் கண்ணுமை யானும்,
> இடையில் வண்புகழ்க் கொடையி னானும்,
> பிழைத்தோர்த் தாங்குங் காவ லானும்,
> பொருளொடு புணர்ந்த பக்கத் தானும்,
> அருளொடு புணர்ந்த அகற்சி யானும்,
> காம நீத்த பாலி னானுமென்
> றிருபாற் பட்ட ஒன்பதின் றுறைத்தே.

என்று மேற்றுறைகளோடு தொடர்ந்து வருந் துறை கூறு நூற்பாவில் ஆசிரியர் செவ்வையாய் எடுத்து விளக்கினார். இவையெல்லாம் நம் தண்டமிழ் நாட்டுப் பண்டைப் பெரு மக்களது தண்டாச்சிறப்பினை நன்கு விளக்குவனவா மென்க.

ஆசிரியர் தொல்காப்பியனார் இவ்வாறெல்லாம் வாகை யியல்புகளைத் தொகுத்தும் வகுத்தும் விளக்கி நிற்றலோடு புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் பெரிதும் ஒத்துச் சிறிதே வேறுபட்டுச் செல்கின்றார். ஆசிரியர் 'அறுவகைப் பட்ட' வென்னு நூற்பாவிற் பகுத்தவாறே ஐயனாரிதனாரும் பார்ப்பனவாகை, அரசவாகை, வாணிகவாகை, வேளாண்

வாகை, அறிவன்வாகை, தாபதவாகை, பொருநவாகை முதலியன தமது வெண்மாலையினும் பகுத்தோதுகின்றார். பின்னர் ஆசிரியர் 'கூதிர்வேனி'லென்னு நூற்பாவில் துறைகள் வகுத்தவாறே இவரும் கூதிர்ப்பாசறை, வாடைப்பாசறை, மறக்களவழி, முன்றோர்க்குரவை, பின்றோர்க் குரவை, முரசவாகை, வாகையரவம், களவேள்வி, அவிப்பலி, கிணைநிலை யென்பனவும் பிறவும் அரசர் வாகைக்கு வகுத்துக் காட்டுவர். தொல்காப்பியனார் ஏனைய வாகைக்கு வகுத்த துறைகள் பலவற்றுள்ளும் வெண்பா மாலை யாசிரியர் பொருளொடுபுகறல், அருளொடு நீங்கல் என்னும் இரண்டை மட்டுமே தமது நூலுள் எடுத்துக் காட்டுகின்றார். இவர் தும்பைத்திணைக்கண் அடக்கி உரைகிளத்திய பாண்பாட்டும் முன்றோர்க்குரவையும் பின்றோர்க் குரவையுந் தன்னை வேட்டலுமெல்லாந் தொல்காப்பியனார் 'ஏரோர் களவழியன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றியும்', 'வென்ற கோமான் முன்றோர்க்குரவையும்', 'ஒன்றிய மரபிற் பின்றோர்க்குரவையும்', 'தொல்லுயிர் வழங்கிய வவிப்பலியானும்' என்னுந் துறைகளாக வாகைக்கண் அடக்கி முறையே வகுத்துக் காட்டுவர். என்னை? இந் நான்கும் வெற்றி நிலையை யுணர்த்தி வருகின்றமையி னென்பது. இவ்வுண்மையை யுணரப்பெற்ற ஐயனாரிதனாரும் இவற்றை வாகைப்பகுதிக்கண்ணும் நிறுத்தி உரைகளப்பாராயினர். எனினும் அவர் போர்க்களத்தில் நிகழும் எல்லா நிகழ்ச்சிகளுந் தும்பைத்திணையா மெனக்கருதி, ஆசிரியர் தொல்காப்பியனாரைப் போல எதனையும் பொருள் வரம்பின் கண்ணராய்ப் பாகுபாடுகள் செய்யாமல் மேற் காட்டியவற்றைத் தும்பைக்கண் அடக்கி உரைத்தமையே ஈண்டு மாறுபாடாவதா மென்பது.

## வாகையின் வகை :

இனி வெண்பா மாலையார் தொல்காப்பியனார்க்கு மாறாக இவ் வாகைத்திணைக்கண் செய்யும் வேறொரு மாறு பாடும் இங்கெடுத்துக் காட்டுதற் குரியது. தொல்காப்பியனார் வாகை யென்றுரைத்த ஒழுக்கத்தை இவர் வாகை

யெனவும் முல்லை யெனவும் இருவகைப்படுத்து அவ்விரு வகைகட்குந் துறைகள் வகுத்து உரையாநின்றார். இவர்க்கு இக் கருத்துண்மை பார்ப்பனவாகை, பார்ப்பன முல்லை; அரசவாகை, அரசமுல்லை; அறிவன் வாகை, கணிவன் முல்லை முதலியவாக அவர் வகுக்குந் துறைகளினாலேயே நன்கு விளங்காநிற்கும். ஆசிரியர் நச்சினார்க்கினியரும் இக் கருத்தொன் றுடையராய்,

> "தாவில் கொள்கைத் தத்தங் கூற்றைப்
> பாகுபட மிகுதிப் படுத்த லென்ப."

வென்னுந் தொல்காப்பிய நூற்பாவுக்கு உரைக்கும் உரையில், 'பாகுபட' வென்பதை 'இருவகைப்பட' வென உரைத்து, 'இருவகையாவன, தன்னைத்தானே மிகுதிப் படுத்தலும் பிறர் மீக்கூறு படுத்தலுமாம். இனி இரு வகைக்குள் உறழ்ச்சியாற் பெற்ற வென்றியை வாகையெனவும் இயல்பாகப் பெற்ற வென்றியை முல்லை யெனவுங் கூறுவர்' என்று உரைத்திடுவர். இங்ஙனமொன்று ஆசிரியர் இளம்பூரணனார் உரைப்பாரல்லர். இக்கருத்தினை உட்கொண்டே நச்சினார்க்கினியர் 'தாயர் கூறுவன மூதின் முல்லையாம்; மனைவியர் கூறுவன இல்லாண் முல்லையாம், கண்டோர் கூறுவன வல்லாண் முல்லையா' மென்று தாம் பைத் திணையுரையி லுரைத்தார். இவ்வாறு கூறப்படும் இம் முல்லை பற்றிப் பார்ப்பன ரியல்புரைக்கும் பார்ப்பன முல்லையும், அரசரியல்புரைக்கும் அரசமுல்லையும், அவையோ ரியல்புரைக்கும் அவையமுல்லையும், கணிவன் நிலையுரைக்குங் கணிவன் முல்லையும், மறக்குடி மகளிர் நிலை யுரைக்கும் மூதின் முல்லையும், குடியொழுக்க முரைக்கும் ஏறாண் முல்லையும், வீரரின் ஆண்மையை வியந்துரைக்கும் வல்லாண் முல்லையும், அரசனது காவற்றன்மை யுரைக்குங் காவன் முல்லையும், மன்னன் போர் மேற்கொண்டமை யுரைக்கும் பேராண் முல்லையும், வீரனது கொதிப் புரைக் கும் மறமுல்லையும், குடைநிலை யுரைக்குங் குடை முல்லை யும், சான்றோரியல் புரைக்குஞ் சால்பு முல்லையுமாகப் பல துறைகள் வெண்பாமாலையிற் காணப்படுகின்றன. இவ்

வியல்பு ஏருண் முல்லை, மூதின் முல்லை, வல்லாண் முல்லை யென்னும் மூவகைத் துறைகளாய்ப் புறநானூற்றுரையிலும் பயின்று வருமாயினும் முழுமுதலிலக்கண நூலான தொல் காப்பியத்துள் யாண்டுங் காணப்படாமையின், இஃது ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்துக்கு வேறான தொன் றேயா மென்க.

## புறமும் அகமும் :

இனி இவ்வியல்பினதாய் வரும் வாகைப்புறம் தனக்கு இனமான பாலையகத்தோடு நுணுகிப் பொருந்துமாறும் ஆராயற் பாலது. வாகை யொழுக்கத்துக்கும் பாலை யொழுக்கத்துக்கும் உரிய இடம் முல்லை குறிஞ்சி முதலான நால்வகை நிலத்துக்கும் நடுப்பட்ட வெறுநிலமாகும்; இதனையே பாலைநிலமென்று கூறுப. இவ்வியல்பினைப் 'பொருள்வயிற் பிரிவு' என்னும் எமது அகப்பொருட் கட்டுரையில் விளக்கியிருக்கின்றேம். வெற்றியெய்திய அரசன் அவ் வெற்றித்தோற்றம் விளங்கும்படி செய்த நிலத்தை விட்டு வழிப்பற்றுவனாதலின், அவன் பற்றிவரும் அவ் வழிநிலமே வெற்றிக்குரிய நிலமென்க. அது பாலை யாம்; தலைவியைப் பிரிந்த தலைவனும் அன்றித் தலைவியோடு உடன்போகுந் தலைவனும் தமது பாலையொழுக்கத்தை நிகழ்த்துமிடம் அவ் வழிநிலமேயாதல் காண்க. எனவே, அகப்பொருட் பாலைக்கும் புறப்பொருள் வாகைக்கும் நிலம் பாலைநிலமாதல் பெறப்படுமென்பது.

அற்றன்று, இளம்பூரணர் முதலான உரையாசிரியன் மார் தொல்காப்பிய உரையிற் * பாலை யொழுக்கத்துக்கு நிலமில்லை யென்று கூறினரெனின், அன்று; அவரெல்லா ரும் நிலமில்லையென்று கூறினாரல்லர்; மற்று அதற்கென்று ஒரு தனிநில மில்லை யென்றே கூறினர்; அஃதொக்கும், ஏனென்றால், பாலைநிலமென்பது நால்வகை நிலங்களின் வழிநிலமேயாதலானும், வழிக்கொடுமையின் முதன்மை பற்றி முல்லை நிலமுங் குறிஞ்சி நிலமும் முறைமை திரிந்து

* தொல். புறத். கஅ.

வெம்மை மிக்க வெறுமணல் நிலத்தை அதற்கு ஆசிரியன்மார் எடுத்துக்காட்டுவாராதலானும்* அந் நிலங்கள்தாமும் உற்று நோக்குவார்க்கு நானிலப் பகுதிகளில் அடங்கித் தோன்றுமாகலானும் உரையாசிரியன்மார் பாலைக்குத் தனிநிலமில்லை யென்று உரைப்பாராயின ரென்பது. ஆசிரியர் தொல்காப்பியனாரும் இக் கருத்தினை உட்கொண்டே "மாயோன் மேய காடுறை யுலகமு"† மென்னும் அகத்திணையிய னூற்பாவில் நால்வகை நிலங்களை பகுத்தோதிப் பாலையைத் தனிநில மெனச் சுட்டாராயினார். ஆகவே, பாலைக்கெனத் தனிநிலமொன் றில்லையென்பதே இன்னோரன்னவற்றின் கருத்தாகக் கொள்ளல்வேண்டும். மற்றப்படி பாலையும் வாகையும் அகம்புறமாய் நிகழ்தற்கு இந் நானிலங்களினின்றுந் தோன்றிய வெறுமணல் வழிநிலமான பாலை நிலமெனப் படுவதொன் றுரியதென்று ஆசிரியன்மார் மரபு கொண்டமையும் மறுக்கப்படாதென்பது அறியற்பாற்று. இஃதே ஆசிரியர் தொல்காப்பியனார்க்குக் கருத்தாதல்,

"நடுவுநிலைத் திணையே நண்பகல் வேனிலொடு
முடிவுநிலை மருங்கின் முன்னிய நெறித்தே."‡

என்னு நூற்பாவினாற் பொழுதென்னும் முதற்பொருளும் 'புணர்தல் பிரித'$ லென்னு நூற்பாவினா லுரிப்பொருளும், பாலைத் திணைக்கு வகுத்துக்காட்டுதலின் குறிப்பிடைவைத் துணர்ந்துகொள்ளப்படும். தொல்காப்பிய உரையில் உரையாசிரியன்மார் பாலைக்குக் கருப்பொருள் வகுத்துக் காட்டுதலும், ஆசிரியர் அடியார்க்கு நல்லாரும் இங்ஙனமே சிலப்பதிகாரப்பதிக உரைமுகத்தே இலக்கியச் சான்றுகள் காட்டி முதல் கரு உரிப்பொருள்கள் மூன்றும் வகுத்து விளக்குதலும் போல்வன இக் கோட்பாட்டை எடுத்து நிறுவுதற்கு ஏற்ற மெய்ப்பொருட் சான்றுகளாமாறு கண்டு கொள்க வென்பது.

---

* சிலப். காடுகாண். கூச-எ.  $தொல். அகத். கச.
† தொல். அகத். கரு.
‡ ,, ,, க

இனிப் பாலைக்குப் பொழுது இளவேனிலும் நண்பகலுமா மென்பதே ஆசிரியர் தொல்காப்பியனார்க்குக் கருத்தென்று யாம் தும்பைத்திணைக் கட்டுரையில் நன்கு விளக்கியிருக்கின்றேம். எனவே, தலைவன் நண்பகற் பொழுதில் தலைவியைப் பிரிந்து மணல்வெளியில் வழிச் செல்லல் போலவே, அரசனும் வாகையுடையனாய் வெயிலெல்லாம் வழியிற் றங்கி மாலையில் தலைவியை நணுகுதல் கண்டுகொள்க.

வாகைத்திணைக்கண்ணனாய் அரசன் முடியிலணியும் வெற்றிப்பூ 'கொத்தான்வாகை' யென்று புறப்பொருள் வெண்பாமாலையுரையிற் கூறப்படுதலின், அது பாலைநிலத்துப் பூவாதலும் இங்கு ஒப்பு நோக்கற்பாலது. அப் பூ வெண்ணிறமா யிருக்குமென்பது "வெண்கண்ணியுங் கருங்குழலும்"* என்று வெண்பாமாலையில் வருதலாலறியப்படும்.

இனி உரிப்பொருட் கண்ணும் இவ்வகப்புறத் திணைகள் மிக்க ஒற்றுமையுடையனவாம். பாலைக்கு உரிப்பொருள் பிரிதலென்றார் ஆசிரியர். வாகைத் திணைக்கண்ணும் அரசன், கலந்து புரிந்த போரினின்றும் பகைவரைப் பிரிந்து நிற்றல் கண்டுகொள்க.

பாலைநிலத்தின் தோற்றமெல்லாம் வெறும் வெளியேயாகும்; அவ்வெளியினையே சான்றோர் வான் என்ப. அவ்வானென்னும் வெளியில் எல்லா நுண்ணணுக்களுங்கலந்து விளங்குதலின், வானியல்பு கலப்பென்றே உரைக்கப்படும்; மேலும், ஒரு பொருள் பல அணுக்களால் உருவடைந்திருக்கின்றது; உருவுடைய அப் பொருளின் ஒவ்வோரணுவினிடையிலும் வான்வெளி யுளதென்று இஞ்ஞான்றை இயற்கைப்பொருணூலாரும் ஒத்துரைப்ப. போர் விளைக்கும் அரசரிருவருள் ஓர் அரசன் வாகையெய்தினனெனவே ஏனை மாற்றார்பக்கமும் அவனோடு பகைதீர்ந்து ஒற்றுமையுடையதாய்க் கலந்துநிற்றலால், வாகையிற் கலப்புண்மையறிக.

---

* புறப்-வெ. அ : உ.

இனி வானிடை அணுவும அணுவிடை வெளியுமாக அவை கலந்திருத்தலின், அணுக்கள் ஒன்றோடொன்று உராயுங்கால் ஆண்டுப் பிறக்கும் ஓசை இவ் வெளிக்கணின்றும் விளையாநிற்கின்றது. எனவே ஓசை பிறக்குமிடம் வான்வெளியென் றறிந்துகொள்க. "சத்த முன்னாத் தோன்றும் வான்"* என்பது சிவஞான சித்தியார்.

வான் வெளியிற் பிறக்கும் ஓசையை உணர்வது மெய்ப்பொறிகள் ஐந்தனுள்ளுஞ் செவிப்பொறியேயாதல் கண்கூடு. வாகைப்பேற்றை அரசன் அறிவதும் செவியினு லென்க. என்னை? தனது வாகையைக் கண்டார் புகழ்ந்து கூறுஞ் சொல்லோசைகள் அவன்றன் காதிற்கு எட்டுகின் றமையி னென்பது. பாலை யொழுக்கத்தின்கண்ணுந் தலைவி தன் தலைவனது பிரிவை அவன் கூறுஞ் சொற்க ளாலுந் தோழி முதலியோர் கூறுஞ் சொற்களாலுஞ் செவிப்பொறியாற் கேட்டே அறிந்துகொள்வளென்க.

இறுதியாக வாகைபயிலும் அரசனுக்கும், பாலைபயிலுந் தலைவனுக்கும் இப் பயிற்சிகளால் விளைவது அருளென்னும் அரிய இயல்பாம். வாகையரசன் தன்னால் அழிக்கப் பட்ட பகைவர்மேல் ஓர் அருளும், பாலைத்தலைவன் தன்னாற் பிரிக்கப்பட்ட தலைவியின்மேல் ஓர் அருளும் உண்டாகப் பெறுவரென் றறிந்துகொள்க.

இவ்வாற்றால் வான்வெளியின் பயிற்சி, கலப்பென்னும் வாகையுணர்ச்சியாய் நுணுகி, கேட்குஞ் செயலால் அருளென்னும் பாலையுணர்ச்சியாய்ப் பின்னும் நுணுகி யமைதல் அறியப்படும்.

---

* சிவஞானசித். உ : ௬௫.

# அ. காஞ்சித் திணை

[உலகத்தின் நிலையாமையுணர்ந்து அதற்கேற்ப மெய்யுணர்வுடன் ஒழுகுதல்]

வெடிபடக் கடந்து வேண்டுபுலத்து இறுத்த
பணைகெழு பெருந்திறல் பல்வேல் மன்னர்
கரைபொருது இரங்குங் கனை இரு முந்நீர்த்
திரை இடு மணலினும் பலரே உரைசெல
மலர்தலை உலகம் ஆண்டுகழிந் தோரே.

—மதுரைக் காஞ்சி, உ௩௬-௪.

'பகைவர்களுக்குக் கேடு உண்டாக வென்று பின்னும் அழிக்கவேண்டுமென்று விரும்பிய நிலங்களிலே சென்று தங்கிய வெற்றி முரசு பொருந்தின பெரிய வலியினையும் வேல் முதலிய பல படைகளையுமுடைய அரசர்கள், கரையை அலைத்து ஒலிக்குஞ் செறிந்த கரிய கடலலைகள் கொணர்ந்து குவிக்கின்ற மணலினும், எங்கும் புகழ்பரக்கும்படி அகன்ற இடத்தையுடைய இவ்வுலகத்தை ஆளுகை செய்து மாண்டுகழிந்தோர் பலராவரென்க.

எனவே, அவரெல்லாருந் தமது உயிரறிவைப் பெருக்கி இறைவன் றிருவருளுணர்ந்து பிறவியையொழித்தற்கு முயலாது, வீணாக நிலையில்லாப் பொருள்களை விரும்பி வாழ்நாள் கழித்துப் பயனின்றிக் கழிந்தார்; ஆகவே நீயும் அவ்வாறு கழியாமல் மெய்ப்பொருளுணர்தலிற் கருத்தீடு படுவாயாக வென்று அறிவுறுத்தவாறாம்; இது தலையாலங்கானத்துச் செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை மாங்குடி மருதனார் பாடி அறிவுறுத்தியதாகும். இன்னோரன்ன வியல்புகளெல்லாம் "மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமையு"* மென்று ஆசிரியர் வகுத்துக்காட்டிய பெருங்காஞ்சியுள் அடங்கும்.

---

* தொல். புறத். உ௪.

[1]" இருங்கட லுடுத்தவிப் பெருங்கண் மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித் தத்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே"*

என்னும் புறநானூற்றுச் செய்யுளும் இவ்வியல்பு தேற்றி யெழுந்ததாகும். 'இரங்குந் திரை' யென்க. 'சுழிந்தோர் பல' ரென்பது. ஏகாரங்கள் முறையே பிரிநிலையும் அசையுமாம்.

## திணைப் பொருள் :

இனிக் 'காஞ்சித்திணை' யென்பது உலகத்தின் நிலையாமை யுணர்ந்து அதற்கேற்ப ஒழுகும் ஒழுக்கமாம். வெட்சித்திணை முதல் வாகைத்திணையீறாக நிகழும் புறப்பொருளொழுக்கங்களில் அரசன் படிந்து நின்றமையாற், பொருணுகர்ச்சி முழுமையும் அவன் நுகர்ந்தானாயிற்று. நுகர்ச்சி பெருகப்பெருக அந்நுகர்ச்சியின் நிலையாமையும் வளர்ந்து வருதலால், அரசன் அதனைப் பலவகையானும் உணர்ந்து எல்லாப் பொருள்களினும் ஒரு துவர்ப்புண்டாகப் பெறுந் தகுதியை அடைகின்றான். அடையவே, அவன் பின்னும் பின்னும் பல அயல்நாடுகளின்மேற் படையெடுத்துப் பொருது அவற்றைக் கைப்பற்றுதலில் அவாவிலனாய், தனது அரிய பிறவியைத் தூய்மை செய்து கோடலே இனிச்செயற்பாலதா மெனத் தன்னறிவானும் பிறர்கூற்றானுந் துணிந்து, மற்று அதற்குரிய அறவொழுக்கத்தில் ஈடுபடுவான்; இம்முறைமையே ஏனையோர்க்கும் ஒக்கும்; இவ்வாறு நிலையாமை யுணர்ச்சியினாற் பொருந்தும் நன்னெறி யொழுக்கமே உலகியனீர்மையில் பலபடியுந் தெளிவெய்தி முழுமுதலிலக்கணம் வழுவின்றி யுரைப்பாரான ஆசிரியர் தோல்காப்பியனாராற் 'காஞ்சி' என்று வகுக்கப்பட்டதென்பது,

1. உடை - ஒருவகை மரம். பதியாக - இடமாக.
* புறம். ௩௬௩.

[1]" பாங்கருஞ் சிறப்பிற் பல்லாற் றானும்
நில்லா வுலகம் புல்லிய நெறித்தே "*

என்று அவரியற்றிய தொல்காப்பிய நூற்பாவினாற் றுணியப்படும்.

எவர்க்கும் பொருள்களினுகர்ச்சியால் நிலையாமை யுணர்ச்சியுண்டாதலும், அதனால் அவர் நல்லொழுக்கம் பொருந்துதலுமே உலகிய லுண்மையினுங் காணப்பட்ட முடிபாம். இவ்வியல்பினை யுற்றுணர்ந்தே ஆசிரியர் அதனைக் 'காஞ்சி' யெனக் கூறி வேறு வகுப்பாராயினர். ஈதுணரமாட்டாத பன்னிருபடலமுடையார் முதலியோர் ஏதொரு பொருட்சிறப்புங் காட்டாது தமக்குத்தோன்றிய வாறே 'காஞ்சியென்பது வஞ்சி வேந்தனுக்கு எதிர் சென்றான்றுறை' லென உரைத்து ஆசிரியரொடு மலைந்தனர். வஞ்சி வேந்தனுக்கும் அவனுக்கு எதிர்சென் றான்றிய மாற்றுவேந்தனுக்கும் அஞ்ஞான்றுபட்ட உள்ளநிலை ஒன்றேயாமென்பதும், அதுபற்றியே ஆசிரியர் அவ்விருவரையும் வஞ்சிமன்னரென்றே ஒருவராகக் கருதியுரைத்தாரென்பதும், அங்ஙனம் உரைத்தலே இருவகை வழக்கிற்கும் பெருத்தமாமென்பதும் அறிதல் வேண்டும். பன்னிருபடலமுதலியன பொருட்சிறப்பின்றிப் படலவளவாய் விரித்துரைக்குங் காஞ்சித்திணையென்பது, ஆசிரியர் வஞ்சித்திணைக் குரைத்த,

" எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்தன்
அஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே "†

என்னு நூற்பாவிலேயே பொருத்தமாய் அடங்கியமைதல் மிகத் தெளிவாய்ப் புலப்படாநிற்கின்றது. இவ்வுண்மைகளையெல்லாம் யாமுரைத்தவாறே ஆசிரியர் நச்சினார்க்கினி

---

1. பாங்குஅரு - இணையற்ற. சிறப்பின் - வீடுபேறு காரணமாக. நில்லா உலகம் - உலகநிலையாமையை என்னும் பொருட்டு. புல்லிய நெறித்து - பொருந்திய நெறியினையுடையது.

* தொல். புறத். உங.   † தொல். புறத். உள.

'போந்தை' யென்பது பனந்தோடு; வேம்பென்பது வேப்பன்; ஆர் என்பது ஆத்தி; இம்மூன்றும் முறையே சேர பாண்டிய சோழர் மூவர்க்கும் உரிய அடையாளப் பூக்களாகும்; இவ்வுண்மையை,

"தோடார் போந்தை வேலோன்"*
"சினையலர் வேம்பன்"†
"ஆர்புனை சென்னி யரசன்"‡

என்னுஞ் சிலப்பதிகாரத் தொடர்களானுங் கண்டுகொள்க. இவ்வேந்தர்கள் போர் செய்யுங் காலங்களில் இவ்வடையாளப் பூக்களோடு வெட்சி முதலான புறத்திணைப் பூக்களையும் உடனணிந்து கொள்வரென்பது அறியற்பாலது.

உன்னமென்னும் மரம் தனது நாட்டுக்குக் கேடு வரும்போது உலறுமெனவும், அங்ஙனம் வாராதபோது தளிர்க்குமெனவுங் கூறுப; தொல்காப்பியப் புறத்திணையியவில், "உன்னமென்பது ஒரு மரம். அது தன் நாட்டகத்துக் கேடு வருங்கால் உலறியும், வாராத காலம் குழைந்தும் நிற்கும்"|| என்று ஆசிரியர் இளம்பூரணர் இங்ஙனமே எடுத்துரைத்தலும் நினைவுகூர்க. பதிற்றுப்பத் துரையினும் ஈது உரைக்கப்படுகின்றது.§ வேந்தன் வெற்றிபெற்ற ஞான்று அவனியல்பினை மறவர் அவ்வுன்னமரத்தி னியல்போடு இயைத்துப் புகழ்வரென்க. இதனை ஐயனாரிதனார்,

[1]"துன்னருந் தானைத் தொடுகழலான் றுப்பெதிர்ந்து
முன்னர் வணங்கார் முரண்முருங்க - மன்னரும்
ஈடெலாந் தாங்கி இகலவிந்தார் நீயுநின்
கோடெலாம் முன்னம் குழை"○

---

[1] தொடு - கட்டிய. துப்பு - வலிமை. முருங்க - கெட. ஈடெலாம் - வலியெலாம். கோடெலாம் - கிளைகளெல்லாம் முன்னம் - முன்னமரமே.

* சிலப். நீர்ப்படை, கஅரு. || தொல். புறத். ரு.
† ,, கொலைக்களக், கசக. § பதிற்றுப். சo
‡ ,, நடுகல், உகக. ○ புறப்-வெண். பொதுவியல், ச.

என்று தமது வெண்பாமாலையிற் கூறினர். இத்துறை 'உன்னநிலை' யெனப்படும்;

அரசன் ஆண்டில் இளைஞனயினும் அரசாட்சித் திறமையிற் பெரியனென்று உயர்த்துக் கூறுதல் 'ஏழகநிலை' யெனப்படுகின்றது; ஏழகமென்பது ஆட்டுக்கிடாய்; அரசன் வெளியிடங்களி லெல்லாம் யானையின்மேலுங் குதிரையின்மேலும் ஏறிப் புறத்தார்க்குப் பெருந்தன்மை காட்டுவனயினும், அரண்மனையி னுட்புறத்திலும் வேறு மறைவான இடங்களிலும் விளையாட்டுக்காகக் குதிரையைப்போன்ற பெரிய ஏழகத்தின்மேலும் ஏறி யூர்தலுஞ் செய்வானென்ப. ஏழகத்தின்மேலூரும் இம்மரபு,

> [1]"வரையகம் ஏற வலியின மென்ன
> விரைசெலல் வெம்பரி மேழக மேற்றிக்
> குரைகழன் மைந்தனைக் கொண்டு பறந்தான்"*

என்று சீவகசிந்தாமணியின் காந்தருவதத்தையாரிலம்பகத்திலுங் கூறப்படுகின்றது. எனினும் இவ்'வேழகநிலை'யென்பது அரசனது இளம்பருவத்தை விளக்கிக் காட்டுவதொரு துறை யென்றே முதன்மையாகக் கருதப்படல்வேண்டுமென்க. "ஏந்துபுக ழுலகினிளமை நோக்கான், வேந்து நிற்றலு மேழக நிலையே"† யென்று வெண்பாமாலையாசிரியரும் இது கருதியே வேறுமொரு கொளுவுரைத்தலுங் காண்க.

பண்டைக்காலத்திற் போர்க்களத்திற் பொருது உயிர் துறந்த புகழ்மிக்க வீரர்கட்கு ஆங்காங்கும் அவர் உருவும் பெயரும் எழுதி நடுகல் நடுதலும் வாழ்த்தலும் வழக்கமாயிருந்தன.

> "ஆடவர்
> பெயரும் பீடும் எழுதி அதர்தொறும்
> பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்"‡

---

1. வலியின் - துணிவீராக. பரிமேழகம் - குதிரையைப் போலும் ஓடுதலையுடைய ஆட்டுக்கிடாயை.

* சிந்தா. காந்தரு. உரு.

† புறப்-வெண். பொதுவியல், ௬. ‡ அகநா, ௧௬௬.

என்னும் அகப்பாட்டினும் இவ்வியல்பு எடுத்துரைக்கப்படுதல் காண்க. கன்னட நாட்டார் அதனை வீரக்கல்லென்றே வழங்குப. இவ்வீரக் கற்களுக்குக் கோயிலெடுத்தலும் உண்டென்பது வெண்பாமாலையில் இதற்கு வகுக்கப்படும் 'இற்கொண்டு புகுதல்' என்னுந் துறையினால் அறியப்படும். இவ்வளவே புறப்பொருள் வெண்பாமாலையிற் பொதுவியற்பாலவாய் எடுத்துக்காட்டப்பட்ட செய்திகளாமென்க.

இச்செய்திகள் வெட்சிமுதற் பாடாணீறாகக் கூறப்படும் புறத்திணைகட்குப் பொதுமையுடையனவேயாம்; எனவே இவை வெட்சித்திணைக்கும் உரியனவாமாகலின், ஆசிரியர் தொல்காப்பியனார் இவற்றை அம்முதற்றிணைக்குத் துறையுரைக்கும் 'வெறியறிசிறப்பின் வெவ்வாய் வேலன்' என்னு நூற்பாவிலேயே தொகுத்துக் கூறுவாராயினர்.

　　　　　　　　　　　　*" உறுபகை
வேந்திடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்ப்
போந்தை வேம்பே ஆரென வரூஉம்
மாபெருந் தானையர் மலைந்த பூவும்"
　　　　　　　　　　　　" ஓடா
உடல்வேந் தடுக்கிய உன்ன நிலையும்"
"ஓடாக் கழனிலை"
"காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு சிறப்பிற் பெரும்படை வாழ்த்தலென்
றிருமூன்று வகையிற் கல்லொடு புணர"

என்று வரும் அந்நூற்பாவின் பகுதிகளில் வெண்பாமாலையாசிரியர் ஈண்டுப் பொதுவியற்பாலவென வகுத்துக்கூறிய போந்தை வேம்பு ஆர் என்னுஞ் சேர பாண்டிய சோழரின் அடையாளப்பூக்களும், உன்ன நிலையும், கழனிலையும், கற்காண்டல் கற்கோணிலை கன்னீர்ப்படுத்தல் கன்னடுதல் கன்முறை பழிச்சல் இற்கொண்டு புகுதலென்னும் நடுகற் செய்திகளும் முறையே கூறப்படுதல் கண்டுகொள்க.

---

*போந்தை - பனை. ஆர் - ஆத்தி.

இனி இவற்றுள் நடுகற்செய்திகளைப்பற்றிக் கூறும் பகுதியில் தொல்காப்பியனார் 'சீர்த்தகு சிறப்பிற் பெரு படை' யென்றது, 'நாட்டிய கல்லிற் குக் கோட்டஞ்செய்த' லாமெனவும், வெண்பாமாலையாசிரியர் உரைத்த 'இற் கொண்டு புகுதலென்னுந் துறை இதுவேயாமெனவும் ஆசிரியர் இளம்பூரணருரைத்தமை அறியற்பாலது. இன் னும் இப்பகுதியிற் 'கால்கோ'ளென்று கூறப்படுவது, ஆராய்ந்து கண்ட கல்லை வாளா கைக்கொள்ளுதலாமெனச் சிலரும், அற்றன்று ஆராய்ந்து கண்ட கல்லில் உருவெழு தத் தொடங்குதலாமென வேறு சிலருங் கருத்தெண்ணு கின்றனர். தொல்காப்பியனார் வாளா 'கால்கோ'ளென்ற தொடர்க்கு இளம்பூரணர் 'கற்கொள்ளுத'லென் றுரைத் தார். கால்கோ ளென்பதை அவர் உரைப்படுத்தும் போது கல்கோளெனக் கொண்டு, 'அவ்வாறு காணப் பட்ட கல்லைக் கைக்கோடல் என்றவாறு' என்று அதற்கு உரையுமியம்பியதனால் அவ்வுரையாசிரியர் கருத்துத் தெளி வாய்ப் புலப்படாநின்றது. நச்சினார்க்கினியர் அதனை உரு வெழுதற்கு அடிப்படைகோலுதலென உரை வகுத்தார். புறப்பொருள் வெண்பாமாலையாசிரியர் முன் கருத்தையே தழுவி 'விண்மேயாற்குக் கற்கொண்டன்று' என்பர்.

இனி இக்கால்கோட்செய்தி சிலப்பதிகாரக் கதையிற் றொடர்பு படுதலும் இங்கு நினைவுகூரற்பாலது. அக்காதை யின் உரையாசிரியன்மார் இருவருள்ளும் அடியார்க்கு நல்லார் முற்கருத்தினையும் அரும்பத உரையாசிரியர் பிற் கருத்தினையும் புலப்படுத்தி உரைகாட்டினார். அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரப் பதிகத்தில் வருங்'கால்கோள்' என் பதற்குக் 'கற்கொண்டகாதையும், கற்கோள் கால்கோளென விகாரம்'* என்று உரை கூறுதலும், அரும்பத உரையாசிரி யர் 'கால்கொள்கையாவது, கடவுள் வடிவெழுதத்தொடங்கு தல்'† என்றுரைத்தலும் உற்று நோக்குக. இனி இவ்வாறு பலரும் பலவாறுரைத்தனரேனும் கற்கொள்ளுங் காலத் திற் செய்யுஞ் சிறப்பினுங் கால்கொள்ளுங் காலத்துச்

---

* சிலப், பதிகம், அஅ. † சிலப், கால்கோட், உடு௬.

செய்தல் மேம்பட்டுத் தோன்றுதாகலின், ஈண்டுக் 'கால் கோள்' என வந்த தொடர்க்குக் கற்கொள்ளலென்னும் பொருளே பெரிதும் பொருந்துமென் றறிதல்வேண்டும். புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் இவ்வாறெல்லாம் பொதுவியற்பாலவென வகுத்துக் கூறிய துறைகளையெல் லாம் ஆசிரியர் தொல்காப்பியனார் 'வெறியறி சிறப்பின' என்னும் வெட்சித் திணைப் புறனடை நூற்பாவிலேயே விளக்கிக் காட்டினமை கண்டுகொள்க; மற்றிதன்கண் ஆசிரியர் கூறாது ஐயனாரிதனார் 'ஏழக நிலை'யென அத் துணைச் சிறவாததொன்று புதுவதாய்க் கூறினாரென்க.

## சிறப்பிற் பொதுவியற்பால :

இனிப் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் 'சிறப் பிற் பொதுவியற்பால'வெனவும், 'காஞ்சிப் பொதுவியற் பால'வெனவும் பொதுவியற்றிணைக் குரியவாக வகுத் துரைக்குந் துறைகள் அத்தனையும் ஆசிரியர் தொல்காப்பிய னார் தமது காஞ்சித்திணைப் பகுதிக்கண் வகுத்து நிறுத்திய துறைகளேயாகும். வெண்பாமாலையிற் சிறப்பிற் பொது வியற்பாலவாய் வந்த துறைகள், முதுபாலை, சுரநடை, தபுதாரநிலை, தாபதநிலை, தலைப்பெயனிலை, பூசன்மயக்கு, மாலைநிலை, மூதானந்தம், ஆனந்தம், ஆனந்தப்பையுள், கையறுநிலை யென்பனவாம்; தொல்காப்பியனார் காஞ்சித் திணையில் வகுத்த 'தனிமகள் புலம்பிய முதுபாலை'* யென் னும் முதுபாலைத் துறையினை ஐயனாரிதனார் தனிமகள் புலம்பிய முதுபாலையெனவுந், தனிமகன் புலம்பிய முதுபாலை யெனவும் இருவகைப்படுத்து முன்னதை ஆசிரியர் கூறிய வாறே 'முதுபாலை'யென நிறீஇப், பின்னதைச் 'சுரநடை' யென்று நிறுத்திட்டார். மேற் 'காதலி யிழந்த தபுதாரநிலை' 'காதலனிழந்த தாபதநிலை' 'தாய்தப வரூஉந் தலைப்பெய னிலை' 'மாய்ந்த பூசன் மயக்கம்' 'கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தம்' 'கழிந்தோர் தேஎத் தழிபட ருறீஇ யொழிந்தோர் புலம்

---

* தொல், புறத், கக.

பிய கையறு நிலை' யென்னுந் தொல்காப்பியக் காஞ்சித் திணைத் துறைகளை வெண்பாமாலையார் பொதுவியற்றிணையில் தபுதாரநிலை முதலியனவாக அப்படியே எடுத்துரைத்தார். ஆசிரியர் ஆண்டு 'நல்லோள் கணவனொடு நனியழற் புகீஇச் சொல்லிடை யிட்ட பாலைநிலை'யெனக் கூறிய பாலைநிலையினை ஈண்டு இவர் 'மாலைநிலை' யென்றார். தொல்காப்பியப் புறத்திணையியலுக்கு ஆசிரியர் இளம்பூரணர் எழுதிய உரைப்படியிற் 'பாலைநிலை'யென்னும் இத்தொடர் 'மாலைநிலை'யெனவே பாடவேறுபாடாக உள்ளதும் இங்கு நினைவுகூர்க. இதனைக் 'காஞ்சித்திணைக்' கட்டுரைக்கண்ணும் எடுத்துரைத்தாம். இனி ஆசிரியர் 'பேஎத்த மனைவி யாஞ்சி' யெனக் காஞ்சித்திணையினுரைத்த ஆஞ்சிக்காஞ்சியையே 'ஆனந்த' மெனவும், 'தாமே யேங்கிய 'தாங்கரும் பையு'ளென்பதனையே 'ஆனந்தப்பையு'ளெனவும் ஐயனாரிதனார் சிறிது சிறிது திரித்துரைத்தார். இவற்றை அவ்வவற்றின் பொருளொற்றுமைகளானுங் கண்டுகொள்க. புறப்பொருள் வெண்பாமாலையின் காஞ்சிப்படலத்தில் வரும் 'ஆஞ்சிக்காஞ்சி'* யென்னுந் துறை ஆசிரியருரைத்த ஆஞ்சிக்காஞ்சியினும் பொருளளவில் வேறுபட்டுத் தோன்றலின் அவ்விரண்டும் ஒன்றாகாது வேறுவேறுமென்றுணர்ந்துகொள்ளப்படும்.

## காஞ்சிப் பொதுவியற்பால:

மற்று இவ்வெண்பாமாலை யாசிரியர் 'காஞ்சிப் பொதுவியற்பால' வென்றுரைக்குந் துறைச் செய்திகள் வருமாறு: 'கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமையு' மென்று ஆசிரியர் உரைத்த முதுகாஞ்சியினை வெண்பா மாலையார் சான்றோர் அறம் பொருளின்பங்களைப் பிறர்க்குக் கூறும் 'முதுமொழிக் காஞ்சி' யெனவும், வாளா அறிவுரை கூறும் 'பொருண்மொழிக் காஞ்சி' யெனவும், வீட்டியலுரைக்கும் 'புலவரேத்தும் புத்தேணாடு' எனவும், நிலையாமை மொழியும் 'முதுகாஞ்சி' யெனவும் நான்கு துறைகளாகப் பிரித்

---

* புறப் - வெண், காஞ்சி, உஉ.

துரைத்தார். ஆசிரியர் 'மாற்றருங் கூற்றஞ் சாற்றிய பெருமை'யெனக் கொண்ட பெருங்காஞ்சியினையும், 'மலர்தலை யுலகத்து மரபுநன் கறியப் பலர்செலச் செல்லாக் காடு வாழ்த்து' என வகுத்த காடுவாழ்த்தினையும் ஐயனரிதனர் அப்படியே பெருங்காஞ்சி யெனவுங் காடுவாழ்த்தெனவுங் கூறிக்கொண்டார். இவ்வளவே இவர் காஞ்சிப் பொது வியற்பாலவெனக் கூறிய செய்திகளென்க.

இவ்வாற்றால், ஆசிரியர் தொல்காப்பியனர் காஞ்சித் திணைக்குரைத்த துறைகளையே எடுத்து வெண்பாமாலை யாசிரியர் தமது நூலுள் 'சிறப்பிற் பொதுவியற்பால' வெனவுங் 'காஞ்சிப் பொதுவியற்பால' வெனவும் பொது வியற் றிணைக் குரியவாக அடக்கி உரைகின்றாரென்பது நன்கு விளங்கும்; ஆசிரியர் நிலையாமைப் பொருட்டாய்க் காட்டிய காஞ்சி யொழுக்கத்தை இவர் படையெடுத்து வரும் மாற்றுவேந்தனுக்கு எதிர்சென் றூன்றும் ஒழுக்கமாகக் கருத்து மாற்றி யுரைத்துக்கொண்டமையின், அவ்வாசிரியர் பெருமானெடுத்துக்காட்டிய நிலையாமை யொழுக்கக் கருத்துக்களைப் 'பொதுவிய'லென வொன்று வகுத்து அதன்கண் அடக்குங் கட்டாயத்துக்கு வந்து இவ்வாறெல்லாம் இவர் இடர்ப்படுவாராயினரென்க. ஆசிரியருரைத்த காஞ்சித்திணைத் துறைகளில் 'மன்னைக்காஞ்சி' முதலான சிலவற்றை ஐயனரிதனர் தாங் கருத்து மாற்றி யுரைத்துக்கொண்ட 'காஞ்சிப்படலத்'திலும் இயைபின்றிப் புகுத்தினர். எனவே ஈண்டிவர் 'சிறப்பிற் பொதுவியற் பால' வெனவும், 'காஞ்சிப் பொதுவியற்பால' வெனவும் உரைக்குந் துறைக்கூறுகள் ஆசிரியர் தொல்காப்பியனர் வகுத்த 'காஞ்சித் திணைப்பால'வாய் உரைக்கற்பாலனவே யல்லால், இவர் கூறுமாப்போல் இவற்றைப் 'பொதுவியற் பால'வாய் உரைக்கற்பாலன வல்லவென் றுணர்ந்துகொள்க.

## முல்லைப் பொதுவியற்பால:

இங்ஙனமே இவ்வெண்பாமாலையார் 'முல்லைப் பொது வியற்பால'வென் றுரைக்குங் கருத்துக்களும் உண்மையிற் புறப்பொரு ளொழுக்கங்கட்குப் பொதுமையுடையன

வல்லவென்க. இவை யனைத்தும் ஆசிரியர் தொல்காப்பியனு ருரைக்கும் வாகையொழுக்கத்தின்கண் அடங்கற்பாலன வாம். தொல்காப்பியனார் வாகையென்றுரைத்த ஒழுக் கத்தை இவர் 'வாகை'யெனவும் 'முல்லை'யெனவும் இரு வகைப்படுத்து உரைத்தமையை மேல் வாகைத்திணைக் கட்டுரையிலேயே விளக்கியிருக்கின்றேம்; எனவே ஆசிரி யர் தொல்காப்பியனாரது வாகை யொழுக்கத்திலேயே அடங்கி யமையற்பாலதான முல்லையெனப்படும் இவ் வொழுக்கத்திற்கு வெண்பா மாலையார் தமது வாகைப் படலத்தில் வகுத்துக்கூறிய துறைகள் நீங்கலாக ஏனைய சிலவற்றை இப்பொதுவியற்படலத்திலும் முல்லைப் பொதுவியற்பாலவென வகுத்துரையாநின்றனர். அங் ஙனம் வகுத்துரைக்குங்கால் அகப்பொருண் முல்லையும் அவற்றின்கண் இடையிடையே விராஅய் வந்தது; பெரும் பான்மையும் இம்'முல்லைப் பொதுவியற்பால' வென்பதன் கண் வகுக்கப்படுந் துறைகள், தலைவன் வினைமேற் சென்று மீளுங் காலத்தில் இல்லிலிருந்து ஆற்றிக்கொண்டிருக்கும் அவன்றன் றலைவியி னியல்பு மிகுதிகளையே எடுத்துரைப் பனவாயிருக்கின்றன.

> "தடவரை மார்பன் றன்னமர் காதன்
> மடவரற் புணர்ந்த மகிழ்ச்சிநிலை யுரைத்தன்று."*

என்று ஐயனாரிதனார் அம்'முல்லை' யென்பதற்குக் கொளு வுரைத்து விளக்கங் கூறுதலினின்றும் இவ்வுண்மை நன்கு பெறப்படுதல் காண்க. மேகத்தினியல்பு மிகுதியைக் கூறுங் 'கார்முல்லை'யும், தலைவி தன் தலைவனது தேர்வரவை யுரைக்குந் 'தேர்முல்லை'யும், தலைவிக்கு இயல்பாயெழூஉம் நாண மிகுதியை விளக்கும் 'நாண் முல்லை'யும், அவள் இல்வாழ்க்கை மிகுதியை யுணர்த்தும் 'இல்லாண் முல்லை' யும், அவ்வாழ்க்கையை யாற்றுந் தலைவனை ஏர்ப்பகட்டுடன் உவமித்துப் புகழும் 'பகட்டுமுல்லை'யும், தலைவியின் சிறப் பினை விளம்பும் 'பான் முல்லை'யும், அவட்குள்ள இயல்பான

---

* புறப் - வெண், பொதுவியல். முல்லைப்பொது, க.

கற்பு மிகுதியை மொழியுங் 'கற்புமுல்லை'யுமென அவர் வகுத்துக்காட்டுந் துறைகளும் மேலுண்மையை நன்கு வலியுறுத்துவனவாய் நிற்றல் அறியற்பாலது ; ஆகவே ஆசிரியர் ஐயனாரிதனார் தமது வெண்பாமாலையில் 'முல்லைப் பொதுவியற்பால'வென உரைக்குந் துறைச் செய்திகளும் உண்மையிற் புறப்பொரு ளொழுக்கங்கட்குப் பொதுமை புடையன வல்லவாய் ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்துக் காட்டிய வாகையொழுக்கத்தின்கண் சிறப்பாய் அடங்கி யமைதல் நன்கறியப்படுகின்றதென்க.

## பொதுவியற் படலம் :

இனி இவ்வெண்பாமாலையாசிரியர் இவ்வாறெல்லாம் வகுத்துக் காட்டுதற்குரிய பொருட்சிறப்புகள் ஏதுமில்லா மல் வறிதே 'பொதுவியற் படல'மென ஒன்று ஈண்டு வகுத்தமை போலவே மேலும் 'ஒழி' பெனவும் வேறொன்று பகுத்து, மற்று அதன்கண்ணும் ஆசிரியர் குறித்துக் காட்டிய வாகைத்திணையின் பிரிவொன்றனையே விளக்கிக் காட்டினரென்க. ஆசிரியர் தொல்காப்பியனார் வாகைத்திணை யியல்புகளைத் தொகுத்துக் கூறிய 'அறு வகைப்பட்ட பார்ப்பனப் பக்கமு'*மென்னு நூற்பாவி னிறுதியில், அடங்காதனவற்றிற்கெல்லாம் 'அனைநிலை வகை' யென்று உரைத்து அவ்வாகைக்கு ஒரு பிரிவு கொள்வாராயினர். அதற்கு ஆசிரியர் இளம்பூரணர் " சொல்லான் வேறலும், பாட்டான் வேறலும், கூத்தான் வேறலும், சூதான் வேறலும், தகர்ப்போர் பூழ்ப்போர் என்பனவற்றால் வேறலும், பிறவும் அன்ன" வென்று உரை காட்டினார். ஆனால் ஆசிரியர் நச்சினார்க்கினியர் இவையனைத்தையும் பொருநர்க்குரிய மரபுகளாகவே உரைத்து இங்ஙனமே ஏனையோர்க்கும் ஆசிரியர் உரைத் தவை நீங்கலாக இவ் 'வனைநிலை வகை'ப்பட்டுப் பிறவும் வருமென்று உரை கூறினார். இவை 'வாகைத் திணைக்' கட்டுரையிலும் விளக்கப்பட்டிருக்கின்றன. இவ்வாறெல் லாம் வரும் ஆசிரியர் தொல்காப்பியனார்தம் வாகைத் திணை

---

* தொல், புறத், உo.

யின் பிரிவொன்றனையே வெண்பாமாலை யாசிரியர் " வாணிக வென்றி, உழவன்வென்றி, ஏறுகொள்வென்றி, கோழிவென்றி, தகர்வென்றி, யானைவென்றி, பூழ்வென்றி,* சிவல்வென்றி, கிளிவென்றி, பூவைவென்றி, குதிரை வென்றி, தேர்வென்றி, யாழ்வென்றி, சூதுவென்றி, ஆடல் வென்றி, பாடல்வென்றி, பிடிவென்றி" யென்று பலபட வகுத்து விரித்திருக்கின்றமை காண்க. இங்ஙனம் விரிக் குங்கால் ஆசிரியர் தொல்காப்பியனார் 'கொடுப்போரேத்திக் கொடார்ப் பழித்தலு'மென்று 'பாடாண்டிணை'யில் வகுத் துக் காட்டிய துறையொன்றனையும் இவர் தமது 'ஒழி'பி லெடுத்துக் கோத்துரைத்தார்.

என்றிதுகாறும் விளக்கிக் கூறியவற்றால், ஆசிரியர் ஐயனாரிதனார் தமது புறப்பொருள் வெண்பாமாலையின் பொதுவியற் படலத்திற் 'சிறப்பிற் பொதுவியற்பால' 'காஞ்சிப் பொதுவியற்பால'வென்றும், 'முல்லைப் பொது வியற்பால'வென்றும் வகுத்துக் காட்டிய துறைக்கருத்து கள் உண்மையிற் புறப்பொருளொழுக்கங்கட்குப் பொது மையுடையன வல்லவாய் ஆசிரியர் தொல்காப்பியனார் வகுத்துக் காட்டிய 'காஞ்சிப்பொரு'ளொழுக்கங்களிலும் 'வர்கைப்பொரு' ளொழுக்கங்களிலும் முறையே அமையு மென்பதும், அங்ஙனமே வெண்பா மாலையில் ஒழிபென்று காட்டிய புறனடைக் கருத்துக்கள் தொல்காப்பியத்துட் கூறிய வாகைத்திணைக்கண் 'அனை நிலை வகை' யெனப்படும் பிரிவில் அடங்கு மென்பதும், மற்று வெண்பாமாலை யாசிரி யர் தமது பொதுவியற் படலத்தின் முதற்கண் 'பொது வியற்பால' வென்றுரைத்த சில செய்திகள் மட்டுமே புறப் பொருளொழுக்கங்கட்குப் பொதுவாய் இயல்வனவா மென்பதும், அச்சிலவற்றையும் ஆசிரியர் தொல்காப்பிய னார் ஐயனாரிதனாரைப்போற் 'பொதுவிய'லென ஒன்று பகுத்துக்கூறாது, வெட்சித்திணையின் புறனடை நூற்பாவி லேயே தொகுத்துக் கூறினாரென்பதும் இனிது விளங்கா நிற்குமென்க.

---

* பூழ்-காடை.

## கக. கைக்கிளைத் திணை

[மங்கைப் பருவத்தை எய்தும் நிலையிலுள்ள பெண்ணொருத்தியின்பால் தலைமகனொருவன் அவள் வேட்கை கொள்ளாவிடத்தும் தனது காமக் குறிப்பைத் தானே வெளியிட்டுக்கொண்டு வறிதே இன்புறுதல்.]

கடிதிவளைக் காவார் விடுதல்; கொடியியல்
பல்கலைச் சில்பூங் கலிங்கத்தள் ஈங்கிதோர்
நல்கூர்ந்தார் செல்வ மகள்;
இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து.

(குறிஞ்சிக்கலி, உ0.)

'மின்னற்கொடியி னியல்பினையும் எண்கோவையாகிய மேகலையையும் சில பூத்தொழில்க ளமைந்த ஆடையினையும் உடையளாய், நல்கூர்ந்தார் தம் செல்வ மிக்க மகள் இவளொருத்தி இங்கே இருக்கின்றனள்; உரியவர்கள் இவளைக் காத்தல் செய்யாராய் இவ்வாறு புறத்தே விட்டு வைத்தல் கொடிது; இவளைத் தடுத்து உரையாடிப் பார்ப்பேன்' என்பது.

காவார் கலிங்கத்தள் என்பன, முற்றெச்சங்கள். 'காவாராய் விடுதல் கடிது' என்றமையின், அம்மகள் கண்டாரது உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகு வாய்ந்தவளென்பது பெறப்பட்டது. 'இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்'தென்பது, பாட்டிடை வைத்த பொருட்குறிப்பாகிய உரைவகை நடையென்க. என்னை? 'சொல்லாடிக் காண்பே' னென்பதனால் ஒரு மருங்கு பற்றிய கேண்மையாகிய கைக்கிளைப் பொருட்குறிப்புப் பெறப்படுதலினென்பது. இனையவெல்லாம் "பாட்டிடை வைத்த குறிப்பு"* என்பதனாற் கொள்க. தகைத்து,

* தொல், செய்யுள், கஎங.

தடுத்து. 'ஈங்கிதோர் செல்வமகள்; விடுதல் கடிது; இவளைத் தகைத்துச் சொல்லாடிக் காண்பேன்' என்று உரைக்க.

**திணைப்பொருள் :**

காமம் நிரம்பாத இளம்பருவத்துப் பெண்ணொருத்தியைத் தலைமகன் காதலித்து மருந்து பிறிதில்லாப் பெருந்துய ரெய்தி, அவளைப் புகழ்தலானும் பழித்தலானும் வேண்டுவன கூறியவதும் விடைபெறானாய், முடிவில் தான் விரும்பிய காம உரைகளைத் தனக்குத்தானே சொல்லி மகிழ்ந்துகொள்ளுதல் கைக்கிளை யொழுக்கமாமென நிறீஇ ஆசிரியர் தொல்காப்பியனார் அகத்திணையியலில்,

[1] "காமஞ் சாலா இளமை யோள்வயின்
ஏமஞ் சாலா இடும்பை யெய்தி
நன்மையுந் தீமையும் என்றிரு திறத்தாற்
றன்னொடு மவளொடுந் தருக்கிய புணர்த்துச்
சொல்லெதிர் பெறாஅன் சொல்லி யின்புறல்
புல்லித் தோன்றுங் கைக்கிளைக் குறிப்பே"*

என்றொரு நூற்பா யாத்தார். இதுவே மேற்காட்டிய கலித்தொகைப் பாட்டின் பொருளுமாம். எனவே, இவ்வொரு மருங்குபற்றிய கேண்மையால் விளையுஞ் செயல்களெல்லாம் கைக்கிளைத்திணையுள் அடங்குமென் றறிந்துகொள்க.

**வகை :**

தகைமைபொருந்திய ஆண்மகனொருவன் அழகிய பெண்மகளொருத்தியைக் கண்டு விரும்புதலும், பின்னர் அவன் இப்பெண் வானுலக மகளிருள் ஒருத்தியோ, அன்றி இம்மண்ணுலக மகளிருள் ஒருத்தியோ என்று ஐயுறுதலும், கடைசியிற் கண்ணிமைத்தல், பூமாலைவாடல் முதலிய ஏதுக்களால் அவள் மண்ணுலகத்துப் பெண்ணே

1. தருக்கிய – இயல்பு மிகுந்த கருத்துக்களை.
* தொல், அகத், ௫0.

யென்று துணிதலும், தலைவன் அவளைத் தனதுள்ளத்தே நினைந்து நினைந்து ஆற்றாமை கொள்ளுதலும், அப் பெண்ணின் பெற்றோரைப் பெருமையாக எண்ணிப் புகழ்தலும், அவள் அழகினைப் பாராட்டுதலும், புணர்ச்சி விரும்பித் தானே புகழ்தலும், அப்புணர்ச்சி நேராக்கால் தனது தனிமை கருதி இரங்குதலும், ஆற்றாமை மிகுதலின் அவளை வெளிப்பட இரத்தலுமான இச்செயல்களெல்லாங் காமவிருப்பம் நிரம்பாத தலைவிமாட்டு அவ்விருப்பம் பொருந்திய தலைமகனுக்கு நிகழுமாயின், அஞ்ஞான்று அவை ஆண்பாற்கூற்றுக் கைக்கிளைத்திணைத் துறைகளாகும். இங்ஙனமே காண்டலும், விரும்புதலும், உள்ளத்து நினைதலும், மெலிதலும், அம்மெலிவைக் கூறுதலும், மீண்டுங் காண்டற்கு நெஞ்சு வலித்தலும், பகற்பொழுதை வெறுத்து மொழிதலும், இராப்பொழுதை முனிந்து பழித்தலும், கனவிற் புலம்புதலும், நெஞ்சொடு கூறி மெலிந்து கொள்ளுதலு முதலான வெல்லாந் தன் விருப்பத்துக்கு இணங்கி வராத காலத்தில் தலைமகனை நோக்கித் தலைமகளுக்கு நிகழுமாயினும் அஞ்ஞான்றும் அவை பெண்பாற் கூற்றுக்களான கைக்கிளைத்திணைத் துறைகளேயாகும்; மேற்காட்டிய இத்துறைகளெல்லாம் புறப்பொருள் வெண்பா மாலையின் கைக்கிளைப் படலத்தில் முறையே கூறப்பட்டிருக்கின்றன.

இனித் தலைவனுந் தலைவியுந் தமக்குட் பண்டைவினை கடைகூட்ட ஒருவரை யொருவர் எதிர்ப்பட்டு இருவருள்ளமும் ஓருள்ளமாய்ப் புணர்ந்து இயற்கைப் புணர்ச்சி முதலான நடுவண் ஐந்திணை யொழுக்கங்களால் திருமணப் பெருவாழ்வில் அன்பும் இன்பமும் ஒருங்கே ஊற்றெடுக்க வைகினரேனும், அங்ஙனம் வைகிய பின்னர் ஏதாமொரு பொழுது தலைவிக்குக் காமவெழுச்சி தோன்றாக்கால் தலைவனும், தலைவனுக்கு அவ்வெழுச்சி முகிழாக்கால் தலைவியுமாக ஒருவரை யொருவர் விரும்புதலும், அவ் விருப்பத்தால் காண்டல் உள்ளல் முதலான செயல்கணிகழ்தலும், அவர் தமக்குள் ஏற்படுமாயின் அஞ்ஞான்

றும் அவை இக்கைக்கிளைத் திணையும் இத்திணையின் துறைவகைகளுமே யாகுமென்று துணிந்துகொள்க.

**சிறப்பு :**

எனினும், இவ்வெல்லா வகையான கைக்கிளை யொழுக்கங்களினும் ஆசிரியர் கூறியவாறு காமஞ்சாலா இளமையோள்வயின் காமஞ்சான்ற இளைஞனுக்கு நிகழுங் கைக்கிளை யொழுக்கமே சிறந்ததொன்றாம்; கைக்கிளைத் திணைக்கு உரிய சிறப்பான கருத்தெல்லாம் தலைவன் தலைவியரிருவருள்ளும் ஒருவர்பான்மட்டுங் காமக்குறிப்பு நிகழ்தலாம். காமக் குறிப்பு விரைவாய்த் தோன்றுதலும், உள்ளடங்காது வெளிப்படுதலுமெல்லாம் ஆண்மகனுக்கே உரியவாமென்பது கூறல்வேண்டா. பெண் மக்களுக்கு ஆண் மக்களைவிடக் காமக்குறிப்பு மிக்குத் தோன்றுமாயினும், அவர்தமக்கு அது விரைதலும் வெளிப்படுதலுமில்லை. எனவே தலைவன் தலைவியரிருவருள்ளும் தலைவியைக் கண்டு தலைவன் காமுறுமாறு வைத்து உரை கூறுதலே மக்களியற்கைகளை நனி பெரிதும் அளந்தாராய வல்லார்க்குச் சிறந்த செயலாம். தலைவன்மாட்டுக் கைக்கிளை யொழுக்கம் நிகழ்வதாயின், தலைவிமாட்டுக் காமக் குறிப்பு நிகழாதாகல் வேண்டும்; அங்ஙனம் நிகழாமைக்குக் காமஞ் சான்ற தலைவியினுங் காமஞ்சாலா விளைமையோளே சிறப்பின் உரியளாவள்; ஆகையாற்றான் முற்றுணர் வெய்திய முழுமுதற் கண்ணரான ஆசிரியர் தொல்காப்பியனார் காமக் குறிப்பு நிகழாத பெண்மகள்மாட்டு ஆண்மகன் காமுற்று நிற்குமாறு வைத்துச் சிறப்புத் தேற்றிக் கைக்கிளைத் திணைக்கு நூற்பா ஓதுவாராயினர்.

இனிக் 'காமஞ்சாலா விளமையோள்' என்று ஆசிரியராற் குறிக்கப்பட்டவள், மங்கைப்பருவ மடையுந் தகுதியையுடைய பெதும்பைப் பருவத்துப் பெண்ணவள். பெதும்பைப் பருவமென்பது மங்கைப் பருவத்துக்கு முன் பருவம். இப்பருவத்திற் காமக்குறிப்பு நிரம்புமாறில்லை; மங்கைப் பருவத்தின்கண்ணேயே காமவிருப்பம் நிரம்பா

நிற்கும்; எனவே பெதும்பைப் பருவத்துப் பெண்ணுக்குக் காமக்குறிப்பு உளதாயினும் அது முதிராமையின், அஞ்ஞான்று அவள் ஆடவரை விரும்பி நிற்கும் இயல்பினள் அல்லள். ஈதுணர்த்துதற்கே ஆசிரியர் 'காமஞ்சாலா' வெனவும், 'இளமையோ' னெனவுங் கிளந்தோதினரென்றுணர்ந்துகொள்க.

## கைக்கிளையும் ஐந்திணையும் :

இனி 'முன்னைய நான்கும் முன்னதற்கென்ப'* என்னும் நூற்பாவும், 'முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே'‡ யென்னு நூற்பாவும் இக்கைக்கிளைத் திணைத் தொடர்பாய்த் தொல்காப்பியத்துட் காணப்படுகின்றன வென்ப. இந்நூற்பாக்கள் தொல்காப்பியங் கற்பார்க்கு அதன் கருத்துரை தொடர்களில் ஒரு நெறிப்பட்டு நீரொழுக்கென ஒரே தொடர்பாய்ச் செல்லும் உணர்வினை முட்டுப்படுத்தித் தம்மாட்டு ஈர்த்து, ஆழ்ந்ததொரு நினைவாராய்ச்சியினை அவர்கட்கு விளைவியாநின்றன. இங்ஙனம் இடையிடையே வருவன தொல்காப்பியத்துள் வேறு சிலவும் உள. ஈண்டு 'முன்னைய நான்கு' மென்பதும், 'முன்னைய மூன்று' மென்பதுமே கற்பார்தம் உணர்வொழுக்குக்குத் தடை செய்வனவாம்.

ஆசிரியர் நச்சினார்க்கினியர் முன்னைய நான்கென்பன, 'இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழ்ந்த காட்சியும் ஐயமுந் தெரிதலுந் தேறலும் என்ற குறிப்பு நான்கா' மென்பர். தலைவன் றலைவியருள் ஒருவர் ஏனை யொருவரை நோக்கி அவருக்கு விருப்பம் நிகழாதவழி விரும்பி வருந்துதலே கைக்கிளையா மெனப்படுதலின், இயற்கைப் புணர்ச்சிக்கு முன் இருவரும் ஒருவரை யொருவர் ஒத்த விருப்பத்தாற் காண்டலும், ஐயுறுதலுந், தெரிதலுந், தேறலுமெல்லாம் ஐந்திணை யொழுக்கத்துட் படுவனவே யல்லாமற் கைக்கிளை யொழுக்கத்துட் சார்வன வல்லவாம். இது கருதியே நச்சினார்க்கினியர் தாங் கூறிய உரைக்கு ஓர்

---

* தொல், அகத், ருஉ.　　‡ தொல், களவியல், கச.

ஒப்புரையுங் கூறுகின்றனர். அஃது, 'இவை தலைவி வேட்கைக் குறிப்புத் தன்மேல் நிகழ்வதனைத் தலைவன் அறிதற்கு முன்னே, தன் காதன் மிகுதியாற் கூறுவன வாதலிற் கைக்கிளையாயிற்று' என்பது. இயற்கைப் புணர்ச்சிக்கு முன் காதலர் தமக்குட் காண்டலும் ஐயுறலுந் தெரிதலுந் தேறலுமெல்லாம் ஒத்த வேட்கையுடன் நிகழ்வனவே யல்லாமல், அவ்வேட்கை நீங்கி நிகழ்வனவல்ல. இதுவே அகனைந் திணையொழுக்கத்துக்குச் சிறந்த பொருளாகும்.

தலைவி வேட்கையைத் தலைவன் அறிதலும், தலைவன் வேட்கையைத் தலைவி அறிதலுங்கூட அக்காண்டல் தொட்டே அவர்தமக்குள் நிகழ்வனவாமெனக. காண்டலும், வேட்டலும், ஒருவர் வேட்கையை ஏனையொருவர் அறிதலும் எல்லாம் ஒரே நேரத்தில் இருவர்க்கும் நிகழுமென்பதே தெய்வப் புணர்ச்சி யென்பதற்கு அறிகுறியாம். நுணுக்கமான இவ்வுண்மை யியல்பினை,

[1] "அதுவே,
தானே அவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி இருவயி னொத்தல்"*

என்னும் இறையனா ரகப்பொரு ணூற்பாவும், அந்நூற்பாவுக்கு ஆசிரியர் நக்கீரனார் கருதரிய உரைவளங்கள் கெழுமத் தெளி பொரு ளுணர்த்தி விளங்க உரைக்கும் விரிந்த உரைப் பகுதியும் நன்கு தெளிவிக்கின்றன.

"தமியர் காண, தம்முணர்வினரன்றி எதிர்பட என்றவாறு; அஃதேயெனின், இவர் தம் முணர்வினரல்லராகின்றது காணு முன்னுபவோ, கண்ட பின்னுபவோ, காட்சியோ டுடனுபவோ? ** இவர் காட்சியானே தம் முணர்வின ரல்லரென்பது முடிக்கல் வேண்டும். எங்ஙனம் முடிக்குமா றெனின், காணு முன்னே தம்முணர்வின ரல்லராகற் றன்மை யுடையராதலி னென்பது. **

1. தமியர் – தனியராய்.
* இறைய, உ.

(வேட்கை) காட்சியோடு உடனே கிளரும்; என்னை? இருட்டகத்து விளக்குக் கொண்டு புக்கால் விளக்கு வாராத முன்னரும் இருள் நீங்காது; விளக்கு வந்த பின்னரும் இருள் நீங்காது; விளக்கு வருதலும் இருணீக்கமும் உடனே நிகழும். அதுபோலக் காட்சியும் ஞானவொழுக்கக் குணங்களது தன்மையழிவும் உடனே நிகழும். விளக்கினைக் காட்சியாகக் கொண்டு ஞானவொழுக்கங்களை இருளாகக் கொள்க. ** தமியராத லென்பது தம்முணர்வின ரல்லராதல். தம்முணர்வின ரல்லராத லென்பது என்னோவெனின், தலைமகற்கு அறிவு, நிறை, ஓர்ப்புக், கடைப்பிடி என்பன குணம். இந்நான்மையுந் தலைமகற்கு வேட்கையான் மீதூரப்பட்டுப் புனலான் மீதூரப் பட்ட புற்போலச் சாய்ந்து கிடப்பது. இனித் தலைமகட்கு நாண் மடம் அச்சம் பயிர்ப்பென்பன குணம். இந்நான்மையும் புனல் ஓடு வழியிற் புற்சாய்ந்தாற்போல வேட்கையான் மீதூரப்பட்டுச் சாய்ந்து கிடப்பது. ** வேட்கை யென்பது என்னோவெனின், ஒருவரொருவரை இன்றியமையாமை. அவ்வின்றி யமையாது நின்ற வேட்கை எல்லா உணர்வினையும் நீக்கித் தானேயாய் நாண்வழிக் காசுபோலவும் நீர்வழி மிதவை போலவும் பான்மை வழியோடி இருவ ருயிரையும் புணர்விக்கும் என்பது" என்று வரும் அவ்வாசிரியர் பெருமானுடைய உரைக் கூறுகள் இயற்கைப் புணர்ச்சியின் இயல்பினை எவ்வளவு நுணுக்கமாகவும், விளக்கமாகவும், உண்மை பிறழாமலும், இனிமையாகவும் விளக்கி நிறுத்துகின்றன வென்பது இங்குப் பெரிதும் உற்று நோக்கற் பாலதாகும்; இவ்வுரை விளக்கத்தால், தெய்வப் புணர்ச்சி பொருந்துங் காதலர் தமக்குள் காட்சி நிகழும் நேரத்திலேயே வேட்டலும் வேட்கை யறிதலும் உடன் நிகழு மென்பது சிறிதும் ஐயுறவின்றித் தெளிவாய்ப் புலப்படு கின்றதன்றோ? புலப்படவே, இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழுங் காட்சியும் ஐயமுந் தெரிதலுந் தேறலு மென்பன ஒருமருங்கு பற்றிய கேண்மையினவாகாமல், இருமருங்கும் பற்றிய கேண்மையினவேயாகு மென்பது

நன்கு பெறப்பட்டது. பெறப்படவே, அந்நான்குங் கைக்கிளை யிலக்கணத்தனவாதல் செல்லாமையோடு நடுவணைந்திணை இலக்கணத்தனவாதலும் இனிது வெளிப்பட்டதென்க.

அற்றன்று, "இது கைக்கிளை இலக்கணம், தெய்வங் கொல்லோ மகடூஉக் கொல்லோ என ஐயமுற்ற ஐய நிலையுந், தெய்வ இலக்கணந் தீண்டாவாகலின் ஐயந்தெளிந்து மகடூஉ வாதல் துவர உணர்ந்த அத்துணிவு நிலையுமெனக் கைக்கிளையிலக்கணமாகச் சொல்லப்பட்டமையின்" காட்சி முதலான நான்குங் கைக்கிளை யிலக்கணமாமென்று ஆசிரியர் நக்கீரனாரே மேற்காட்டிய இறையனாரகப்பொருளுரைப் பாவுரையில் எடுத்துக் காட்டினாராலெனின், நன்று; அவ்வெடுத்துக்காட்டுரை ஒரு சாரானை மறுத்துக் கூறிய உரையாம். தலைவன்றலைவியர் ஒருவரை யொருவர் முதலிற் கண்டு, அங்ஙனங் கண்ட பின்னர் ஐயுற்று, ஐயுற்ற பின் தெரிந்து, தெரிந்த பின் தேறித், தேறியபின் வேட்கை கொண்டு புணர்தலே இயற்கைப் புணர்ச்சியென்று ஒரு சாரார் கூறினர். அதற்கு நக்கீரனார் இயற்கைப் புணர்ச்சி யென்பது அஃதன்று; நீவிர் கூறிய காட்சியும், ஐயுறவும் முதலான நான்கும் வேட்கையோ டியையாமல் நிகழுகின்றமை தெரிதலின், அது கைக்கிளை யொழுக்கமாமென்றனர். இதுவே அவர் கருத்தாகுமாறு, "காட்சி யென்பது இருவருந் தம்முட் கண்ணுறுவது-ஐயம் என்பது கண்ணுற்ற பின் ஐயப்படுவது - இவ்வகை நினைந்தபின்னைத் தெளிவு வருமாறு - தெரிந்த பின்னைத் துணியுமென்பது— துணிந்த பின்னை இருவருக்கும் வேட்கைமிகத் தம்முட் கூடுவது; - இவ்வுரை பொருந்தாது. என்னை காரணமெனின், இது கைக்கிளை யிலக்கணம் - ஈங்கு அகத்திணையுள் அஃதுரைப்பது திணை மயக்கமாகலின் மேலதே பொருள்" என்று மேலெடுத்துக் காட்டிய உரைக்கூற்றோடு தொடர்ந்து கூறப்பட்டிருக்கும் இவ்வுரைப் பகுதியினால் இனிதுணரக் கிடக்கின்றமை கண்டுகொள்க. எனவே இயற்கைப் புணர்ச்சிக்கு முன் நிகழுங் காட்சியும், ஐயுறவும்,

முதலான நான்கும் வேட்கையோடு இயைந்தே தலைவன் றலைவியர்க்கு நிகழலின், அந்நான்கும் எவ்வாற்றானுங் கைக்கிளைத் திணையாகாமையும், இதனை நினைந்து பாராமல் நச்சினார்க்கினியர் முன்னைய நான்குமென்றவிடத்து அவற்றைக் 'கைக்கிளையாதற்கு உரிய'வென்று உரைத்தமை பொருந்தாமையும் அறியற் பாலனவாம்.

**நச்சினார்க்கினியரும் இளம்பூரணரும் :**

'முன்னைய நான்கு மென்புழி 'முன்னைய' வென்னுஞ் சொல் வந்திருத்தலின், இந்நூற்பாவுக்கு முன் நூற்பாக்களில் இதன் றொடர்பாகச் சில கருத்துக்கள் ஆசிரியராற் றொகுத்துக் கூறப்பட்டிருத்தல் வேண்டும். அங்ஙனமில்லாவழி 'முன்னைய நான்கு' மென்று ஆசிரியர் பின்னர்க் கூறார். எனவே இவ்வாறு முன் தொடர்பு ஒரு சிறிதுங் காட்டாமல், நச்சினார்க்கினியர் நான்கென்பன காட்சிமுதலான நான்காமென்று தூக்குக் தொகையாய் உரை கூறினமை பெரியதோர் இறும்பூதினையே விளைவியாநின்றது. ஆனால், இந்நூற்பாவுக்கு இவர்க்குமுன் உரைகூறிய இளம்பூரணர் தமக்குத் தோன்றியதோர் உரையினைத் தொடர்பு காட்டி எழுதினார். அம்மட்டில் அவர் ஒரு தொடர்பு தேற்றி உரை கூறினமையே மேலாய் நின்றது. தொல்காப்பியத்திற் கைக்கிளை யிலக்கணங் கூறுங் 'காமஞ்சாலா விளமையோள்வயின்' என்னும் நூற்பாவுக்குப்பின் பெருந்திணை யிலக்கணங் கூறும்.

> [1]"ஏறிய மடற்றிறம் இளமை தீர்திறம்
> தேறுத லொழிந்த காமத்து மிகுதிறம்
> மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
> செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே"*

என்னும் நூற்பா கூறப்பட்டது. மற்றதன் பின்னரே 'முன்னைய நான்கு முன்னதற் கென்ப' வென்னு நூற்பா

---

[1] மிடல்- ஈண்டு வற்புறுத்துதல்.

* தொல், அகத், ருக.

காணப்படுகின்றது. எனவே இதற்குத் தொடர்புகாட்டி யுரைத்தல். கருதிய ஆசிரியர் இளம்பூரணர் முன்னைய நான்கு மென்றதை 'முந்துற்ற நிலைமை நான்கு'மென்று பொருள்கொண்டார். கொண்டு "அவையாவன: ஏறுத மடற்றிறம், இளமை தீராத் திறம், தேறுதலொழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறுகாத் திறம் என்பன" ** "ஏறு மடற்றிறம், வெளிப்பட இரத்த லாம்; இளமை தீராத்திறம், நலம் பாராட்டலாம்; தேறு தலொழிந்த காமத்து மிகாத்திறம், புணரா விரக்கமாம். மிக்க காமத்தின் மாறுகாத் திறம், நயப்புற்று இரங்கலாம்" என்று உரைகூறினர். இதுவும் பொருந்துவதன்று, என்னை? இவர் காட்டும் வெளிப்பட விரத்தலும், நலம்பா ராட்டலும், புணராவிரக்கமும், நயப்புற்று இரங்கலுமென் பன, ஒரு மருங்குபற்றிய கேண்மையினலேயே யன்றி இருவயினொத்த காதலினாலும் நிகழாநிற்குமாகலி னென்பது.

தொல்காப்பிய அகத்திணையியல் புறத்திணை யியல்க ளுக்கு ஆசிரியர் இளம்பூரணர், இயைபுள்ள இடங்களி லெல்லாம் புறப்பொருள் வெண்பாமாலை யாசிரியர் கருத் தைத் தழுவியே பெரும்பான்மையும் உரையெழுதி யிருக் கின்றாரென்பது, அவருரையை முதலிலிருந்து ஈறுவரை ஒருமுறை தொடர்பாக உற்று நோக்குவாரெல்லார்க்கும் இனிது விளங்காநிற்கும். எனவே அப்புறப்பொருள் வெண்பாமாலையின் கைக்கிளைப் படலத்திற் குறித்துக் காட்டிய வெளிப்பட இரத்தல், நலம்பாராட்டல், புணரா விரக்கம், நயப்புற்று இரங்கலென்னு நான்கையும் ஈண்டுத் தமதுரையகத்தே எடுத்துக் காட்டுங் கருத்தும் இதற்குத் தொடர்பு காணுங்கால் ஆசிரியர் இளம்பூரணனர்க்கு நிகழ்ந்திருத்தல் வேண்டுமென் றுணரலாகும்.

அங்ஙனமாயின், மற்று 'முன்னைய நான்கு' மென்று கூறப்பட்டதன் உண்மைப் பொருள்கள்தாம் யாவையோ வெனின், இந்நூற்பா கூறப்பட்ட விடத்தே ஏதும் முன் பின் தொடர்புகள் காணப்படாமையின், இஃது ஆண்டு

நிற்றற் குரியதாகுமோ வென்று எமக்கு அந் நூற்பாவின் கண் பெரிதும் ஐயம் நிகழாநிற்கின்றது.

இங்ஙனமே இக்கைக்கிளை இலக்கணங் கூறுவதாகக் 'களவியற்'கண் வரும் 'முன்னைய மூன்றுங் கைக்கிளைக் குறிப்பே' யென்னு நூற்பாவும் ஆண்டு ஒரு சிறிதும் முன் பின் இயைபின்றி இடையே காணப்படுகின்றது; மேலும் அதற்கு நச்சினார்க்கினியர் 'முன்னின்ற அசுரமும் இராக்கதமும் பைசாசமுங் கைக்கிளை யென்றற்குச் சிறந்திலவேனுங் கைக்கிளையெனச் சுட்டப்படு' மெனக் கூறும் உரையுந் திணையளவு முன்பின் றொடர்பில்லாமையோடு ஆசிரியர் வரம்பறுத்து நிறுத்தும் பொருளதிகார வொழுக்கத்திற் குப் பெரிதும் மாறாகவும் நிற்கின்றது. எனவே அஃதும் ஆண்டு நிற்றற்குரிய தாகுமோ வென்று எமக்கு அந்நூற் பாவின்கண்ணும் ஐயம் பிறவாநிற்கின்றது.

அகப்புறமும் அகம் :

இனி இக்கைக்கிளைத் திணையை வெண்பாமாலையார் புறப்பொருட்கண் இயைத்துத் தமது புறப்பொருள் வெண்பாமாலையிற் கூறினமையும் ஆராயற்பாலது. ஆசிரியர் தொல்காப்பியனார் இத்திணையை அகத்திணையோடு இயைத்தே,

> "கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
> முற்படக் கிளந்த எழுதிணை யென்ப"*

என்று நூற்பா ஓதினார்; எனினும் அவர் இவ்வெழு திணைகளுள்ளும் நடுவணைந்திணையை மட்டுஞ் சிறப்பாக எடுத்து முன்னர் விளக்கி, இக்கைக்கிளைத் திணையையும் ஏனைப் பெருந்திணையையும் அகப்பொருட்குச் சிறப்பாக எடாமற் பின்னர்ச் சுருக்கமாய் விளக்கி அதனோடு அகத் திணையியலை முடித்திட்டார். இதனாலேயே நடுவணைந் திணைமட்டுமே அகத்திணை யெனப்படுதற்குச் சிறப்பி னுரியதென்பது நன்கு விளங்கும்.

---

* தொல், அகத், க.

இதனாற்றான் ஆசிரியர் தெய்வப்புலமை நக்கீரனாரும் நடுவணைந்திணையை மட்டுமே 'அகத்திணை' யென்று சிறப்பித்தற்கு விழைந்து ஏனைக் கைக்கிளை பெருந்திணைகளை அப்பெயராற் கூற ஒருப்பட்டிலர். இவ்வுண்மை 'ஈங்கு அகத்திணையுள் (நடுவணைந்திணையுள்) அஃதுரைப்பது (கைக்கிளையையுரைப்பது) திணைமயக்க மாகலின் மேலதே பொருள்' என்று மேலெடுத்துக் காட்டப்பட்ட அவாது உரையினால் இனிது பெறப்படுகின்றமை காண்க. மேலும் ஆசிரியர் நச்சினார்க்கினியர் "ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியுங் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம் அக் கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவர்க்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாத தாய், யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்து இன்பமுறுவ தோர் பொருளாதலின் அதனை 'அகம்' என்றார்".* என்று அகப்பொருளினியல்பினை இனிது விளக்கிக் கூறுத லின், ஆசிரியர் தொல்காப்பியனாராலேயே அங்ஙனம் உள் ளத்துணர்வாயன்றிச் 'சொல்லி இன்புறல்' என்று கூறப் படும் கைக்கிளைத்திணை அகப்பொருட்குச் சிறவாமை நன்கு வெளிப்படும்.

அற்றாயின், அதனைப் புறத்திணையெனக் கூறலாமோ வெனின், அதுவு மாகாது. என்னை? நச்சினார்க்கினியர் "ஒத்த அன்புடையார் தாமேயன்றி எல்லார்க்குந் துய்த் துணரப்படுதலானும், அவை இவ்வாறிருந்ததெனப் பிறர்க் குக் கூறப்படுதலானும்...'புற'மெனவே படும்" என்று புறப்பொருளினியல்பினை விரித்து விளக்குதலின், அங் ஙனம் எல்லாரானுந் துய்த்துணர்தலும் தானே சொல்லி யின்புறுதலன்றிப் பிறர்க்குக் கூறியின்புறுதலும் அமை யாத இக்கைக்கிளைத்திணை புறப்பொருளெனவும் படாது. இவ்வாறு இது பெரும்பான்மையும் அகத்திணையுட் பொ ருந்திச் சிறுபான்மை புறத்திணையியல்பும் வாய்ந்து நிற்பத னாற்றான் இதனை அகப்புறத் திணையெனக் கூறல் கருதி நம்பியகப்பொரு ளுடையார்,

* தொல், அகத், க.

" காமஞ் சாலா இளமை யோள்வயின்
குறிப்பறி வுறாது குறுகியாங் கவளோடு
இறப்பக் கூறுவ தூசப்புறக் கைக்கிளை " *

யென்றொரு நூற்பா இயற்றினர். வெண்பாமாலையார் இக் கைக்கிளை யொழுக்கம் புறப்பொருளோடு சிறிதாயினுந் தொடர்பிருத்தல் கண்டு தமது புறப்பொருள் வெண்பா மாலையிலியைத்துக் கொண்டார். ஆயினும், புறப் புறம் புறத்திலடங்குமாறுபோல் அகப்புறம் அகத்திலேயே அடங்கி அகமெனப்படுதலே முறையாகுமாகலின், ஆசிரியர் தோல்காப்பியனார் அதனை அகத்திணைகளோடு இயைத்து அகத்திணையியலில் நிறுத்துரைத்தாரென் றறிந்துகொள்க.

---

# கஉ. பெருந் திணை

['காமக்காமம்' என்னும் மீறிய காம நிகழ்ச்சிகளை நிகழ்த்துதல்]

ஆசிரியர் தோல்காப்பியனார் பெருந்திணை வகைமையை விளக்குமிடத்து,

" ஏறிய மடற்றிற மிளமை தீர்திறந்
தேறுத லொழிந்த காமத்து மிகுதிற
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே." ‡

என்றொரு நூற்பாக் கூறுவர்: இதன்கண் தலைவன் தான் விரும்பிய தலைமகளைப் பெறமாட்டாவிடத்து மடலேறுதலும், தலைவன் றலைவிய ரிருவருந் தமது இளமை நீங்கிய பின்னுங் காம நுகர்தலும், தெளிதலியலாதபடி மிக்கு நிற்குங் காம உணர்ச்சியுடையராய் அவ்வுணர்ச்சிக்கேற்ற செயனிகழ்த்தலும், அவ்வகை மிகுந்த காமத்தால் எதிர்ப்

---

* நம்பியகப், ஒழிபு, ௩௨.　　‡ தொல், அகத், ருக.

பட்டாரை வலிதிலகப்படுத்தலுமெனச் சொல்லப்பட்ட நான்கு வகை யொழுக்கங்களும் பெருந்திணையாமென்பது கூறப்படுகின்றது ; இந்நூற்பாவுக்கு இளம்பூரணர் உரைத்த உரையினும், நச்சினார்க்கினியருரைத்த உரைக் கருத்தே பொருத்தமா யிருக்கின்றது ; 'பெருந்திணை' யென்பது அளவுக்கு மேற்பட்ட ஒழுக்கமாகும்; அதாவது ஓரளவான காமத்தால் நிகழுஞ் செயல்களல்லாமல், அளவு மீறிய காமத்தால் நிகழுஞ் செயல்களை யுடையதாகும். இவற்றையே தொல்காப்பியர் மேற் காட்டியவாறு நான்கு வகைப்படுத்து ஓதுவாராயினர்.

**விளக்கம் :**

அவற்றுள் 'ஏறிய மடற்திற' மென்பது, தலைவனொருவன் தான் காதலித்த மணமகள் அவள்தன் சுற்றத்தாரது அறியாமையால் தனக்குக் கிட்டாளானவிடத்து, மடல் ஏறித் தனது உறுதியைப் பிறர்க்குப் புலனும்படி செய்து அவ்வாற்றால் அவளைப் பெறுதலாம் ; இதனியல்பினை 'மடற்திறம்' என்னும் எமது அகப்பொருட் கட்டுரையில் நன்கு விளக்கியிருக்கின்றேம் ; 'மடல் ஏறுவேன்' என்று தலைவன் சொல்லளவாகக் கூறுதல் கைக்கிளையாமெனவும், செயலளவாக மடல் ஏறுதலென்பது பெருந்திணையாமெனவும் ஆசிரியன்மார் கருதுகின்றனர். 'மடல் ஏறுதலை' அங்ஙனம் பெருந்திணையொழுக்கமெனக் கருதுதற்குரிய ஏது, அது மிக்க காமத்தால் நிகழுகின்றமையே யாகு மென்ப.

இனி 'இளமை தீர்திறம்' எனப்பட்டதும் அதுவாம்; இது தலைவன் தன் தலைவியின் இளமைப்பருவத்திற்கு ஏற்றவனாகாமல், அவ்விளமை கடந்து மிக மூத்தோனாயிருத்தலெனவும், தலைவி தன் தலைவனுக்கு முறைப்படி நான்காண்டுகள் இளையளாகாமல் அவ்விளமை நீங்கி அவனோடு ஒத்த பருவத்தளாயிருத்தலும் அன்றி அவனினும் மூத்த பருவத்தளாயிருத்தலுமெனவும், தலைவன் றலைவியரிருவருமே காம நுகர்தற்குரிய இளமைப்பருவங் கடந்து மூப்புடையராயும் இளமையுடையார்போலக் காமநுகர்ச்சி யுடையராயிருத்தலெனவும் மூன்று வகையாகக் கூறப்படுகின்றது ;

இன்னோரன்னவம் மீறிய காமத்தால் நிகழ்வனவெனப் பட்டுப் பெருந்திணையுட் படுமென்ப.

இனிக் 'தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் என்பது தெளிதலியலாதபடி ஒருவற்கு மிகுந்துவிட்ட காம மிகுதிப்பாட்டால் அவன்பால் நிகழும் நாணமுதலி யன அற்ற இழிசெயல்களாம். எனவே இதுவும் பெருந் திணை யெனவே கொள்ளப்பட்டது.

இனி 'மிக்க காமத்து மிடல்' என்பதும் ஒன்று. அதாவது அங்ஙனமொருவற்கு மிகுந்துவிட்ட அக்காம மிகுதிப்பாட்டால், அவன் அக்காம உணர்ச்சி எழாதாளை யும், விரும்பாதாளையும், அவ்வுணர்ச்சியைத் தன் மாட்டுத் துய்க்க இசையாதாளையும் வற்புறுத்தி மெய்யுறச் செய்த லாம்; ஆகையால் இதனையும் ஆசிரியன்மார் பெருந்திணை யென்றனர்.

இவ்வாறு காட்டப்பட்ட இந்நால்வகைப் பெருந் திணைகளுள்ளும் 'ஏறிய மடற்றிற'மென்பது ஆண்பா லார்க்கே உரித்தென்பதும், ஏனைய ஆண்பெண்பாலிரு பாலார்க்குமே உரியவென்பதும் அறியற்பாலன.

**காமமும் காதலும்:**

இனி ஆசிரியர் தொல்காப்பியர் தாம் விளக்குதற்கு எடுத்துக்கொண்ட அகத்திணை யொழுக்கத்தைக் கைக் கிளைமுதலாப் பெருந்திணை யிறுவாயாக எழுவகைப் படுத்து, முதல் நின்ற கைக்கிளையையும் இறுதியில் நின்ற பெருந்திணையையும் நீக்கி ஏனை முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் பாலையென்னும் நடுவணைந்திணைகளை மட்டும் அக வொழுக்கத்துக்குச் சிறப்பாயெடுத்து,

"இன்பமும் பொருளும் அறனுமென் றாங்கு
அன்பொடு புணர்ந்த ஐந்திணை"*

யெனக் காதலொடு புணர்த்துத் தழுவி விளக்கினமையின் அவ்வைந்திணை யொழுக்கம் மட்டுமே காதலொழுக்க

* தொல், களவு, க.

மெனப்படு மென்பதும், ஏனைக் கைக்கிளை பெருந்திணை யென்பன அங்ஙனங் காதலுணர்ச்சியானன்றி ஒருதலைக் காமத்தானுங் கொடும்பெருங் காமத்தானும் நிகழுதல் தெரிதலின் அவைதாம் வெறுங் 'காமவொழுக்க' மெனவேபடுமென்பதும் இனிது பெறுதுமென்க. ஆகவே மக்கட்கு இயற்கையே நிகழும் ஆண் பெண் வேட்கை 'காதற்காம' மெனவும், 'காமக்காம' மெனவும் இரு வகைப்படுமென்பது இவ்வாற்றால் நன்கு புலனாகின்றது.

## காமக் காமமும் காதற் காமமும் :

'காமக்காம' மென்பது அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடியென்னும் ஆண்டன்மைகளையும் நாணம் மடம் அச்சம் பயிர்ப்பு என்னும் பெண்டன்மைகளையும் அடியோடு கெடுத்து மக்களை இருளிற் செறிப்பதாகும்; 'காதற்காம' மென்பது அவ்வறிவு முதலான ஆண்டன்மைகளையும் நாண் முதலான பெண்டன்மைகளையும் அங்ஙனம் அடியோடு கெடுத்துவிடாமல், அவற்றைத் தன்வழியீர்த்து நிகழச்செய்து அவ்வாற்றால் மக்களை ஒளியிற் செறிப்பதாகும்.

இவ்வகைப்படூஉம் இவ்விருவகைக் காமங்களுள்ளும், காதற் காமமென்பது படைப்புக் காலந் தொட்டு ஈறு வரையிற் பிறவிகடோறும் உயிர்களைத் தொடர்ந்து வரும் நுண்ணுடம்பினைப் போல், முதலிலிருந்து ஈறு வரையும் ஒவ்வொரு பிறவியிலும் பருவுடம்பு அவ்வப் போது அழிந்துங்கூடத் தான் அழியாமல் தொடர்ந்து பிணித்துச் செல்வதாகும்; ஆனாற் 'காமக் காமமோ' வெனின், அங்ஙனம் உயிர்களைப் பிணித்துத் தொடர்ந்து செல்வதன்றாய்ப் பருவுடம்பு அழியுங்காலெல்லாம் உடனழிந்து போவதாகும்; ஆகையாற்றான் நடுவணைந்திணை யென்னுங் காதற்காமம் ஆசிரியரால் மிகச் சிறந்ததாக எடுத்து விளக்கப்படாநின்றதூஉ மென்பது.

ஆயினும், நடுவணைந்திணைக் காதலும் கைக்கிளை பெருந்திணைக் காமமும் ஒவ்வோருயிர்க்கும் உள்ளன.

நடுவணைந்திணைக் காதலொழுக்கத்துள்ளுங் கைக்கிளை பெருந்திணைக் காம வொழுக்கங்கள் கட்டாயம் நிகழ்ந்தே வரும்; இதனைக் 'கைக்கிளைத்திணை'க் கட்டுரையினுங் குறித்தாம். ஆயினும் அவை அவ்வைந்திணைக் காதலை மீறாமல் அதன் வழியே ஒத்து அக்காதல ரிருவருள் எவரும் எஞ்ஞான்றும் இழிவெனக் கருதுதற் கில்லாத வாறு அடக்கமாய் நிகழாநிற்கும்; அங்ஙன மன்றி அவை மீறுங்கால் ஐந்திணை யொழுக்கத்தைக் கெடுத்துத் தாம் மட்டுமே விளங்கி அம்மக்களுணர்ச்சியைக் கதுவி அதனைத் தம் வண்ணமாக்கிக் கைக்கிளை பெருந்திணைகளாய் மாறுமென்பது. எனவே ஆசிரியர் இக்கைக்கிளை பெருந்திணை யொழுக்கங்களையும் அகத்திணையிலடக்கி உரைகிளந்ததன் உண்மை இங்குப் பொருத்தமாய்க் காணப்படுகின்றமை கண்டுகொள்க.

அகத்திணை யுண்மைகள் இவ்வாறிருப்பவும் இந்நுணுக்கம் அறியாதார் சிலர் நடுவணைந்திணை யொழுக்கம் நிகழப் பெறுவார் மாட்டுக் கைக்கிளை பெருந்திணை யொழுக்கங்கள் நிகழாவெனவும் அவைதாம் நிகழப் பெறுவார்பால் ஐந்திணை யொழுக்கம் நிகழாதெனவுந் தமக்குத் தோன்றியவாறே கருதினர்; அங்ஙனங் கருதியதூஉமன்றி, கைக்கிளை பெருந்திணை யொழுக்கங்கள் பொருந்தா வொழுக்கங்களாகக் காணப்படுதலின், அவைதம்மை எடுத்துக் கூறுந் தொல்காப்பியச் சான்று கொண்டே அவ்வொழுக்கங்களும் அவ்வொழுக்கங்களின் விளைவாகப் புறம்படும் பலப்பல பொருந்தாச் செயல்களும் பழக்க வழக்கங்களு மெல்லாம் தமிழ் மக்கள்பாற் பண்டு தொட்டே நிகழ்ந்து வந்திருக்கின்றன வென்பதும் அவ்வாற்றால் ஆசிரியர் தொல்காப்பியனார் முதலாகத் தமிழ் மக்கள் சில வகைகளில் நாகரிக மில்லாதவர்களாய்க் காணப்படுகின்றன ரென்பதும் பெறப்படுமெனவுங் கூறாநின்றனர். தொல்காப்பியனார் தமிழ் மக்கட்கு மட்டுமே யன்றி உலகத்தில் அனைத்து மக்கட்குமே பொதுவில் நிகழும் அகத்திணை யுண்மைகளைக் கருதிப் பார்த்துக் கூர்ந்

தாராய்ந்து தாங் கண்ட இயற்கை யுண்மைகளை மேற் காட்டியவாறு திறந்தோன்றப் பகுத்து விளக்கித் தம் மொழி மக்கள் நன்கு வாழல் வேண்டுமெனக் கருதி நூல் யாத்தாரெனக் கண்டனராயின், அவர் அங்ஙனமெல்லாங் கூறுர்.

நடுவணைந்திணை யொழுக்கத்தின் வழி அடக்கமாய் நிகழுங் காம வொழுக்கமே அளவு மீறுங்கால் கைக்கிளை பெருந்திணைகளாய்க் கருதப்படுமென்னும் இவ்வுண்மை புறப்பொருள் வெண்பா மாலையிலும் அதன் ஆசிரியர் ஐயனரிதனர் அவ்விரண்டு திணைகட்குந் துறைகள் வகுத்துரைக்கு மாற்ருனும் நன்கு தெளியப்படும்; கைக்கிளைத் திணைத் துறைகளைப்பற்றி அத்திணைக் கட்டுரையிலேயே காட்டி யிருக்கின்றேம். எனவே இங்குப் பெருந்திணை யொழுக்கத்துக்குக் காட்டப்பட்டுள்ள துறைகளைப் பற்றிக் காண்பாம்.

## துறையுறுப்புக்கள் :

ஐயனரிதனர் இப்பெருந்திணை இலக்கணத்தினைப் 'பெண்பாற் கூற்' றெனவும் 'இருபாற் பெருந்திணை' யெனவும் பிரித்து, அவற்றுள் பெண்பாற் கூற்றென்னும் பகுதியில் 'வேட்கை முந்துறுத்தல்' 'பின்னிலை முயறல்' 'பிரிவிடை யாற்றல்' 'வரவு எதிர்ந்திருத்தல்' 'வாராமைக்கு அழிதல்' 'இரவுத் தலைச் சேறல்' 'இல்லவை நகுதல்' 'புலவியுட் புலம்பல்' 'பொழுதுகண் டிரங்கல்' 'பரத்தையை ஏசல்' 'கண்டு கண் சிவத்தல்' 'காதலிற் களித்தல்' 'கொண்டு அகம்புகுதல்' 'கூட்டத்துக் குழைதல்' 'ஊடலுள் நெகிழ்தல்' 'உரை கேட்டு நயத்தல்' 'பாடகச் சீறடி பணிந்தபின் இரங்கல்' 'பள்ளி மிசைத் தொடர்தல்' 'செல்க என விடுத்தல்' என்னும் பத்தொன்பது துறைகளையும், இருபாற் பெருந்திணை யென்னும் பகுதியிற் 'செலவழுங்கல்' 'மடலூர்தல்' 'தூதிடையாடல்' 'துயர் அவற்கு உரைத்தல்' 'கண்டு கைசோர்தல்' 'பருவம் மயங்கல்' 'மிக்க காமத்தாற் பேசும் ஆண்பாற் கிளவி' 'பெண்பாற் கிளவி' 'வெறி

யாட்டு' 'பாண்வரவு உரைத்தல்' 'பரத்தை கூறல்' 'விறலி கேட்பத் தோழி கூறல்' 'விறலி தோழிக்கு விளம்பல்' 'பரத்தை வாயில் பாங்கி கண்டுரைத்தல்' 'பிறர் மனைத் துயின்றமை விறலி கூறல்' 'தலைவியை விட்டு நீங்குதல்' 'பொல்லாதெனக் கூறல் கருதித் தலைவன் நீங்குங்கால் அங்ஙனம் அவன் நீங்கிப் பெற விழைந்த குறுகிய புகழைப் பழித்துக் கூறுதலான குற்றிசை' 'அவனது குறுகிய விருப்பங் கெடும்படி சொல்லுதலான குறுங்கலி' எனப் பதினேழு துறைகளையுங் கூறுகின்றார். இத்துறைகளெல்லாம் பெரும்பான்மையும் நடுவணைந்திணை யொழுக்கத்தின்கண்ணும் வருவனவேயாகு மென்பது நன்கு தெரிந்ததொன்று. ஆதலால், அவ்வைந்திணை வழியாய் நிகழும் இத்துறை நிகழ்ச்சிகளெல்லாம் அளவு மீறுங்காற் பெருந்திணைத்துறை நிகழ்ச்சிகளாய்க் கூறப்படு மென ஐயனாரிதனார் கருதிய கருத்துச் செவ்வையாய்ப் புலனாகின்றது; ஆசிரியர் தொல்காப்பியனார் கருத்தை வெண்பாமாலை யாசிரியர் இத்துணை நுட்பமாய் நுணுகி யுணர்ந்து துறை விளக்கங் கூறினமை பெரிதும் வியப் பினை விளைவியாநின்றது.

இதுகாறுங் கூறியவாற்றால், நந் தெய்வப் பெற்றி வாய்ந்த ஆசிரியர் தொல்காப்பியனார் அனைத்துயிர்கட்கும் நிகழும் அகவொழுக்கங் காதலாமாறுங் காமமாமாறுங் கண்டுணர்ந்து அவற்றை எழுவகைப் படுத்து, அவற்றுட் காதலாமாறு நடுவணைந்திணை யுணர்ச்சி யெனவுங் காமமா மாறு ஏனைக் கைக்கிளை பெருந்திணை யுணர்ச்சிக ளெனவுங் கூறி, அவைதம்மில் நடுவணைந்திணைக் காதலே சிறந்த தெனவும் ஏனைக் கைக்கிளை பெருந்திணைக் காமங்கள் அதன்வழி யடங்கி நிகழற்பாலன வெனவும் விளக்கி, நடுவணைந்திணையைப் பாராட்டாக் குறையினால் அங்ஙன மவை அதன்கண் அடங்காது மீறுங்கால் அவை கைக்கிளை பெருந்திணைகளென்னும் பெயரியவாய்ப் பொருந்தா ஒழுக்கங்களென்றும் ஓராற்றாற் புறமெனக் கருதப்படு மென்றும் தெளிவித்தா ரென்பது இனிது பெறப்படும்.

---

